www.digicinema.net

# Digi சினிமா

the perfect entertainer

தமிழில் முதல் முழு வண்ண சினிமா இதழ்

(மாதம் இருமுறை)

ஜீன் 1-15, 2002

ரூ.10/-

அனைத்து
குடும்பத்தினரும்
விரும்பி படிக்கும்
ஒரே சினிமா இதழ்
(All 52 pages in colour)





# ரியலி கிரேட்!

Really Great

ஆயிஷா தர்கர் என்று சொன்னால் தெரிகிறதோ இல்லையோ, உலகப்படவிழாக்களில் கலக்கிய, சந்தோஷ்சிவனின் 'டெரரிஸ்ட்' பட நாயகி என்றால், மனிதவெடிகுண்டு 'மல்லி'யாக வாழ்ந்து நடிப்புக்குத் தேசிய விருது பெற்ற, அந்த வார்ப்பட முகம் நினைவுக்கு வந்துவிடும். அதே ஆயிஷா தமது மின்னஞ்சல் பெட்டியில் குவியும் வாழ்த்துக்களால் மூச்சுத் திணறிக் கிடக்கிறார் இப்போது. காரணம் ரொம்ப சிம்பிள் அல்ல. தி ரியலி கிரேட் வகையைச் சார்ந்தது!

'டெரரிஸ்ட்' படத்திற்குப் பிறகு, 'ஸ்பிலிட் வைட் ஓபன்', 'சிட்டி ஆஃப் ஜாய்' என்று சர்வ தேச தரமுடைய படங்களில் நடித்த ஆயிஷாவுக்கு ஹாலிவுட்டில் அடித்தது அதிர்ஷ்டம். பல நூறு மில்லியன் டாலர்களையும் பல ஆண்டுகள் உழைப்பையும் விழுங்கி, ஒவ்வொரு முறையும் உறுதி செய்யப்பட்ட வெற்றியோடு வெளிவந்து உலக சினிமா சந்தையைக் கலக்கும், ஜார்ஜ் லூக்காசின் 'ஸ்டார் வார்ஸ்' சயின்பிக்ஷன் சகாப்தத்தில்தான் ஆயிஷாவின் பெயரும் பொன் எழுத்துக்களால் பொறிக்கப்பட்டிருக்கிறது.



தற்போது கோடை கோலாகலமாக வெளிவந்து ஓடிக் கொண்டிருக்கும் (அமெரிக்கர்கள் தியேட்டர் வாசலில் டெண்ட் அமைத்து, அதில் தங்கி, சமைத்து சாப்பிட்டு, ஸ்டார் வார்ஸ் பார்க்கிறார்களாம்!) ஸ்டார் வார்ஸ் எபிசோட் டு அட்டாக் ஆஃப் த குளோன்ஸ் படத்தில் குயின் ஜாமிலியா வாக நடித்திருக்கிறார் ஆயிஷா. ஸ்டார் வார்ஸின் கடந்த பல பாகங்களிலும் ஆசிய நடிகர்கள் இடம் பெற்றிருக்கிறார்கள் என்றாலும் ஒன்றிரண்டு காட்சிகளில்தான் தலையைக் காட்டுவார்கள். ஆயிஷா இருபது காட்சிகளில் வருகிறாராம்.



இவருக்கு எப்படிக் கிடைத்ததாம் இந்த வாய்ப்பு?

கெய்ரோ திரைப்பட விழாவில் டெரரிஸ்ட் படத்தைப் பார்த்த நியூயார்க் டைம்ஸ் பத்திரிகையின் சினிமா விமர்சகர் 'ஜான் மால் கோவிச்' படத்தையும் அதில் ஆயி ஷாவின் நடிப்பையும் புகழ்ந்து எழுத... அது, ஸ்டார் வார்ஸ் படத்தின் கேஸ்டிங் டைரக்டர் ராபின்கார்லேண்ட் கண்களில் பட, டெரரிஸ்ட் படத்தின் வீடியோ பிரதியைத் தேடிப்பிடித்துப் போட்டுப்பார்த்து அசந்து போனவர், அனிச்சையாய் ஆயிஷாவின் தொலைபேசி எண்களைச் சுழற்றி இருக்கிறார்!

ஆயிஷாவுக்கு அடுத்தடுத்து ஹாலிவுட் வாய்ப்புகள் கதவைத் தட்டுகின்றன. ஹாலிவுட்டே என்றாலும் தமது திறமைக்கு ஸ்கோப் இருந்தால்தான் ஓகே சொல்லுவாராம்!

— ஜெ

கல்கி இன்டர்நெட் முகவரி : www.kalkiweekly.com
ஈ மெயில் : kalkiweekly@vsnl.com

கேரளத்தின் ஆலப்புழை மாவட்டம், சங்கனாசேரியில் உள்ள அஸம்ஷன் பெண்கள் கல்லூரியில் அட்மிஷன் வாங்க வரும் பெண்கள், வளாகத்தில் நுழையும் போதே, தங்களைத் தேவதைகளாக கற்பனை செய்து கொள்கிறார்கள்! காரணம் இந்தக் கல்லூரியிலிருந்து மலையாள சினிமாவுக்கு ஒரு டஜன் ஹீரோயின்கள் கிடைத்திருக்கிறார்கள்!

"நானும் இதே கல்லூரி மாணவிதான்'' என்கிறார் தேன்குள கண்களோடு தமிழ் சினிமாவுக்கு அதிரடி விஜயம் செய்திருக்கும் மீரா ஜாஸ்மின்!

'சூத்திரதாரி' என்று மலையாளத்தில் ஒரே ஒரு படம்தான். அதற்குள் தமிழுக்குக் கூட்டிவந்து, ரவுடி மாதவனைத் திருத்தும் கெட்டிக்கார நாயகியாக 'ரன்' படத்தில் அறிமுகப் படுத்திவிட்டார் இயக்குனர் லிங்குசாமி.

''ஃபேமிலி அண்ட் கம்யூனிட்டி சயின்ஸ் படிச்சிட்டு இருந்தேன். இந்தப் படிப்பு முடிஞ்சதும் திருவனந்தபுரத்துலே ஃபேமிலி கவுன்சலிங் கிளினிக் வைக்கணும்கிறதுதான் என்னோட லட்சியமா இருந்தது. இப்போ மலையாளம், தமிழ், தெலுங்குன்னு நம்பர் ஒன் ஹீரோயின் ஆகணும்கிறதுதான் லட்சியம்'' என்று ஜோதிகா, திரிஷா வகையறாக்களுக்குக் கிலியூட்டுகிறது இந்தக் கேரளத்துச்சாரல்! ''அறிமுகப்படத்துக்குப் பிறகு மலையாளத்துலே வாய்ப்பு இல்லாமத்தான் இங்கே வந்தீங்கன்னு மாத்ரு பூமியிலே செய்தி வந்துருக்கே'' என்றால்... ''அது பழைய செய்தி! இப்போ 'கிராமஃபோன்' என்ற படத்தில் மறுபடியும் திலீப்போட நடிக்கிறேன்...'' என்று சுறுசுறுப்பாக மறுக்கிறார்.

"ஒரே நடிகரோடு ஜோடி சேர்ந்தால் கிசுகிசு எழுதி விடுவார்கள் என்ற பயம் இல்லையா?" என்றால், "கிசுகிசுக்களை ப்ரீ ஆஃப் காஸ்டில் எனக்கான பப்ளிசிட்டி என்று எடுத்துக் கொள்ளும் தில் மனசு எனக்கு இருக்கிறது. ஆனால் கிசுகிசு எழுதுவோர், என்னைக் கேட்டு உறுதிப்படுத்திக் கொண்டு எழுதுமாறு கேட்டுக் கொள்கிறேன். நான் பந்தா பண்ணும் நடிகையில்லை... எப்போ வேண்டுமானாலும் என் செல் நம்பரைச் சுழற்றலாம்...'' என்று விவரமான பார்ட்டி மாதிரி பேட்டி தருகிறார்.



"அதென்ன மீரா ஜாஸ்மின் என்று இரட்டைப் பெயர்?" என்றால் "எனக்கே ஆச்சர்யம்! நேஷனல் இன்டக்ரேஷன் இருப்பது மாதிரி பாதி இந்து, பாதி கிறிஸ்டியன் டச்சோடு பெயர் வெச்சிருக்காங்க... எனக்கு மீராவும் பிடிக்கும் மல்லிகைப்பூவும் பிடிக்கும்'' என்று சொல்லும் இவருக்கு ரொம்பப் பிடித்தது லிப்ஸ்டிக்!

"எனக்கு ரொம்ப பிடிக்காதது எதுவென்று கேளுங்களேன்" என்று சொல்லிவிட்டு... சென்னை வெயிலையும், டிராபிக் ஜாமையும் சபிக்கிறார். 'ரன்' படத்தில் நடிக்கும் அனுபவம் எப்படியாம்? "இயக்குனர் லிங்குசாமி, பந்தா இல்லாமல் இவ்வளவு எளிமையா இருக்கிறார். மாதவன் ரொம்ப சுறுசுறுப்பு நடிகர்... ஒளிப்பதிவாளர் ஜீவா, பர்பெக்ஷன் வர்ற வரைக்கும் விடமாட்டார், டான்ஸ் மாஸ்டர் ராஜுசுந்தரமும் இப்படித்தான், ரன் டீம் ஓடு ஓடுன்னு ஓடிக்கிட்டே இருக்காங்க... ஜூலை முதல்வாரம் படம் ரிலீஸ்... படத்தைப் பார்த்துட்டு அப்புறமா வந்து ஒரு பேட்டி எடுங்க..." என்ற மீரா ஜாஸ்மின், சாயலில் யாரையோ நினைவுபடுத்திக் கொண்டேயிருந்தார்... ஓ...நம்ம சுஜிதா!

சந்திப்பு : ஸ்ரீ சக்கரம்

அட்டை, படங்கள் : ராஜன்

# கேரள

# காஷ்மீர்!

– ஜி.எஸ்.எஸ்.

இந்தியாவின் தலை(வலி)ப் பகுதியாக இருக்கும் ஜம்மு காஷ்மீர் ஸ்பெஷலானதுதான். இந்த மாநிலத்துக்கு இரண்டு தலை நகரங்கள். கோடை காலத்தில் இதன் தலைநகரம் ஸ்ரீநகர். மழைக் காலம் என்றால் ஜம்மு.

பதினான்கு மாவட்டங்களாகப் பிரிக்கப் பட்டிருக்கிறது காஷ்மீர். இவற்றில் ஆறு ஸ்ரீநகர் பகுதியிலும், ஆறு ஜம்மு பகுதியிலும், இரண்டு லடாக்கிலும் உள்ளன.

எந்த மாநிலத் தலைநகரமாவது முழுக்க முழுக்கக் கொஞ்சும் இயற்கை அழகோடு இருப்பதைப் பார்த்திருக்கீங்களா? ஸ்ரீநகர் அப் படிப்பட்ட ஒரு அற்புதம்!





ஜீலம் நதிக்கரையில் அமைந்துள்ள ஸ்ரீநகர், காஷ்மீர் பள்ளத்தாக்கின் மையத்தில் அமைந்திருக் கிறது. கடல் மட்டத்துக் குச் சுமார் 5200 அடி உயரத்தில் உள்ள இந்த நகரில் எக்கச்சக்க ஏரிகள். அதனால் நிறைய பாலங் கள். சுற்றிலும் அற்புத நந்தவனங்கள். மிதக்கும் நகரமான வெனிஸுடன் பலமுறை ஒப்பிடப் பட்டிருக்கிறது ஸ்ரீநகர்.

பிரம்மாண்டமான தால் ஏரி, ஸ்ரீநகரின் எல்லைப்புறத்தில் அமைந்திருக்கிறது. எட்டுக்கு நாலு கிலோ மீட்டர் பரப்பளவு கொண்ட சொர்க்கம். அதில் உலவும் படகு வீடுகள், ஆஹா! நாள் கணக்கில் இந்த மிதக்கும் சொர்க்கத்தில் தங்க லாம். காய்கறியிலிருந்து பழங்கள் வரை அத்த னையும் தனித்தனி படகுகளில் உங்கள் இருப் பிடத்தைத் தேடி வரும்.

தால் ஏரியின் மேற்குக் கரையில் அமைந் திருக்கிறது ஹஸ்ரத் பால் மசூதி. நபிகள் நாயகத்தின் புண்ணிய ரோமம் இங்கு பாது காக்கப்பட்டு வருகிறது. முகலாய சக்ரவர்த்தி ஔரங்கசீப்பால் இங்கு அனுப் பப்பட்டதாம் அது.

சாத்தனூரையும், மைசூர் பிருந் தாவனத்தையும் பிரமாதம் என்ப வர்களை ஷாலிமார் பாகுக்கு அனுப்பினால் வார்த்தையே வெளி வராமல் திணறி விடுவார்கள். சக்ரவர்த்தி ஜஹாங்கிரால் எழுப்பப்பட்டது இந்த நந்தவனம். அற்புதமான செனார் மரங்கள், விதவித வடிவங்களில் உருவாக்கப்பட்டிருக்கும் நீரூற்றுகள். இவை இதன் ஸ்பெஷாலிடி.

அமர்நாத் குகைகள் இந்துக்களுக்குப்

புனிதமானவை. காஷ்மீரில் உள்ள பகல்காம் என்ற பகுதியிலிருந்துதான் அந்தப் பயணம் தொடங்குகிறது.

காஷ்மீர் பெண்கள் எப்படித்தான் அப்படியொரு சிவப்பாகவும் பளபளப் பாகவும் இருக்கிறார்களோ என்ற வியப்பு பலருக்கும் தோன்றியிருக்கலாம். குங்கு மப்பூவுக்கும் சிவப்பு நிறத்திற்கும் சம்பந் தம் இல்லை என்கிறது அறிவியல். என் றாலும் இதோ ஒரு சுவையான தகவல். ஸ்ரீநகரி லிருந்து சற்றுத் தொலைவில் உள்ளது பாம்பூர் என்ற கிராமம். அங்கு பெரு மளவில் பயிராகிறது குங்குமப்பூ.

காஷ்மீரில் கண்டு ரசிக்க இன்னும் எவ் வளவோ உண்டு. பனிச் சறுக்குத் தளங் களும், பிரம்மாண்டமான கோல்ஃப் மைதானமும் அடங்கிய குல்மார்க்கை நினைத்தாலே பரவசம். இங்கிருந்து இமயத்தின் முக்கிய சிகரங்களில் ஒன்றான நங்கா பர்பத்தைக் காணலாம்.





இயற்கை அழகுகள் இன்னமும் கொட்டிக்கிடக்கின்றன காஷ்மீரில். ஆனால் ரசிக்கத் தான் இன்று மனிதர் கள் இல்லை. துப்பாக்கிக் குண்டுகளும், ரத்த ஆறுமாக விளங்கும் ஒரு பிரதேசம் அது. தினசரி வாழ்க்கை முறை என்ற ஒன்று இன்று அங்கு கிடையாது. எந்த நேரமும் எந்த வித மாற்றத்துக்கும் தயாராக இருக்க வேண்டிய கட்டாயம். "நேற்று வாழ்ந்தவன் இன்றில்லை" என்ற தத்துவத்தை கண் ணெதிரில் தரிசித்து வரும் கட்டாயம் கொண்ட பூமியாக மாறிவிட்டது அது. படகு வீடுகளில் தங்கு வதற்கு ஆளில்லை. எனவே தங்கள் படகு களை வாடகைக்கு



விட்டு வாழ்க்கை நடத்தியவர்கள் முடங்கிப் போயிருக்கிறார்கள்.

நமக்கு இது காஷ்மீர். இதுவே காஷ்மீர்!

ஆனால் இன்னொரு காஷ்மீரும் இருக்கிறது. சுமார் 13000 சதுர கிலோமீட்டர் பரப்பு கொண்ட அந்தப் பகுதியின் அதிகார பூர்வ மொழி உருது. நீலம், ஜீலம், பூன்ச் ஆகியவை அதன் முக்கிய நதிகள்.

இரண்டாவதாகக் குறிப்பிடப்பட்டுள்ள காஷ்மீரின் தற்போதைய பெயர் "ஆஜாத் ஜம்மு காஷ்மீர்" பாகிஸ்தானின் பிடியில் சிக்கிக் கொண்டிருக்கும் பகுதி இது. அதே சமயம் நம்வசம் உள்ள காஷ்மீரை 'இந்தியாவினால் ஆக்ரமிக்கப்பட்ட காஷ்மீர்' என்கிறார்கள் பாகிஸ்தானியர்.



"அந்த ஆள் ஜெயிச்சா கண்டிப்பா தினமும் தொகுதி பக்கம் வருவாரு..."
"எப்படிச் சொல்றீங்க..."
"தொகுதில இருக்கிற போலீஸ் ஸ்டேஷனுக்கு தினமும் கையெழுத்து போட வரணுமே!"

— வீ. சாரதிடேச்சு

ஆக காஷ்மீர் இரண்டுப்பட்டுக் கிடக்கிறது. கூத்தாடிகளுக்குக் கொண்டாட்டம்.

நம் நாட்டின் தலைப்பகுதி இரண்டாகப் பிரிந்ததில் சரித்திரத்தின் வேதனைப் பக்கங்கள் ஏராளம்.

'சரித்திரத்தை மாற்றுகிறேன் என்று புறப்பட்டு பூகோளத்தை மாற்றிவிட்ட மனிதர்' என்று ஜின்னாவைக் குறிப்பிடுவார்கள். அவரும் அவருடைய நாட்டின் வாரிசுகளும் காஷ்மீர் சோக நாடகத்தின் பிரதான பாத்திரங்கள்தான். அதேசமயம் இவர்களைப் போலவே வேறு சில முக்கிய பாத்திரங்களும் உண்டு. அவர்களை வரும் இதழ்களில் காண்போம்.

காஷ்மீரின் தலைவிதி என்பது நிஜமாகவே ஒரு துன்பியல் நிகழ்வு. மதம், இனம், தேசம் என்று பல்வேறு பிரிவுக்கோடுகளால் சிதழ்ந்து போய்க் கொண்டிருக்கும் காஷ்மீரின் அடிப்படையைப் புரிந்து கொள்வது முன் எப்போதையும் விட இப்போது அவசியம்!

ஒரு மாபெரும் ஏரியாக ஒரு காலத்தில் விளங்கியது காஷ்மீர். அந்த ஏரியின் பெரும் பகுதி நீரை வடித்தவர் காஷ்யபர் என்கிறது புராணம். பிராமணர்கள் காஷ்மீரில் மிக அதிக அளவில் வசிக்கத் தொடங்கினார்கள். இரண்டாம் நூற்றாண்டில் குஷானர்கள் ஆண்ட போது புத்தமதம் இங்கு பரவலாக அறிமுகமானது. என்றாலும் முக்கிய மதமாக விளங்கியது இந்துமதம்தான். நாளடைவில் கார்கோட்டா, உத்பலா, தந்த்ரின், எஸ்கரா, பர்வகுப்தா போன்ற பல அரச பரம்பரைகள் காஷ்மீரில் அடுத்தடுத்து ஆதிக்கத்தைச் செலுத்தின. ஒரு கால கட்டத்தில் ஒரு பெண் மணி கூட ஆட்சியைப் பிடித்திருக்கிறார். குப்த அரசர் ஒருவர் இறக்க, அவரது மனைவியான தித்தா என்பவள் 1003ம் ஆண்டில் காஷ்மீரை ஆண்டிருக்கிறார்.

1346ல் காஷ்மீரில் இந்துக்களின் ஆட்சி ஒரு முடிவுக்கு வந்தது. முதியன தேவா என்ற அரசரின் ஆட்சி நீக்கப்பட்டு, லோஹரா அரச இனத்தைச் சேர்ந்த ஷம்சுதீன் என்பவர் அரசரானார். 1586 வரைதான் அவரது வாரிசுகள் காஷ்மீரை ஆள முடிந்தது. காரணம் அந்த வருடம் முகலாய சக்ரவர்த்தி அக்பர் காஷ்மீரை வென்று அதைத் தன் பரந்த சாம்ராஜ்யத்தின் ஒரு பகுதியாக்கிக் கொண்டார்.

நடுவே கொஞ்ச காலம் ஆப்கானிஸ்தானின் பகுதியாகவும் காஷ்மீர் விளங்கியிருக்கிறது. 1757ல் அகமத்ஷா துரானி என்பவர் காஷ்மீரை வென்ற பிறகு ஏற்பட்டது இந்த நிலை. ஆனால் 1819ல் ரஞ்சித்சிங் என்பவர் காஷ்மீரைத் தம் பிடியில் கொண்டுவந்து அதைத் தமது சீக்கிய சாம்ராஜ்யத்தின் முக்கிய பகுதியாக்கினார்.

எங்கெங்கோ தனது ஆக்டோபஸ் கரங்களை விரித்த பிரிட்டிஷ் அரசு சும்மாயிருக்குமா? 1846ல் சீக்கியர்களை வென்றது. காஷ்மீரை, ஜம்முவைச் சேர்ந்த குலாப்சிங் என்ற மகாராஜாவுக்கு விற்றது. எவ்வளவு தொகைக்குத் தெரியுமா? 75 லட்சம் ரூபாய்! இரு தரப்புக்கும் உரிமையும் பாதுகாப்பும் ஏற்படும் வகையில் மகாராஜா குலாப்சிங்கும், ஆங்கிலேய அரசும் ஓர் ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டனர். இதன்படி ஜம்மு காஷ்மீர் தனி ராஜ்யமானது.

காஷ்மீர் சரித்திரத்தில் இந்த ஒப்பந்தத்துக்கு முக்கிய இடம் உண்டு.

(தொடரும்)

# அதிபர் தேர்தலில் 'முடி' பிரச்னை!





தமிழ் நாட்டிலும், இந்தியாவிலும் எப்படியெல்லாம் தேர்தல்கள் நடந்திருக்கின்றன! நடந்து வருகின்றன என்பது நமக்குத் தெரியும். கொஞ்சம் ஜெர்மன் தேர்தல் பற்றிப் பார்ப்போமே.

ஐரோப்பாவிலேயே மிகப் பெரிய நாடான ஜெர்மனியில் வருகிற செப்டம்பர் மாதத்துக்குள் அதிபர் தேர்தல் நடந்தாக வேண்டுமாம். அண்மையில் அங்கே சென்று வந்த 'ஜெம் கிரானைட்ஸ்' வீரமணியிடம் தேர்தல் நிலவரம் எப்படி?' என்றோம்.

'இந்தோ - அமெரிக்க வர்த்தகக் குழுத் தலைவராகவும், இந்தோ-ஜப்பான் வர்த்தகக் குழுத் தலைவராகவும் இருந்து வரும் அவர், "சில நூற்றாண்டுகளுக்கு முன்பு, இங்கே முடி மன்னர்கள் நாடாண்டபோது கூட 'முடி' பற்றிய பிரச்னை எழுந்திருக்காது; அங்கே இப்போது அதிபராக உள்ள கெர்ஹார்ட் ஸ்போடர் 'முடி' பற்றிய ஒரு சாதாரண விஷயம் விஸ்வரூபம் எடுத்திருக்கிறது இந்தத் தேர்தலில்!'' என்று தொடங்கினார்.



• வீரமணி

''முடி என்றால்?''

"தலை முடிதான்! இப்போது அங்குள்ள அதிபருக்கு முன்னால் ஹெல்முட் கோல் என்பவர் ஜெர்மன் அதிபராக இருந்தாராம். அப்போது நான்கு இலட்சமாக இருந்த வேலையில்லாதவர்கள் எண்ணிக்கை இப்போது ஐந்து இலட்சத்தைத் தாண்டிவிட்டதாம். எங்கும் எதிலும் லஞ்சம் ஊழல் என்கிற நிலை; இதனால் அங்குள்ள 'சிவப்பு - பச்சைக் கூட்டணி' அரசு, மக்கள் மத்தியில் செல்வாக்கை இழந்துவிட்டதாம். 'அந்தக் கூட்டணியில் அங்கம் வகிக்கும் எஸ்.பி.டி. கட்சியே இந்தத் தேர்தல் நேரத்தில் எதிலும் முந்திரிக்கொட்டைபோல் முந்திக் கொள்கிறது. அதைக்கூட அதிபரால் கட்டுப்படுத்த முடியவில்லை' என்கிறார்கள் மக்கள்..''

"அதெல்லாம் இருக்கட்டும். ஏதோ 'முடி' விவகாரம் என்றீர்களே.''

''ஆமாமாம். ஜெர்மனியில் உள்ள டி.டீ.பி. என்ற செய்தி நிறுவனம், ஜெர்மன் அதிபர் கெர்ஹார்ட் ஸ்ரோடர் இனி உற்சாகத்தோடு ஆட்சி நடத்த முடியாது. காரணம், வயது ஐம்பத்தெட்டு ஆகிவிட்டது. மனைவி ஆலோ

சனையோ என்னமோ... தலைக்கு 'டை' அடிக்க ஆரம்பித்துவிட்டார் என்று செய்தி வெளியிட்டிருக்கிறது. அங்குள்ள பிரபல பத்திரிகைகளான ஸ்டென், பந்தே ஆகியவை அதைப் பெரிதுபடுத்திச் செய்திகள், கார்ட்டூன்கள் எல்லாம் போட்டுவிட்டன.

''அதையெல்லாம் பார்த்து மூக்குச் சிவந்த ஜெர்மன் அதிபர் 'அதெல்லாம் பொய்' என்று அந்தச் செய்தி நிறுவனத்தின்மேல் ஒரு வழக்குப் போட்டுவிட்டார். தகுந்த சாட்சியங்களின் அடிப்படையில்,

''ஸ்டென் என்ற ஏடோ, இந்நாள் அதிபர் எல்லாவற்றையும் இழந்து வருகிறார் என்பதை உணர்த்த, அவருடைய முக்கால் நிர்வாண அட்டைப் படமே வெளியிட்டிருக்கிறது! என்னமாய் இருந்த அதிபர் முகம் எப்படிச் சுருங்கிவிட்டது' என்ற அங்கலாய்ப்புக் கட்டுரையோடு ஒரு புகைப்பட வரிசையும் வெளியிட்டிருக்கிறது!''

- என்றெல்லாம் சொல்லி, சில ஜெர்மன் ஏடுகளையே காட்டினார் வீரமணி. அவற்றில் உள்ள படங்களையே இந்தக்



அதிபர் இளமையோடுதான் இருக்கிறார். அவர் டை அடிப்பதில்லை என்றெல்லாம் தீர்ப்பளித்த நீதிபதி ஆன்ட்ரஸ் பர்க்கி, அச் செய்தி நிறுவனத்திற்கு 10,000 யூரோ தண்டமும் விதித்துவிட்டார்.

"கூட்டணிக்குள்ளேயே குழப்ப நிலை இருந்தபோதிலும், ஸ்ரோடர் மிகுந்த நம்பிக்கையுடன் மறுபடி அதிபர் தேர்தலில் நிற்கவிருக்கிறார். எட்முன்ட் ஸ்டோய்பர் எதிர்த்து நிற்கப் போகிறாராம். அவருக்கோ வழுக்கைத் தலை. இதனால் - 'இளமை பொங்கும் நானா, முதுமை அடைந்துவிட்ட ஸ்டோய் பரா, உங்களுக்கு யார் வேண்டும்?' என்று இப்போதைய அதிபர் ஒரு போர்டு பிடித்து தேர்தல் பிரசாரக் களத்தில் இறங்கவிட்டது போல ஒரு கேலிச்சித்திரம் வெளியிட்டிருக்கிறது 'பந்தே' என்கிற ஜெர்மன் ஏடு!




• பந்தே - கார்ட்டூன்

கட்டுரையில் வெளியிட்டிருக்கிறோம்.

கொசுறு : ஆபிரகாம் லிங்கன் அமெரிக்க அதிபரானபோது 'குழிவிழுந்த கன்னமுடைய நீங்கள் தாடி வைத்தால் முகம் அழகாயிருக்கும்' என்றொரு சிறுமி கடிதம் எழுதினாராம். அதுவே லிங்கனைத் தாடிக்காரர் ஆக்கியது என்பது வரலாறு.

இங்கே தமிழகத்தில், முதல் அமைச்சர் ஜெயலலிதாவைச் சந்தித்த நடிகர் எஸ்.எஸ்.சந்திரன் எம்.பி. ''அம்மா நீங்கள் 'டை' அடித்துக் கொண்டால் நன்றாயிருக்குமே?'' என்றாராம். அதற்கு அவர் '' நீங்கள் அம்மா என்றுதானே அழைக்கிறீர்கள்? நான் இப்படியிருப்பதுதான் நல்லது'' என்றாராம். இதுவும் ஒரு பத்திரிகைச் செய்தி!

— பி.எல்.ஆர்.

# உள்ளம் துடிக்குதே லிஃப்கோ லிஃப்கோ!


• வெங்கடேசன்

ஒரே நிறுவனத்தில் தொடர்ந்து அறுபது ஆண்டுகள் பணிபுரிவது என்பது சாதாரணமான விஷயமா என்ன? அதனைச் சாதித்திருக்கிறார் வி. வெங்கடேசன். 1942ல் தொடங்கி, இன்றுவரை தொடர்ந்து இவர் பணி புரிந்துகொண்டு இருக்கும் நிறுவனம் பிரபல பதிப்பகமான லிஃப்கோதான்!

தனது லிஃப்கோ அனுபவங்களைப் பகிர்ந்துகொள்கிறார் வெங்கடேசன் :

"ஒருநாள், வாணியம்பாடி, தோல் பதனிடுவோர் சங்கத்திலிருந்து ஒரு கடிதம் வந்தது. அதில் எங்கள் வெளியீடான விற்பனை வரி சம்பந்தப்பட்ட புத்தகத்தின் ஒரு பிரதியை அவர்கள் வாங்கியதாகவும், ஆனால், அப் புத்தகத்தின் சில பக்கங்கள் காணப்படவில்லை என்றும் குறிப்பிடப்பட்டிருந்தது. இதைப் படித்தவுடன் லிஃப்கோ ஸ்தாபகரான சர்மா, உடனடியாக, ஒரு புதிய பிரதியை, வாணியம்பாடிக்கு அனுப்பி வைக்குமாறு கூறினார். எதிர்பாராத இந்தச் செயலால் திருப்தியடைந்த தோல் பதனிடுவோர் சங்கத்தினர், பாராட்டி ஒரு கடிதத்தை அனுப்பி வைத்தார்கள்.

''வாடிக்கையாளர்கள்தான் நமக்கு முதலாளி. அவர்கள் திருப்தி மிகவும் முக்கியம்'' என்பது சர்மாவுடைய கொள்கை.

"அவரிடமிருந்து நான் கற்றுக்கொண்ட சின்னச் சின்ன விஷயங்கள் ஏராளம். காலையில், ஆபீசுக்கு வந்தவுடன் அனைவருக்கும் சிரித்த முகத்துடன் குட் மார்னிங் சொல்ல வேண்டும். முதல் நாள் உடல்நலக் குறைவு என்று யாராவது சொல்லியிருந்தால், மறுநாள் காலையில், முதலில் அவரது உடல்நலம் குறித்து விசாரிக்க வேண்டும். தினமும் காலை இருக்கையில் அமர்ந்தவுடன் சில விநாடிகள் பிரார்த்தனை செய்ய வேண்டும்.

வரும் தபால்களில், புகார்களுக்கு முன்னுரிமை கொடுத்து, வாடிக்கையாளர் திருப்தியடையும் விதமாய் உடனடியாக நடவடிக்கை எடுக்க வேண்டும். அதற்கு அடுத்தபடிதான், புத்தகம் வேண்டுமென்று ஆர்டர் கொடுத்தவர்களைக் கவனிக்க வேண்டும் என்பார்.

"தினமும், இரவு படுத்துக்கொண்டவுடன், சில நிமிடங்களுக்கு அன்று நடந்த சம்பவங்களை நினைத்துப் பார்க்க வேண்டும். அப்போது தெரிந்தும், தெரியாமலும் நிகழ்ந்த தவறுகள் நினைவுக்கு வரும். தலைமாட்டிலேயே ஒரு சிறு குறிப்புப் புத்தகத்தையும், அதனுடன் இணைத்து ஒரு பென்சிலையும் வைத்துக் கொள்ள வேண்டும். முக்கியமான விஷயங்களை, உடனடியாக அந்தக் குறிப்புப் புத்தகத்தில் குறித்து விட வேண்டும். இல்லையெனில் பல விஷயங்கள் மறுநாள் காலையில் மறந்துவிடும் என்பது அவரது ஆலோசனை. அதை நான் இன்றளவும் கடைபிடிக்கிறேன்.

"முன்பெல்லாம், வருடத் துவக்கத்தில் பாட புத்தகங்களை விட நோட்ஸ்களுக்குத்தான் ஏக டிமாண்ட்டு. லிஃப்கோவிலும் தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம் என்று பலமொழி பாட புத்தகங்களுக்கும் நோட்ஸ் போட்டுக் கொண்டிருந்தோம். ஒருதடவை காஞ்சி மகா பெரியவர், லிஃப்கோவுக்கு விஜயம் செய்தபோது, மக்களுக்குப் பயன்படும்படியான, உருப்படியான புத்தகங்களை வெளியிடு; பணம் சம்பாதிக்க வேண்டும் என்பதற்காக, குப்பைகளைப் பிரசுரிக்காதே!' என்று சொல்ல, அத்துடன் நாவல்கள், நோட்ஸ்கள் போடுவது அடியோடு நிறுத்தப்பட்டது. மகா பக்த விஜயம் என்று ஒரு பக்தி புத்தகம் வெளியிட்டோம். அதனைத் தொடர்ந்து, ஏராளமான பக்தி புத்தகங்களை இன்றளவும் வெளியிட்டுக்கொண்டிருக்கிறோம்."

வெங்கடேசனைப் பரிசோதித்துவிட்டு, பிரபல இதய மருத்துவர் செரியன் அடித்த நகைச்சுவையான கமெண்ட் : 'உங்க இதயம், 'லப் டப்'னு துடிக்காமல், லிஃப்கோ... லிஃப்கோன்னு துடிக்குதே!'

— மானஸா

படம் : யோகா




# கல்கி வைரவிழா வைட்டமின் சிறுகதைப் போட்டி!

முதல் பரிசு – ரூ.10,000
இரண்டாம் பரிசு – ரூ. 7,500
மூன்றாம் பரிசு – ரூ. 5000

*அலுப்பையெல்லாம் விரட்டியடித்து பி - 12 இன்ஜெக்ஷன் போட்ட மாதிரி இருக்க வேண்டும் உங்கள் சிறுகதை!*

இவ்வாண்டு **அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி**க்கான

*முதல் நிபந்தனை இதுதான்!*
*மற்ற நிபந்தனைகள் வழக்கமானவை:*

- சரித்திரம், சமூகம், மர்மம், நகைச்சுவை என எப்படிப்பட்ட கதையாகவும் இருக்கலாம். கதை, உங்கள் சொந்தக் கற்பனையாக இருக்க வேண்டும்; அவ்வளவுதான்!
- கல்கியில் நான்கு பக்கங்களுக்கு மிகாமல் இருப்பது நல்லது.
- சொந்தக் கற்பனைதான் என்பதற்கு உறுதி மொழிக் கடிதம் வேண்டும். அது இல்லாத கதைகள் பரிசீலிக்கப்பட மாட்டா.
- அறிமுக எழுத்தாளர் எனில், இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லையென்றும் போட்டி முடிவு வெளியாகும் வரை எழுதுவதில்லை என்றும் உறுதி மொழி தர வேண்டும்.
- முழு வெள்ளைத் தாளில் ஒரு பக்கத்தில் மட்டுமே எழுத வேண்டும்.
- தேர்வாகாத கதைகளைத் திரும்பப் பெற, போதிய தபால் தலைகள் ஒட்டிய அஞ்சல் உறை இணைக்கப்பட வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.
- ஒருவரே எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.
- பரிசுக்குரிய கதைகளை நடுவர் குழு பரிசீலித்துத் தேர்ந்தெடுக்கும். சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே இறுதி.
- முடிவு வெளியாகும் வரை, எவ்வித கடிதப் போக்குவரத்தோ, தொலைபேசி விசாரிப்புகளோ கூடாது.
- 'அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி – 2002' என்று உறையின் மேல் தவறாமல் குறிப்பிட்டு, அனுப்ப வேண்டிய முகவரி:

**ஆசிரியர், கல்கி**
**47, ஜவாஹர்லால் நேரு சாலை,**
**ஈக்காடுதாங்கல்,**
**சென்னை – 600 097.**

- கதைகள் வந்து சேரக் கடைசித் தேதி : **ஜூன் 15.**
- போட்டி முடிவும் முதல் பரிசுக் கதையும் ஆகஸ்ட் 4, ஆண்டுமலரில் வெளியாகும்.

***பரிசுகள், கல்கி வைரவிழா நிகழ்ச்சி மேடையில், ஆகஸ்ட் 4, 2002 அன்று வழங்கப்படும்.***



# மலை

மலையின் சாயல் கொண்ட
ஒரு கல் போதும் எனக்கு.

மலை ஓடையின் ஈரம்
மலை மரத்தின் வேர்
மலையின் காற்று
மலையின் வெப்பம்
மலையின் ரகசியம்
மலையின் பிரம்மாண்டம்
மலையின் உயிர்
மலையின் விஷம்
மலையின் மருந்து
மலையின் கடவுள்
மலையின் மக்கள்

எல்லாம் இருக்கும் அதிலிருந்து
எனக்கென்று ஒரு மலையை
நான் உருவாக்கிக் கொள்ளுவேன்.

# சொல்

நீண்ட நேரத் தயக்கத்திற்கும்
நீண்ட நேரத் தாமதத்திற்கும்
பிறகு கேட்டுக் கிடைத்தது
ஒரு சொல்.

அது எனக்கு
அறிமுகப்படுத்தியது.

பெறுவதில் உள்ள சுகத்தையும்
பெறுவதில் உள்ள வலியையும்.

— வஸந்த் செந்தில்








2002 ஜூன் 16
சித்ரபானு ஆனி 2
மலர் : 60
இதழ் : 46

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## சைதையில் வெறியாட்டம்!

சைதாப்பேட்டை தொகுதியின் 58 வாக்குச் சாவடிகளில் மறுதேர்தல் நடத்தப்பட்டு முடிவு வெளியாகியிருக்கிறது.

சைதாப்பேட்டை தொகுதி பாரம்பரியமான தி.மு.க கோட்டைதான். ஆனால், அச்சிறுபாக்கம், வாணியம்பாடி தொகுதிகளில் அமைந்த முடிவுகளைப் போல சைதையிலும் அ.தி.மு.க வென்றிருக்கிறது.

ஆனால் நடந்தது என்ன...? மூன்று தொகுதிகளிலும் ஜெயித்தாக வேண்டும் என்ற வெறி அ.தி.மு.கவுக்கு ஏற்பட்டு விட்டது. அச்சிறுபாக்கத்திலும் வாணியம்பாடியிலும் வெற்றி சுலபமாய்க் கைவரும் என்று தெரியும். சைதாப்பேட்டையில் அது கை நழுவிப் போய் விடப் போகிறதே என்ற கவலையில் மே 31 அன்று தனது கள்ளவோட்டுக் கை வரிசையைக் காட்டிவிட்டது அ.தி.மு.க.




பல வாக்குச்சாவடிகளில் அசாதாரணமான அளவில் வாக்குப்பதிவு நிகழ்ந்தது. வேறு பலவற்றில் வாக்குச்சாவடிகளை மூடும் தருவாயில் திடீரென்று வாக்குப்பதிவு மிக அதிகமாக நிகழ்ந்தது.

'எந்த அசம்பாவிதமும் நடக்காது' என்று உறுதி அளித்த தேர்தல் கமிஷனால் வன்முறைகளையும் தடுக்க முடியவில்லை; கோல்மால்களையும் நிறுத்த முடியவில்லை.

எதிர்க்கட்சிகள் முறையிட்டதன் பேரில், சுமார் இருபது சதவிகித இடங்களில் மறு வாக்குப்பதிவு நடைபெற்றிருக்கிறது.

மறு வாக்குப்பதிவுக்கான உத்தரவு பிறப்பிக்கப்பட்டதே ஆளுங்கட்சிக்கு ஒரு கரும்புள்ளிதான்; ஆளுங்கட்சியின் தகிடுதத்தங்கள் நடந்திருப்பதை உறுதிப்படுத்தும் நிகழ்வுதான்.

சைதாப்பேட்டையில் அ.தி.மு.கவின் இந்த ரசக்குறைவான நடத்தையினால் அது பெற்றுள்ள வெற்றியும் மதிப்பிழந்து போகிறது. மற்ற இரு தொகுதிகளிலும் கூட, முற்றிலும் நேர்மையாகத்தான் அ.தி.மு.க.வினர் நடந்துகொண்டனர் என்று எவ்வாறு நம்ப முடியும்? ஆளுங்கட்சியினரின் செல்வாக்கும் பணபலமும் அங்கே செயல்படவில்லை என்பது என்ன நிச்சயம் என்றெல்லாம் கேள்விகள் எழும்.

தி.மு.க தலைவர் கருணாநிதி, மறுவாக்குப் பதிவு அறிவிப்பு குறித்து ஏற்கெனவே




அதிருப்தி தெரிவித்துவிட்டார். சைதை தொகுதி முழுவதிலும் மறுதேர்தல் நடத்தாமல், சில வாக்குச் சாவடிகளில் மட்டும் நடத்துவது வியர்த்தம் என்று அறிக்கை விட்டிருக்கிறார். சைதையில் அ.தி.மு.க ஜெயித்தாலும் அந்த வெற்றிக்கு மதிப்பு இல்லை.

இவ்வாறு தன் மதிப்பையே குறைத்துக்கொள்கின்ற நடவடிக்கைகளில் அ.தி.மு.க ஏன் ஈடுபட வேண்டும்? இரு தொகுதிகளில் வென்று ஒரு தொகுதியில் தோற்றால் என்ன தவறு? வெற்றியும் தோல்வியும் மாறி மாறி வருவதுதானே ஜனநாயகம்... என்றெல்லாம் அ.தி.மு.க தலைவியிடம் கேட்டுப் பயனில்லை.

அது தெரிந்திருந்தால், அதைப் புரிந்து ஏற்கும் பக்குவம் இருந்தால், வேட்புமனு நிராகரிக்கப்பட்ட நிலையில் ஜெயலலிதா முதல்வர் பொறுப்பை ஏற்றிருக்க மாட்டார்!

அரசியல் நாகரிகம் என்பது தமிழ்நாட்டில் அடியோடு குழி தோண்டிப் புதைக்கப்பட்டு விட்டது. அதனிடத்தில் அ.தி.மு.க (அ)நாகரிகம் என்பதாக ஒன்று செயல்பட்டுக் கொண்டிருக்கிறது.

வாக்காளர்கள் விழிப்படைந்தால் விடிவு காலம் பிறக்கும் என்று இதுநாள் வரை நம்பிக்கை கொள்ள முடிந்தது. சைதாப்பேட்டை இடைத்தேர்தலில் வோட்டுப் போட்ட போலி வாக்காளர்கள் கணக்கைப் பார்த்தால் அந்த நம்பிக்கையும் தூளாகிறது. ஆளுங்கட்சியின் **m m p (muscle and money power)** தான் இனி எல்லா தேர்தல்களின் முடிவையும் நிர்ணயிக்கப் போகிறது என்ற அச்சம் ஏற்படுகிறது.○

# அ.ச.ஞாவின் இலக்கியப் பார்வை...

## சுவடுகள் 23

● திருப்பூர் கிருஷ்ணன்

அமைதி தவழும் முகம். துறவி போன்ற தோற்றம். நரைத்த தாடி. முகமெல்லாம் ஒழுங்காய்ப் பழுத்த முதுமையின் அருள் மலர்ச்சி.

''அலமாரியில் இரண்டாம் அடுக்கில் நாலாம் புத்தகத்தை எடு'' என்றார் பேராசிரியர் அ.ச. ஞானசம்பந்தன். எடுத்தேன். ''அதில் 37ம் பக்கத்தில், 'அக்கட இராவணற்கு அமைந்த ஆற்றலே' என்று ஒரு வரி வருகிறதா? 'அக்கட' கன்னடச் சொல். கம்பராமாயணத்தில் இப்படிச் சில சொற்கள் உண்டு...''

ஆலய மணிக்குரல். திருத்திய உச்சரிப்பு. குரலின் வசீகரம் ஒருமுறை கேட்டவரை, மறுபடி எப்போது கேட்போம் எனத் தாபப்பட வைக்கும். பெரிய புராணமா, கம்ப ராமாயணமா... பழைய இலக்கியம் குறித்து எந்த சந்தேகம் கேட்டாலும் உடனே தன் மனம் என்கிற கம்ப்யூட்டருக்குள் புகுந்து ஞாபகம் என்ற மவுசைக் க்ளிக் செய்வார். அடுத்தகணம் எந்த சர்ச் எஞ்சின் அவர் மூளையின் எந்தப் பகுதியில் தேடுகிறதோ தெரியாது. கேட்ட தகவல்கள் நம் முன்னே கொட்டும். சென்னையில் வாழும் ஒரு நடமாடும் ஆச்சரியம் அவர். அவருக்குப் பல்லாண்டுகளாகக் கண்பார்வை கிடையாது என்று ஓங்கி அடித்து உள்ளங்கை வலிக்கக் கிள்ளி சத்தியம் செய்தால்கூட நம்ப முடியாது. பார்வை இல்லை என்று சொல்லலாமோ! பழைய இலக்கியம் குறித்துப் பரந்துபட்ட பார்வை... உயர்தர ஆன்மிகம் குறித்து சமச்சீரான பார்வை... சேக்கிழாரின் பெரியபுராணத்தை அவர் பார்க்கும் பார்வையே தனி.



அ.ச.ஞா.வை ஆசான் என்பவர்கள் உண்டு. 'அ.சா.' என்று பிரியத்தோடு குறிப்பிடுபவர்கள் உண்டு. 'ஆசா' என்றால் தமிழில் அவர் ஒருவர் தான். அவருடன் நெருங்கிப் பழகும்பேறு பெற்ற எனக்குக் கொஞ்சம் 'ஆசா' பாசம் அதிகம்தான்! அவரும் என்னிடம் அன்பைக் கொட்டுபவர். ஏ.என். சிவராமனை 'அடேய் சிவராமா!' என்று இவர் கூப்பிடும் உரிமையும், அவர் இவரை 'என்னடா ஞானசம்பந்தா!' என விசாரிக்கும் சொந்தமும் தனி அழகு.

அ.ச.ஞா. ஆண்டுதோறும் நடத்தும் சேக்கிழார் விழாவில் பேசியிருக்கிறேன். 'இந்த ஆண்டு பூசலார் நாயனார் பற்றிப் பேசுகிறாய்' என்று ஒருமுறை தொலைபேசியில் சொல்லி விட்டுத் தொலைபேசியை வைத்துவிட்டார். போதாதா! அது வெறும் சொல்லல்ல. உத்தரவு. அவர் முன்னிலையில் பேசுகிறோம் என்ற பொறுப்போடு விசேஷமாகத் தயார் செய்து கொண்டு போயாக வேண்டும். கொஞ்சம் பிசிறு தட்டினால் கூட, 'இனிக்கின்ற பானகத்தில் இடையே ஏன் அந்தத் துரும்பு? தூக்கிப் போட்டுவிட்டு மற்றவற்றைப் பற்றி மட்டும் பேசியிருக்கலாமே!' என்று தயவு தாட்சண்யம் பாராமல்

சொல்லி விடுவார். நாம் பேசி முடித்த பிறகு அவர் சொல்லும் 'பலே!' என்ற இரண்டே இரண்டு எழுத்துகளுக்கு இணையான சான்றிதழ் எந்தப் பல்கலையிலும் கிடையாது. பேச்சாளர்கள் நாலாந்தர நகைச்சுவைத் துணுக்குகளை அவர் முன்னிலையில் கொட்ட முடியாது. 'இதற்கா தமிழ் படித்தாய்?' என அவர் கொட்டுக் கொட்டென்று கொட்டி விடுவார். நெற்றிக்கண் நக்கீரப் பரம்பரையில் மிச்சமிருக்கும் கடைசிக் கொழுந்து அவர்.

சோதனைக் குழாயில் போட்டு ஆய்வு செய்து ஆன்மிகத்தைப் பற்றி விஞ்ஞான பூர்வமாக அவர் பேசுவதை இளைஞர்கள் கேட்டால் அவர்களுக்கு ஆன்மிகப் பிடிப்பு வரும். இலக்கிய நூல்கள் மட்டுமல்ல, 'மந்திரங்கள் என்றால் என்ன, அருளாளர்கள்' போன்று வானதி வெளியீடாக வந்துள்ள அவரது ஆன்மிக நூல்களும் அற்புதமானவை.

புகழ்ச்சியை அவர் விரும்புவதில்லை. சடாரென்று பேச்சைத் திருப்பி இலக்கியத்தில் புகுந்துவிடுவார். (காசு கொடுத்துப் புகழச் சொல்லி, அதே மேடையில் அமர்ந்து அதைக் கேட்டுப் புளகாங்கிதம் அடையும் அற்பர்களின் எண்ணிக்கை பெருகியுள்ள காலமல்லவா இது! சொந்த ஆதாயங்களுக்காக வானளாவச் செய்யப்படும் நரஸ்துதிகளால் தமிழ் மேடைகள் அடைந்துள்ள தீட்டை எந்தப் புனித நீரால் கழுவி இனித் தூய்மைப் படுத்த இயலும்!)

**நா**ன் பணிபுரிந்த நாளிதழில் 'இலக்கிய உலகில்' என்ற தலைப்பில் முதுபெரும் எழுத்தாளர்களைப் பற்றி ஒரு தொடர் எழுதி வந்தேன். அந்த வரிசையில் ஒரு வாரம் அ.ச. பற்றி எழுதினேன். முன் அனுமதி கேட்டால், அவர் ஊக்குவிக்க மாட்டார். எனவே அவரிடம் சொல்லவே இல்லை. அவரது குடும்பத்தில் அவர் மனைவி திருமதி ராஜம்மாள், அவரது செயலாளர் போல் இயங்கும் அவர் புதல்வி சகோதரி மீரா உள்பட எல்லோருக்கும் என்னிடம் அன்புண்டு. சகோதரி மீரா மூலம் அ.ச. புகைப்படம் பெற்றுக் கட்டுரையை வெளியிட்டுவிட்டேன்.

வெளிவந்த பிரதியோடு கட்டுரையைப் படித்துக் காட்டுவதற்காக அவர் வீடு சென்றேன். அதற்குள் பலரும் தொலைபேசி மூலம் அவரிடம் சொல்லியிருக்கிறார்கள். நான் சென்றவுடன், "கம்பனைப் பற்றி எழுது. சேக்கிழாரைப் பற்றி எழுது. என்னைப் பற்றியெல்லாம் ஏன் எழுதுகிறாய்?" என்று சலித்துக் கொண்டார். "எழுதியிருப்பதைப் படித்துக் காட்டட்டுமா?" என்று கேட்டேன். "அது கிடக்கட்டும். விடு. ஏதாவது புகழ்ந்திருப்பாய். கம்பராமாயணத்தில், 'உறங்குகின்ற கும்பகர்ண உன்றன் மாய வாழ்வெலாம்' எனத் தொடங்கும் பாடல் கம்பர் எழுதியதில்லை என்று சொல்லக் காரணம் என்ன தெரியுமா?' எனத் தொடங்கி மீண்டும் இலக்கியத்தில் புகுந்துவிட்டார். நான் சொக்கிப் போய்க் கேட்டுக்கொண்டிருந்தேன். அவர் எங்கும் இலக்கியம்தான் பேசுவார். அவர் எது பேசினாலும் அது இலக்கியம்தான்.

**வ**யதில் அ.ச.வுக்கு இணையான ஆனால் குணத்தில் அவருக்கு இணையில்லாத - இன்னொரு தமிழறிஞர். அவரைப் பற்றியும் கட்டுரை எழுதியிருந்தேன். அவர் தம் 23 பட்டப் பெயர்களையும் நான் குறிப்பிடவில்லையே என்று கோபித்துக்கொண்டார்! நாளிதழில் ஒரு முழுப்பக்கம் தம்மைப் பற்றி எழுதியிருக்க வேண்டும் என்றும் அப்போதுதான் அவர் பெருமைக்கு ஓரளவேனும் நியாயம் செய்ததாக இருக்கும் என்றும் அடக்கத்தோடு புலம்பினார்! லெட்டர் பேடில் தம் பட்டங்களையெல்லாம் வரிசையாகப் போட்டுக் கொள்ளும் சிலரை அறிவேன். பெயரைப் போட்டுக் கையெழுத்திடாமல் தம் பட்டத்தைப் போட்டே கையெழுத்திடும் சிலரையும் அறிவேன். அந்த ஜீவன்கள் இரங்கத் தக்கவர்கள். தம்மைப் பிறர் மதிக்க வேண்டும் என்று அவர்கள் செய்யும் இந்தச் செயலைப் பார்த்துப் பிறருக்கு அவர்களிடம் மரியாதை எழுவதில்லை, இரக்கம்தான் எழுகிறது. ஒன்று புரிகிறது. அறிஞர்களிலும் எழுத்தாளர்களிலும் அறிஞர்களாகவும் எழுத்தாளர்களாகவும் மட்டுமே இருப்பவர்களும் உண்டு. கூடவே அ.ச.ஞா. போல் உயர்ந்த மனிதர்களாக இருப்பவர்களும் உண்டு.

(தொடரும்)



"இருபது பவுன் போடறேன்னு சொல்லிட்டு பதினெட்டு பவுன் தானே போட்டிருக்கீங்கன்னு சம்பந்தி அம்மா ரொம்ப கண்டிஷனா தட்டிக் கேட்பாங்களே...?"

"கேட்கட்டுமே; ரெண்டு பவுன் 'சேதாரம்'னு சொல்லிட்டுப் போறது!"

— சம்பத்குமாரி

# காஸ்ட்ரோவுக்குப் பிறகு....?

கியூபா அதிபர் ஃபிடல் காஸ்ட்ரோ மிகவும் தளர்ந்து போயிருக்கிறார். எழுபத்தைந்து வயதாகிவிட்டது என்பது மட்டும் காரணமல்ல; சமீபத்தில் 'ஸ்ட்ரோக்' வந்து பாதித்ததும்தான் காரணம் என்கிறார்கள்.

ஒரு குறிப்புகூட வைத்துக் கொள்ளாமல் மணிக்கணக்கில் சிம்ம கர்ஜனை மாதிரி பேசிய காஸ்ட்ரோவால் இப்போது சில நிமிடங்கள்கூடப் பேச முடிவதில்லை. சென்ற வாரம் ஸ்பெயின் நாட்டுக்குப் போவதாக இருந்தவர், கடைசி நிமிஷத்தில் கான்சல் செய்து விட்டார். அவர் உடல்நிலையையும் அவர் நடந்து கொள்ளுவதையும் பார்த்தால், எண்பத்தைந்து வயதுக்காரர் மாதிரிதான் இருக்கிறது'' என்கிறார்கள்.

அப்படியானால், அவருடைய இடத்தைப் பிடிக்கப் போகிறவர் யார்?

அவருடைய இளைய சகோதரர் ரவுல் காஸ்ட்ரோதான்! இவருக்கும் வயது எழுபது ஆகிவிட்டது. நாட்டின் ராணுவ தளபதி இவர். ஃபிடல் காஸ்ட்ரோவுக்கு அடுத்த இடத்தில் இருப்பவர். ஆனால்_

அண்ணனிடமிருந்து தம்பி கைக்கு ஆட்சி மாறுவது அவ்வளவு சுலபமாக இருக்கப்போவதில்லை என்கிறார்கள். ஃபிடல் காஸ்ட்ரோ மறைந்தால், அங்கே கம்யூனிஸத்துக்கும் மரண அடி விழும். புரட்சியின்போது மயாமிக்குப் போனவர்கள் எல்லாம், திரும்ப வந்து தங்களுடைய பழைய குடும்பச் சொத்துக்களுக்காகப் போராட நேரிடும்.

அப்படி ஒரு சூழ்நிலை உருவாகும் போது, ரவுல், ராணுவச் சட்டம் கொண்டு வந்து அடக்கப் பார்க்கலாம். பிறகு அயலுறவு அமைச்சர் ஃபெலிப் பெரஸ் ரோக்கை அதிபராக்கலாம். ஃபிடல் காஸ்ட்ரோ பங்கெடுத்துக் கொள்ளும் முக்கிய நிகழ்ச்சிகளில் எல்லாம் அவர்தான் கூடவே இருக்கிறார். அமெரிக்காவுடனான உறவைக் கொஞ்சமாவது சீர் செய்து கொள்ளலாம்.

அட, ரவுல் காஸ்ட்ரோவே இதற்குள் காலமாகிவிட்டால் என்ன நடக்கும்? துணை அதிபர் கார்லோஸ் ஒரு பக்கமும், அயலுறவு அமைச்சர் பெரஸ் ரோக் ஒரு பக்கமும் ஆக மோதல் நிகழும். சமீபத்தில் ஃபிடல் காஸ்ட்ரோவின் அழைப்பின் பேரில் கியூபாவுக்கு விஜயம் செய்த முன்னாள் அமெரிக்க அதிபர் ஜிம்மி கார்ட்டர், காஸ்ட்ரோவின் ஆட்சியைக் குறை கூறிப் பேசியதை அப்படியே டீ.வி.யில் ஒளிபரப்பியதையும், அரசு சார்பு இதழான 'க்ரான்மா'வில் அப்படியே வெட்டாமல், சுருக்காமல் வெளியிட்டதையும்



வைத்துப் பார்த்தால், அடிப்படை சுதந்தரம் கோரி அந்நாட்டில் பத்தாயிரம் பேர் கையெழுத்திட்டுக் கொடுத்த கோரிக்கைக்கு நிச்சயம் பலன் இருக்கும் என்று கருதுகிறார்கள். அப்படி ஒரு நிலை உருவாகும். பட்சத்தில், ஒரு வெளிப்படையான ஆட்சி அமைய வாய்ப்பு இருப்பதாக கியூபாவின் மனித உரிமை மற்றும் தேசிய சமாதான அமைப்பின் தலைவர் கருதுகிறாராம்.

ஆனால் ஒன்று மட்டும் நிச்சயம்: கியூபாவில் மாற்றம் ஏற்படப் போகிறது. அதன் அறிகுறியாக, வயதான புரட்சித் தலைவர்களின் இடத்தில், இளம் தலைவர்கள் கட்சியின் தலைமைப் பொறுப்பை ஏற்று வருகிறார்கள். தேசிய அசெம்பிளியின் அறுநூற்றியோரு உறுப்பினர்களின் சராசரி வயது கூட நாற்பத்து மூன்றுதான். பிராந்தியச் செயலாளர்கள் கூட இளம் தலைமுறையினர்தான்.

புதிய தலைவர்கள் புதிய சிந்தனைகளை அறிமுகப்படுத்தி வருகிறார்கள். புதிய பொருளாதாரக் கொள்கைகளுக்கு, ஃபிடல் காஸ்ட்ரோவின் மறைவுக்குப் பின், வரவேற்பும் இருக்கக்கூடும். வெளிநாட்டு முதலீடுகள் வரத் துவங்கும். வர்த்தகம் பெருகும். அதற்கு 'சீனா மாடல்' என்று இப்போதே பெயரும் சூட்டிவிட்டார்கள் கியூபாவினர்.

காஸ்ட்ரோ மறைவுக்குப் பின் என்ன நடக்கும் என்று திட்டமிட்டுச் சொல்ல முடியாதபடி இருந்தாலும், மாற்றங்கள் நிச்சயம் என்கிறார்கள். சுகாதாரம், கல்வி, நட்பு - இவை மூன்றும் கியூபாவின் அடையாளங்கள். அவை மாறலாகாது என்பதே பலரின் கருத்து.

— சாருகேசி

நன்றி : நியூஸ்வீக்

# "அம்மாவுக்குத்தான் ராயல்டி!"

"சைதாப்பேட்டை சமாசாரம், உனக்கு ஒரு சேவல் சண்டை மாதிரி; அது ஜனநாயகத்திற்குத்தான் துக்க தினம்; உன் ஜனனத்திற்கு அல்ல" என்று கவிஞர் வாலி, கவிதை பாடியபோது அரங்கமே அதிர்ந்தது. அடுத்து பேசிய அப்துல் ரகுமான், வைரமுத்து ஆகியோர் "எங்களைப் பிறந்த நாள் கொண்டாட வேண்டாம் என்று சொல்வதற்கு நீங்கள் யார்?" - என்று கலைஞரிடம் செல்லமாகச் சண்டைக்கே போய்விட்டார்கள். "இதென்னப்பா வம்பா போச்சு; ஒரு குறிப்பிட்ட காரணத்திற்காக என் பிறந்த நாளைக் கொண்டாட வேண்டாம் என்று சொல்ல எனக்கு உரிமையில்லையா? நான்தானப்பா பிறந்தவன்" என்று கலைஞர் சொன்னபோது சிரிப்புடன் கைதட்டல்.

கலைஞரின் 'மீசை முளைத்த வயதில்' கவிதை புத்தகம் வெளியீட்டு விழா நடைபெற்றது, அண்ணா அறிவாலயத்தில் உள்ள கலைஞர் அரங்கில். அன்று இடைத்தேர்தல் முடிவுகள் வெளிவந்த நாள். அது தவிர சைதைப்பேட்டை தேர்தல் பற்றி, மத்திய பார்வையாளர்கள் விசாரணை நடத்திய நாள்.

அரங்கம் நிரம்பி வழிந்தது. ஆனால் உற்சாகம்தான் பொங்கி வழியவில்லை. தொண்டர்கள் கிசு கிசு குரலில், சைதை தேர்தலன்று கழகப் பிரமுகர்கள் எப்படி ஓடி ஒளிந்தார்கள் என்பதைப் பரிமாறிக்கொண்டார்கள்.

அப்துல் ரகுமானின் நீண்ட விமர்சனம் கொஞ்சம் போரடிக்கவே பலருக்குக் கொட்டாவி. கலைஞரின் இதே கவிதைப் புத்தகத்தைச் சிறு வயதில் வாங்கிப் படிப்பதற்காக, மதுரை செல்லும் பஸ்ஸின்



நடத்துனரிடம் பணத்தைக் கொடுத்து வாங்கி வரச் சொல்லிவிட்டு பஸ் ஸ்டாண்டிலேயே தான் காத்திருந்ததை உணர்ச்சிப் பெருக்குடன் சொன்னார் வைரமுத்து. 'நான்

கவிஞனுமில்லை; நல்ல ரசிகனுமில்லை' என்று அடுத்த வரியைக் கண்ணியமாகச் சொல்லாமல் விட்டு விட்டார் பேராசிரியர். கலைஞரின் இந்தக் கவிதைகளைப் படித்தால் 'மூன்றாவது வரியான 'காதலெனும் ஆசையில்லா பொம்மையுமில்லை' என்று கட்டாயம் சொல்லத் தோன்றும். மனிதன் மீசை முளைத்த வயதில் எத்தனைப் பெண்களைக் காதலித்தாரோ'' என்று வைரமுத்து கிண்டல் செய்தபோது அரங்கில் சிரிப்பலை!

**க**னிமொழி நடத்தும் தமிழ்க்கனி பதிப்பகம், மற்ற எழுத்தாளர்களின் நூல்களையும் வெளியிட இருக்கிறதாம். தவிர ஏற்கெனவே பதிப்பித்தக் கலைஞரின் நூல்களுக்கு மறுபதிப்பும் வருகிறதாம்.

''மீசை முளைத்த வயதில்' தொகுப்பைப் பொறுத்தவரை, தொகுத்து நல்ல கெட்-அப்புடன் அதனை வெளிக்கொண்டு வந்தவர் வைரமுத்துதான். அவருக்குத்தான் நன்றி சொல்ல வேண்டும்' என்றார் கனிமொழி.

"கலைஞரின் பழைய ஸ்டைல் கவிதைகள் இந்தக் காலகட்டத்தில் உரிய




பதிப்பகம் சார்பாக வெளியிடப்பட்டது கலைஞரின் இந்தப் புத்தகம்.

''நூலாசிரியரான அப்பாவுக்கு ராயல்டி கொடுப்பீர்களா?'' என்று கனிமொழியிடம் கேட்டோம்.

''அப்பாவுக்கு ராயல்டி இடையாது. அம்மாவுக்கேதான் ராயல்டி'' என்றார் கனிமொழி.

அப்பாவுக்குக் கொடுத்தால் என்ன? அம்மாவுக்குக் கொடுத்தால் என்ன?

இதுவரை குறளோவியம் உட்பட கலைஞர் எழுதிய புத்தகங்களை மட்டும் வெளியிட்டு வந்த தமிழ்க்கனி வரவேற்பைப் பெறுமா?" என்றபோது கனிமொழி பட்டென்று சொன்னார்: "கவிதைப் புத்தகங்களுக்கு உள்ள வரவேற்பை விடுங்கள். அடிப்படையாகத் தமிழ் மொழியை அறிந்து கொள்ளும் ஆர்வமே, இப்போதைய சூழலில் குறைந்துகொண்டு வருகிறதே! எனவே முதலில் தமிழர்களிடமிருந்து தமிழ், அகலாவண்ணம் காப்போம். பின் எல்லா தமிழ்ப் புத்தகங்களும் போற்றப்படும்."

— ப்ரியன்

படம்: யோகா

# மனம் உருகுதே...

● பாலகுமாரன்

4

"எங்க சித்தப்பா பசங்க எங்கப்பா கிட்ட சிலேட், பல்பம் நோட்புக்குன்னு படிப்புக்கு வாங்கினவாதான். எங்கப்பா போட்ட பேண்ட் சட்டையை வாங்கிண்டு காலேஜ் போனவாதான். அஞ்சு பத்துன்னு அப்பப்போ கடன் வாங்கினவாதான். இன்னிக்குச் சௌகரியமா இருக்கா. செய்ய லாமோன்னோ. என்னமோ செய்ய மனசு வரலை. எங்களுக்குப் பொண்ணு இருக்கு. நாங்க என்ன ராதாகிருஷ்ணன் மாதிரி வாரி வழங்க முடியுமா அப்படின்னு ஒரு ஒன்னுவிட்ட அண்ணாவோட பொண் டாட்டி கேட்டாளாம்."

"யாரது? கறுப்பா பெரிய விழியா, களையா இருந்தாளே", ராதாகிருஷ்ணன் ரேவதியைப் பார்த்து வியப்பாய்க் கேட்டார்.

"அவதான். ராதாகிருஷ்ணன் நிறைய சம்பாதிக்கறார். கொடுக்கறார். ராதா கிருஷ்ணன் பண்ண மாதிரி நீயும் பண்ணுன்னா, விரலுக்குத் தகுந்த வீக்கம் தானே அப்படின்னு வேற சொன்னாளாம்."

"இதுல ஏன் என்னைப் பிடிச்சு இழுக்கறா?"

"அதான் சொல்றனே. பொறாமை!"

"எதுக்குப் பொறாமை?"

"இந்தக் கேள்விக்கு என்ன பதில் சொல்றது. "எதுக்குன்னு சொல்வானா? தானா வரும் பொறாமை. இன்னொருத்தர் நன்னா இருந்தா கஷ்டமாத்தான் இருக்கும்."

"என்னடி அநியாயமா இருக்கு. நம்மள விட வசதியா இருக்கறவா நிறைய பேர் இல்லியா. நாம அவாளபார்த்துப் பொறாமை படறோமா."

"உங்களுக்குப் பொறாமை படத் தெரியாது. அதனால எல்லாருக்கும் தெரியாதுன்னு நினைக்காதீங்கோ."

"நம்மளப் பார்த்து பொறாமை படற அளவு என்ன இருக்கு?"

"உங்க உத்தியோகம் இருக்கு. உங்க பேச்சுல இருக்கற கனிவு இருக்கு. வெள்ளை வெளேர்னு வேட்டியும் சட்டையுமா நீங்க நிக்கறதுல இருக்கு. என் வைர தோடுல இருக்கு. ஏழு சவரன் ஹாரத்துல இருக்கு. ஒன்பது சவரன் தாலிக்கொடியில இருக்கு."

"எனக்குப் புரியவேயில்லை ரேவதி. உத்து உத்து நகையைப் பார்த்து இது வைரமா. இது எத்தனை பவுன் அப்படின்னு கேட்டா பொறாமைப்படுவா?"

"அதுவொரு பழக்கம். அதுதான் அவா மனசு. கொண்டுபோய் சம்பந்தி ஆத்து பொண்ணுக்குப் பட்டுப்புடவைய

கொடுக்கறானே. என் பட்டுப்புடைவை எரிஞ்சுபோயிருந்தா கொடுத்திருப்பாளா. அப்படின்னு இன்னொருத்தி கேட்டாளாம்."

"அப்படியா?"

"நான் சொன்னேன். நெருப்புலகாட்டி எரிச்சுக்கோ. என்ன பண்றதுன்னு நாங்க அப்புறம் முடிவு பண்றோம்னேன்."

"நெஞ்சுக்கு நேராவா 'பேசின?"

''இல்லை. எங்கம்மா சொன்னா எங்கம் மாகிட்ட சொன்னேன்."

"ஆஹா.... இந்தப் பொறாமையெல்லாம் கேட்கறதுக்கே நன்னாயிருக்கு. அப்புறம் வேற எதைப்பத்தி பொறாமை?"

"சுபத்ராவைப் பார்த்துப் பொறாமை."

''ஏன். அந்தக் குழந்தை என்ன பண்ணித்து?"



''பதிமூணு வயசுக்கு நிருநிருன்னு வளர்ந்திருக்கு இல்லியா? என்னடி ப்ளஸ் டூ படிக்கிறியான்னு கேட்கறா ஒரு மாமி."

"சே.. எந்த நாய் அது?"

ராதாகிருஷ்ணன் எழுந்து உட்கார்ந்து கொண்டார்.

"உங்களுக்குக் கோவம் வருதோன்னோ. அதனாலதான் சொல்றதில்லை."

"சொல்லாம இருக்கப்படாது ரேவதி. அங்க என்ன நடந்ததுன்னு எனக்குத் தெரிஞ்சே ஆகணும். நான் பாட்டுக்கு வெகுளியா எல்லார்கிட்டயும் பேசிண்டிருக்கேன். இப்படியெல்லாம் பேசறாங்கன்னு எனக்குத் தெரியவே தெரியாது."

''இதுக்கு அப்புறம் அவா பேசினது

"நாம யாருக்கோ கொடுக்கறோம். யாரோ வாங்கிக் கறா. இவாளுக்கு என்ன."

''அப்படி கிடையாது. உலகம் அந்த மாதிரி இல்லை. நீங்க கொடுத்தாலும் பேசுவா. கொடுக்காட்டாலும் பேசுவா."

கேட்டா இன்னும் கோபப்படுவேன்."
"என்ன பேசினா சொல்லு."
"வேணாம். விட்ருங்கோ."
"சொல்லு ரேவதி."
ராதாகிருஷ்ணன் இலேசாக அதட்டினார்.
"இல்லை. நான் எய்த் ஸ்டாண்டர்ட் படிக்கிறேன் அப்படின்னு குழந்தை சொல்லியிருக்கா. அப்படியா. ரெண்டு மூணு க்ளாஸ்ல ஃபெயில் ஆயிட்டியா அப்படின்னு அந்த மாமி கேட்டா."
"அடி செருப்பால. நம்ம குழந்தை பெயில் ஆகற குழந்தையா?"
"பார்த்தேளா. பல்லைக் கடிச்சுண்டு கத்தறேளே தேவைதானா இது?"
"சரி. கத்தலை" சட்டென்று ராதாகிருஷ்ணன் தன்னைச் சரி செய்து கொண்டார்.
"ஏன் அப்படி கேட்கணும்?"
"இன்னொரு மாமி சொல்றா. தயிரும், பாலும், சாக்லெட்டுமா தின்னு நிகுநிகுன்னு வளர்ந்திருக்கு. அதனால நீங்க அவ ப்ளஸ் டுவான்னு கேட்கறேன். அவ சின்ன குழந்தை தான் அப்படின்னு சொன்னாளாம்."
"அடிச் சண்டாளிகளா. என்னாடி உங்க வீடு இப்படியிருக்கு?"
"எல்லார் வீடும் அப்படித்தான். பத்து பேர் நன்னா இருந்தா இன்னொரு பத்துபேர் கெட்டவாளா இருப்பா. இதுதான் உலகம்."
"ம்... அப்புறம் வேற என்ன?"
"இன்னொரு வார்த்தையும் வெளிய வந்தது. அதைச் சொன்னா நீங்க என்னையே செருப்பால அடிப்பேள்."
"சீ.. நான் உன்னை என்னிக்கு அடிச்சிருக்கேன்? சொல்லு. அங்க பேசினதை மறைச்சா தான் எனக்குக் கோபம் வரும். என்ன பேசினான்னு சொல்லு. நான் உலகம் தெரிஞ்சுக்க வேண்டாமா?"
"வேண்டாம்?" எதுக்கு அந்தச் சாக்கடைய நோண்டணும்?"
"இல்லை ரேவதி. நான் தெரிஞ்சுக்கணும் சொல்லு."
"மச்சினிக்குச் செய்யறதுன்னா ஒரு குஷி தான். அப்படின்னு ஒரு சித்தப்பா சொல்லியிருக்கார்."
"நிஜமா? யாரது?"
"உங்ககிட்ட உட்கார்ந்து பேசினாரே அந்த பொக்கவாய். அதுக்கு அம்பத்தோரு வயசுதான் ஆகறது. ஆனா, எல்லா பல்லும் பிடுங்கி அறுவத்தஞ்சு வயது கிழவன் மாதிரி ஆயிட்டார்."
"எங்கிட்ட கையக் கூப்பிண்டு ரொம்ப பணிவா பேசினார் ரேவதி."
"அதெல்லாம் வேஷம்."
"என்ன அர்த்தத்துல இப்படிச் சொல்றா?"
"எல்லா அர்த்தத்துலயும்தான்."
"அசிங்கமா சொல்றாளா?"
"ஒரு மாதிரி அசிங்கம்தான்."
ரேவதி அவர் மீது சாய்ந்து கொண்டாள்.
"என்னடி இது. சாருமதி என் குழந்தைடி. சுபத்ராவைவிட ஏழு வயசு பெரியவ. சுபத்ரா புடைவை கட்டினா சாருமதிக்கு அக்கா மாதிரியே இருப்பா. அதைப் போய் இப்படிப் பேசறாளே."
"உங்களை யார் பண்ணச் சொன்னா? நீங்களே வந்து அரைப் பவுன் தரேன் அப்படின்னு சொல்லிட்டு ஓடிட்டு போயிருக்க வேண்டியதுதானே. ஆறுபவுன் தந்தாக்க விடுவாளா? மனுஷா வாயில விழுந்து எழுந்திருக்க வேண்டியதுதான்."
"செஞ்சாலும் தப்பு. செய்யாட்டாலும் தப்பு இல்லை."

> "வர வர கடன் கேட்கிறவனெல்லாம் ரொம்ப பொருளாதாரப் புலிகளாயிட்டாங்க..."
> "எப்படி?"
> "வராக் கடன் திட்டத்தின் கீழ் கடன் கேட்கிறாங்க!"
> — எஸ். தமிழ்மணி

"செய்துட்டு வெளிய சொல்லாத இருக்கணும்."
"நான் நினைச்சேன்; எதுக்காக வெளிய சொல்லணும் அப்படின்னு நீதான் இதைப் பெரிசு பண்ணினே."
"நான் வேணும்டாலும் பெரிசு பண்ணினேன்."
"ஏன்?"
"எங்கப்பாவை இழிவா பேசினா. காசு சம்பாதிக்க துப்பு இல்லாதவன்னு சொன்னா. எப்போப் பார்த்தாலும் மந்திர ஜபம், வாராஹி பூஜை, லட்சுமி பூஜைன்னு உட்கார்ந்துருக்கான். இந்தக் கோயில், அந்தக் கோயில்னு போறான். பொண்ணப் பெத்தவன் இப்படிப் பூஜை புனஸ்காரம்னு அலையலாமா? சாயந்தரம் வேற எங்கயாவது போய் கணக்கு எழுதியிருந்தா இன்னும் நாநூறு ரூபா வந்திருக்குமோன்னோ. அதைச்

சேர்த்து வச்சிருந்தா இந்த ஆறுபவுன் போட்டிருக்கலாமோன்னோ அப்படின்னு கணக்குச் சொல்றா."

"இவங்களுக்கென்ன இதைப்பத்தி."

ராதாகிருஷ்ணன் கொஞ்சம் மேலும் குரல் உயர்த்தினார்.

"அதான் சொன்னேனே. பொறாமை. இதையும்விட இன்னொரு பேச்சு வந்தது."

"சொல்லு... சொல்லு..."

ராதாகிருஷ்ணன் மனைவியை அணைத்துக் கொண்டு ஆர்வமானார்.

"பதினஞ்சு பவுன் போடறேன். அப்படின்னு சொல்லி அவாளும் ஒத்துண்டாச்சு. எதுக்குத் தேவையில்லாத இன்னொரு ஆறுபவுன். போடமுடியாது அப்படின்னு கட் அண்ட் ரைட்டா சொல்லவேண்டியது தானே. எங்ககிட்ட சொல்லியிருந்தா நாங்க போய் நின்னு சண்டை போட்டு இதுக்கு மேல ஒரு கிராம் தங்கம்கூட தரமாட்டோம்னு சொல்லியிருப்போமா இல்லையா. உண்டு இல்லைன்னு பண்ணியிருப்போமே அப்படின்னு ஒரு சித்தப்பாவோட பொண்ணாட்டி உரத்த குரல்ல சம்பந்தி காதுல விழும்படியா பேசினா. எங்கம்மா பதறிப் போயிட்டா. இழுத்துக் கொண்டு போய் கொல்லையில் நிக்க வச்சு உன் கால்ல விழுந்து நமஸ்காரம் பண்றேன். தயவு செய்து இப்படி கத்தாத. சம்பந்தி ஆத்து காதுல விழும்படி பேசாத. அதுக்கும் உனக்கும் சம்பந்தமேயில்லை வாயைப்பொத்திண்டு இருன்னு கைகூப்பி அழுதா."




"எதுக்கு ரேவதி உங்கம்மா அழணும். என்ன அநியாயம் இது?"

"அதான் சொன்னேனே பொறாமை. எப்படியாவது ஏதாவது ஒரு சண்டையை ஏற்படுத்தி அங்க ஒரு கலாட்டா பண்ணி, அந்த கலாட்டால ஊர்ல எல்லாருக்கும் பரப்பி நாங்க கல்யாணத்துக்குப் போயிருந்தோமா. ஏண்டா அந்தக் கல்யாணத்துக்குப் போனோம்னு ஆயிடுத்து. அப்படின்னு வம்பு பேசும்."

"அவரும் ஒன்னுவிட்ட சித்தப்பாதானா?"

"ஆமா, எங்கப்பாவோட பொறந்தவா ஏழுபேர். ஏழுபேரும் ஏழுபேர்வீட்டுப் பசங்களும் வந்திருந்தா."

"உங்க பக்கம்தான் ஜாஸ்தி கும்பல், இல்லை?"

"ஆமா."

"எனக்குச் சொல்லிக்கறாமாதிரி உறவே இல்லியே அப்படின்னு ஒரு வருத்தம் இருக்கு ரேவதி. நிறைய சித்தப்பா. நிறைய பெரியப்பா. நிறைய மாமா. நிறைய அத்தைன்னு ஒரு பெரிய கும்பல் எனக்கு ஏன் இல்லாத போச்சுன்னு நான் வருத்தப்பட்டிருக்கேன். இப்போ நீ சொல்றதைப் பார்த்தா நல்ல வேளை, தப்பிச்சேன்னு தோன்றது."

"அப்படிச் சொல்ல முடியாது. நிறைய உறவுகள் இருந்து அதுல நல்லவாளும் இருந்தா அதை மாதிரி சுகம் உலகத்துல எதுவும் இல்லை. குழந்தேளுக்குப் பாருங்கோ எங்கயாவது போக முடியுமா? நாங்கல்லாம் போயிருக்கோம். இந்த சித்தப்பா ஆத்துக்கு, அந்த மாமா ஆத்துக்கு, இந்த அத்தை ஆத்துக்குன்னு. குழந்தேளை நாம கூட்டிண்டு போனாதானே உண்டு."

"வேணாம். வேணாம். எங்கயும் போய் இதுகள் தங்க வேண்டாம். இந்த மாதிரி விஷமமான பேச்சையும் விஷத்தனமான புத்தியையும் கத்துக்க வேண்டாம். அதுகள் என்னை மாதிரியே வெகுளியா இருந்துட்டுப் போகட்டும்."

"அதுவும் தப்பு. எதிராளி என்ன பேசறான்னு புரிய வேண்டாமா. தந்திரமா பேசறது தெரிய வேண்டாமா?"

"எனக்குத் தெரியலைங்கறியா?"

"அவ்வளவா தெரியாதுங்கறேன்."

"உங்களுக்குப் புத்தி எப்பவும் உங்க வேலையிலதான் இருக்கும். உள்ள நுழைஞ்சவுடனே ஃபோன் பண்ணி நான் மெட்ராஸுக்கு வந்தாச்சுன்னு எத்தனை உண்மையா சொல்றேன். நாளைக்கு காலையில நான் வந்துடறேன்ப்பா அப்படின்னு எப்படி பரபரக்கிறேன். இந்த மாதிரி யார் இருக்கா? கல்யாணத்துக்குப் போயிட்டு வந்தேன். கையத் தூக்க முடியலை. காலைத் தூக்க முடியலை நாளைக்கு லீவுன்னு தானே

சொல்வா."

"அதை யாராவது க்ளார்க் சொல்லலாம். பியூன் சொல்லலாம். இல்லை, அரசாங்க ஆபீஸ்ல உட்கார்ந்துண்டிருக்கறவா சொல்லலாம். நான் சொல்ல முடியாது. அந்த ஆபீஸ் என் தலையிலதான் ஓடறது. ஒவ்வொன்னும் நான் பார்த்துதான் பண்ணணும். அதுக்குத்தான் நல்ல சம்பளம். அதுக்குத்தான் மரியாதை. அந்த நல்ல சம்பளம். அந்த மரியாதை வந்ததுனாலதான் இப்படி ஆறுபவுன் டக்குனு பண்ண முடியறது. மத்தவா என்ன வேணாலும் பேசிட்டுப் போகட்டும் ரேவதி. சாருமதிக்கு என்னுடைய அன்பளிப்பா பத்தாயிரம் ரூபா காசும் ஆறு பவுன் நகையும் கொடுத்தது எனக்கு ரொம்ப சந்தோஷம். குழந்தை நமஸ்காரம் பண்றபோது எனக்குள்ள குழைஞ்சு போயிடுத்து. பகவானே இந்தப் பொண்ணுக்கு நான் பண்ணியிருக்கேன். என் பொண்ணுக்கு எந்தக் குறையுமில்லாம நீ கல்யாணம் பண்ணி வை அப்படின்னு ஒரு வேண்டுதல்தான் ஓடித்து."

"கவலையே படாதீங்கோ. நம்ம குழந்தை கல்யாணம் ஜாம்ஜாம்னு நடக்கும். காசு நகை பாத்திரம் அதெல்லாம் முக்கியமே இல்லை. நல்ல புருஷனா வரணும். கனிவா பேசறவனா வரணும். கல்யாணம் எப்படியும் நடந்துடும். ஆனா ஒவ்வொரு பொண்ணும் நல்ல புருஷனுக்குத்தான் தபஸ் பண்ண வேண்டியிருக்கும். நான் ஏன்னு சொல்லட்டுமா."

"சொல்லு."

ராதாகிருஷ்ணன் அவளின் இடுப்பை அணைத்துக் கொண்டு உற்றுப்பார்த்தார்.

"போன ஜன்மத்துல என்ன தபஸ் பண்ணேன். என்ன பூஜை பண்ணேன்னு தெரியலை. எனக்கு நீங்க பெரிய கொடுப்பனை. எனக்கு நீங்க பெரிய சம்பத்து. ரொம்ப அதிர்ஷ்டக்காரி."

அவள் முன்னேறி, அவரை மார்புடன் இறுக்கத் தழுவிக் கொண்டாள்.

"இதையேதான் நானும் சொல்லணும். அற்புதமான ஒரு பொண்டாட்டி கிடைச்சிருக்கே. அழகா குடித்தனம் பண்ற. என் புருஷன், என் குழந்தேன்னு கொண்டாடிண்டு இருக்கே. நூத்தி மூணு டிகிரி ஜுரம் இருந்த போதும் எழுந்து சமைச்சுட்டு தான் போய்ப் படுக்கற. எத்தனையோ விதமான தியாகம். எத்தனையோ விதமான விட்டுக்கொடல். எல்லாம் இருக்கு உங்கிட்ட. நான் கொடுத்த புடைவைய அந்தப் பொம்மனாட்டிகிட்ட கொடுன்னு சொன்னாக்க டக்குனு கொண்டு போய்க் கொடுக்கறியே எவ செய்வா? அதெல்லாம் கொடுக்க முடியாதுன்னு அந்தச் சபையில் சொல்லியிருந்தா நான் எங்கபோய் வச்சுப்பேன் என் மூஞ்சிய. நீ சொன்னா மாதிரி அவளுடைய புடைவை ஆயிரத்து ஐந்நூறு ரூபா. உன் புடைவை மூவாயிரம் ரூபா. கொடுக்க மனசு வருமா? ஒரு வார்த்தை சொன்னதும் டக்குனு செய்யறியே. அது எனக்கு எவ்வளவு பெரிய மரியாதை. நீ கிடைச்சதுக்கு நான் கொடுத்து வச்சுருக்கணும் ரேவதி."

அவர் அணைத்துக் கொண்டார்.

அவர்கள் அன்பினால் கட்டுண்டு கிடந்தார்கள். ரேவதி, ராதாகிருஷ்ணன் இதழை முத்தமிட்டாள். மூச்சு முகத்தில்பட பேசினாள்.

"சுபத்ராவுக்குப் பதிமூணு வயசு. இந்த மாசம் இருவத்தஞ்சாம் தேதி நமக்குக் கல்யாணமாகி பதினாலு வருஷம் பூர்த்தியாகறது. ஒரு சின்ன மனஸ்தாபம் கூட

## பரமஹம்சர்

ஒரு பணக்கார பக்தன் ராமகிருஷ்ணருக்கு ஆயிரம் பொற்காசுகளை அளிக்க முன் வந்தான்.

''எனக்கு அதனால் பயன் ஒன்றுமில்லை. இருந்தாலும் உன் மனம் புண்பட வேண்டாம் என்பதற்காகப் பெற்றுக் கொள்கிறேன்'' என்று சொன்ன ராமகிருஷ்ணர், ''இனி இவை என்னுடையவை தானே?'' என்றார்.

''ஆம் அய்யா அவற்றை நான் உங்களுக்கே கொடுத்து விட்டேன்'' என்றான் பக்தன்.

''அவற்றை நான் என்ன வேண்டுமானாலும் செய்யலாமா?'' என்றார்.

''தாராளமாக'' என்றான்.

''அப்படியானால் எனக்கு ஓர் உதவி செய்யுங்கள். இந்தக் காசை எடுத்துச் சென்று கங்கை நதியில் போட்டுவிட்டு வாருங்கள்'' என்றார்.

அவன் அதிர்ச்சி அடைந்தான். ஆனாலும் அவனால் ராமகிருஷ்ணர் வார்த்தையைத் தட்ட முடியவில்லை. ஏனெனில் அது இப்போது அவரது காசு அல்லவா?

அவன் காசுகளோடு கங்கை கரைக்குப் போனான். அரை மணி நேரம் ஆயிற்று. ஆள் திரும்பவில்லை.

ராமகிருஷ்ணர் ஓர் ஆளை அனுப்பி "அவனைப் பார்த்து வா" என்றார்.

அந்த ஆள் கங்கை கரைக்குப் போய் பார்த்துவிட்டு வந்து, "அய்யா அவன் ஒவ்வொரு காசாக வீசிக் கொண்டிருக்கிறான். பாதிகூட வீசவில்லை" என்றான்.



"மீண்டும் போய் அவனை அழைத்து வா" என்றார். அழைத்து வந்தான்.

அவனிடம் "என்ன முட்டாள்தனமான வேலை செய்து கொண்டிருக்கிறாய்? நான் உன்னை அந்தக் காசுகளை கங்கையில் வீசியெறியச் சொன்னேன். நீ ஏன் எண்ணிக் கொண்டிருக்கிறாய்" என்றார் ராமகிருஷ்ணர்.

அவன் கூறினான், "பழக்கம் காரணமாகத்தான். நான் ஒவ்வொரு நாளும் ஒவ்வொன்றாகச் சேமித்து வைத்தேன். உங்களுக்கு ஆயிரம் காசுகளைக் கொடுக்க வேண்டும்என்பது என் ஆசை" என்றான்.

"ஒரே நேரத்தில் அனைத்தையும் சம்பாதித்து இருந்தால் நீ எண்ணுவது பொருத்தமாகும். அனைத்தையும் இழக்கும் போது எண்ணிக் கொண்டு இருப்பது என்பது மூடத்தனம். ஒரே தடவையாக அனைத்தையும் தூக்கியெறிந்து விட்டு வா" என்றார் ராமகிருஷ்ணர்.

இல்லாம நாம வாழ்ந்திருக்கோம். நமக்குள்ள சண்டை வந்திருக்கு. அது அன்பால வந்த சண்டை. நீங்க மத்தியானம் சாப்பிட லைன்னு நான் கோச்சுண்டிருக்கேன். நீ ஏண்டி சரியா தூங்கலைன்னு என்னைத் திட்டியிருக்கேன். இந்தச் சட்டைய போடாதீங்கோ உங்களுக்கு நன்னாயில் லைன்னு நான் கத்தியிருக்கேன். ஏண்டி பழம்புடைவையைச் சுத்திண்டு அலையற பளிச்சுனு புடைவை உடுத்தக்கூடாதா அப்படின்னு நீங்க கோச்சுப்பேள். இதுதான் நடந்திருக்கே தவிர அவசரப்பட்டோ, ஆவே சப்பட்டோ வெறுத்தோ நாம ஒருத்தரை யொருத்தர் இழிவு படுத்திண்டதே இல்லை. சொச்ச காலமும் பகவானே இப்படியே போகணும்னு ஒரு வேண்டுதல் இருக்கு. இத்தனை பேசிட்டதால நான் இன் னொன்னும் சொல்றேன். நாம பொண் குழந்தை வச்சுண்டிருக்கோம். இன்னும் பத்து வருஷம் கழிச்சு கல்யாணம் பண்றதாகவே வச்சுக்குவோம். அதுக்குண்டான தங்க நகையோ வெள்ளிப்பாத்திரம்மா அப்பா வாங்கப்படாது. இப்பவே வருஷா வருஷம் சுபத்ராக்குன்னு வாங்கிச் சேர்த்துடணும். பஞ்சபாத்திர உத்தரணி, வெள்ளியில நெய் ஊத்தறதுக்கு கரண்டியோட சின்ன பக்கெட் அப்படின்னு வாங்கி வச்சுடணும்."

"செய்துடலாம்."

"இதுவரைக்கும் படிப்புக்கெல்லாம் பெரிய செலவில்லை. லெவன்த் படிக்கறவன் ப்ளஸ் டூ தாண்டிட்டான்னா அவனுக்கு ரெண்டு லட்சம் மூணு லட்சம்னு கொடுக்க வேண்டியிருக்கும். அதுக்கும் சேர்த்து வைக் கணும். இதெல்லாம் விட என்னுடைய பெரிய கவலை நாம இன்னும் வாடகை வீட்ல இருக்கோம். ஊருக்கு வள்ளலா உதவிண்டிருக்கோமே தவிர நமக்கு நாம ஒன்னும் செஞ்சுக்கலைன்றதுதான்."

ரேவதி பேசிவிட்டுப் பெருமூச்சுவிட் டாள்.

(தொடரும்)

# மழைக்காலத்துக்கு நல்வரவு!

கேரளப் பகுதியில் 'கணிக்கொன்னா' என்று ஒரு வகை மரம். திடீரென்று இரண்டு மூன்று நாட்களில் கொத்துக் கொத்தாய்ப் பூத்துச் சொரியும். இலைகளே இல்லாமல் மரம் முழுமையும் மஞ்சள் நிறப் பூக்களாலேயே நிரம்பி விடும். பரம்பரை வேளாண்மக்களுக்குத் தெரியும். கணிகொன்னா பூத்துவிட்டால் மழை வரப் போகிறது என்று தயாராகி விடுவார்கள். இது முன்பின்னாகப் பூப்பதை வைத்து மழைக் காலம் முந்தியோ, பிந்தியோ வருகிறது என்பதைத் தெரிந்து கொள்வார்கள்.

தாவரங்கள் பூத்துச் சொரிவதற்கும் காற்றின் வெம்மை கூடுவதற்கும், தொடர்பு உண்டு என்கிறார்கள். மரத்தின் வேர் மண்ணின் ஈரப்பதம் பற்றியும் உணர்ந்து அறியக் கூடியதாம்.

சூரிய சக்தியைத் தாவரம் வாங்கிப் பிரதிபலிக்கக் கூடிய விகிதத்துக்கு 'அல்பீடோ' என்று சொல்வார்கள். மண்ணின் ஈரப்பதம் இந்த அல்பீடோவை அறிய உதவுகிறது.

பருவ நிலை மாறுபாடுகளை ஆராய்கிறவர்கள் கடந்து போன தொண்ணூறு ஆண்டுகளில் பெய்த மழை அளவுகளைக் கணக்கில் எடுத்துக் கொள்வார்கள். இதை முப்பது ஆண்டுகள் கொண்ட மூன்று சகாப்தங்களாகப் பிரிக்கிறார்கள். 1895 - 1924 சகாப்தத்தில் மிக அதிகமாக ஒன்பது வறட்சி காணப்பட்டது. 1925 - 1954 சகாப்தத்தில் மிகக் குறைவாக இரண்டு வறட்சி மட்டுமே நேர்ந்துள்ளது. 1955 - 1984 சகாப்தத்தில் மறுபடியும் இந்த வறட்சி நிலை எட்டாக உயர்ந்துள்ளது என்று கணக்கிட்டிருக்கிறார்கள். அடுத்த சகாப்தம் இன்னும் முடியவில்லை.

பன்னிரண்டு நூற்றாண்டுகளுக்கு முன்னால் மகாகவி காளிதாஸர் எழுதியுள்ள கவிதையொன்றில் இப்போதைய நாக்பூர் அருகிலிருந்திருக்கக் கூடிய ராம்டேக் என்னுமிடத்தில் மழைக்காலம் தொடங்கியதைப் பதிவு செய்திருக்கிறார்; 'ஆஷாடஸ்ய ப்ரதம திவஸே' என்று! இது ஜூன் 22ம் தேதி வரும். கேரளத்து நாட்டுப்புற இலக்கியங்களிலும் மழைக்காலம் 'திருத்திக ஞாயத்து வேள'வில், அதாவது ஜூன் முதல் நாள், தொடங்குவதாய்க் குறிப்பிடப்படுகிறது. பல நூற்றாண்டுகள் ஆனபின்பும் இதில் பெரிய மாற்றம் இல்லை என்பது வியப்புக்குரிய செய்தி.

திபெத்திய பீடபூமி உள்ளிட்ட ஆசியாவின் நிலப்பகுதிக்கும், இந்தியப் பெருங்கடல், பசிபிக் பெருங்கடல் இவற்றுக்கும் இடையே உள்ள வெப்ப அளவு மாறுபாட்டின் அடிப்படையில் மழைக்காலச் சுழற்சி ஏற்படுகிறது. வடமாநிலங்களின் மழைப்பகுதிகளில் அமிழ்ந்து கிடக்கும் வெப்பம் பெரும் அளவில் வெளிக்கிளம்புவதாலும் மழைக்காலத் தொடக்கம் மாறுபடுகிறது.

அண்மையில் ஆந்திரப் பகுதியில் அபரிமிதமாக வீசிய அனல் காற்று, மியான்மர், தென் சீனக் கடல் பகுதிகளின் பருவ நிலை மாறுபாட்டின் விளைவாக இருக்கலாம் என்கிறார்கள். மியான்மரின் மேற்பகுதியில் எழுந்த அபரிமிதமான காற்று

ஆந்திரப்பிரதேசத்தின்மீது வந்து இறங்கியது. அதன் விளைவாக வெப்ப அளவு அபரிமிதமாய்க் கூடியது என்று புனாரிடா பல்கலைக்கழக அறிஞர் டி.என். கிருஷ்ணமூர்த்தி தெரிவிப்பதாய்ச்

பகுதியில் இது சற்றே குறைவாக 99 சதவிகிதம் இருக்கும் என்று எதிர்பார்க்கலாம். தொடர்ந்து பதினான்காவது ஆண்டாக இந்த ஆண்டும் தென் மேற்குப் பகுதியின்



சொல்கிறது 'ஹிந்து' வில் வெளியாகியுள்ள செய்தி.

1901 - 1970 ஆண்டுகளின் சராசரி மழை அளவை ஒரு குறியீடாக வைக்கிறார்கள்.

இந்த ஆண்டு, இந்தியா முழுமைக்கும் இந்த அளவில் 101 சதவிகிதம் மழை இருக்கலாம் என்கிறார்கள். தமிழகம், கர்நாடகம், ஆந்திரம், கேரளம் உள்ளிட்ட

மழைக்காலம் ஒரே சீராக இருக்கும் என்கிறார்கள்.

இந்த இதழ், வாசகர்களின் கரங்களில் கிடைக்கிறபோது, தென்மேற்குப் பருவ மழை கொட்டோ கொட்டென்று கொட்டத் தொடங்கி, மேட்டூர் நீர் மட்டமும் உயரத் தொடங்கியிருந்தால் போதுமே!

**— சுப்ர.பாலன்**

புத்தகம்

## சோ. தர்மன் கதைகள்

கரிசல் எழுத்தாளர்களில் சோ. தர்மனுக்கும் முக்கிய இடமுண்டு. தன் பகுதி மக்களின் வாழ்க்கை அவலங்களை மக்கள் மொழியிலேயே படைத்திருக்கும் ஆசிரியரின் இரண்டு சிறுகதை தொகுப்புகள் மற்றும் சில கதைகளை உள்ளடக்கியது இத்தொகுதி. மண் சார்ந்த கதைகளுக்கு நடுவே சின்ன தடுப்பு மாதிரி அமைந்திருக்கிறது நவீன சிறுகதையாக அவர் எழுதியிருக்கும் கதைகள். அழகான வடிவமைப்புடன் வந்திருக்கிறது புத்தகம்.

*மருதா, 3. கீழ்த்தளம், ரியல் ரீஜென்ஸி, 102, பாரதி சாலை, சென்னை – 14. விலை ரூ. 140/-*

## கீதாயோகம் – சுத்தானந்த பாரதியார்

ஆசிரியர் எழுதியுள்ள பகவத் கீதையின் மூலமும் உரையும் இந்நூல். கீதைக்குப் பல விரிவுரைகள் வந்தாலும் இதில், கண்ணன் கருத்தை, யோகானுபவத்தால் விளக்கியிருக்கிறார் ஆசிரியர்.

*சுத்தானந்த நூலகம், M34J மகாலக்ஷ்மி காலனி, திருவான்மியூர், சென்னை – 41. விலை ரூ. 60/-*

## மென்காற்றில் விளை சுகமே! - இறையன்பு

சென்னை – கோவை வானொலிகளில் அண்மையில் ஆசிரியர் ஆற்றிய உரைகளின் தொகுப்பு. ஒவ்வொரு உரையும் உத்வேகத்தைக் கொடுக்கிறது.

*நாகம், G3/8, மாசி வாமணி தெரு, பாண்டி பஜார், சென்னை – 17 விலை ரூ. 50/-*

## தமிழ் வரலாற்றுக் கதைகள் - ஆதிரை சுகுமாரன்

தமிழ்நாட்டின் வரலாற்றினையும்; தமிழர் வணங்கிய தெய்வங்களின் வழிபாட்டுக் கூறுகள், கால மாற்றத்தால் அடைந்த மாறுபாடுகளையும் விளக்குகிறது இந்நூல்.

*அன்பு இல்லம், கே.கே.டி. காம்ப்ளக்ஸ், 32/107 கௌடியா மடம் சாலை, சென்னை –14. விலை ரூ.60/-*

## திருமதி திருப்பதி க்ரோர்பதி – ஜே.எஸ். ராகவன்

நகைச்சுவை கதை, கட்டுரைகள். சிரிப்பா? என்ன விலை? எனக் கேட்பவர்கள் இதைப் படிக்கலாம். நகைச்சுவை உணர்வு அருகி வரும் இக்காலத்தில் இக்கதைகளை வரவேற்கலாம்.

*ஜெனரல் பப்ளிஷர்ஸ், 244, ராமகிருஷ்ணா மடம் சாலை, மயிலாப்பூர், சென்னை – 4. விலை ரூ. 62/-*

– தம்பி

காங்கிரசுடன் த.மா.கா. இணைவதால், (இணையாது என்பதே இன்றைய நிலை) திராவிட கட்சிக்களுக்கு லாபம் என்பது நூற்றுக்கு நூறு உண்மை.

சேலம், பொன்.குமார்

'போர் மேகங்கள்!' தலையங்கம் படித்தேன். இந்திய-பாக் போர் நடந்தால் விளைவுகள் நீங்கள் குறிப்பிட்டுள்ளது போல் கடுமையாகத்தான் இருக்கும் என்பதில் சந்தேகமில்லை. ஆனால் எல்லைப் பிரச்னைக்குத் தீர்வு அமைதிப் பேச்சுவார்த்தை என்பதைத்தான் ஏற்றுக் கொள்ள முடியவில்லை. பேச்சுவார்த்தை ஒரு பக்கம் நடக்கும்போதே பாகிஸ்தான் தன் குள்ளநரித்தனத்தைக் காட்டிய கடந்த கால சம்பவங்கள் உண்டு. பாகிஸ்தானைப் பொருத்தவரையில் பேச்சுவார்த்தை என்பது ஒரு கண்துடைப்பாகத்தான் இருக்கும். பாகிஸ்தானுக்கு மரண அடி கொடுத்தாலே ஒழிய, அது எல்லை தாண்டிய பயங்கரவாதத்தை ஒரு போதும் நிறுத்தப் போவதில்லை.

தஞ்சாவூர், வெங்கட் முருகானந்தம்

நெல்லைச் சிறப்பிதழ் அட்டகாசம், அமர்க்களம், அற்புதம். அதிக பக்கங்களுக்குத் தனி நன்றிங்க. நெல்லையின் ஒவ்வொரு விஷயத்தையும், சிறப்பையும் அங்குலம், அங்குலமாக எழுதி பிரமாதப்படுத்தியிருந்தீர்கள். வெல்டன். நெல்லை மணம் இதழ் முழுவதும் வீசியிருந்தது. சில குறைகளையும் சுட்டிக்காட்டத் தவறவில்லை. குறிப்பாக தாமிரபரணி ஆற்றின் மோசமான இன்றைய நிலை.

மொரட்டுப்பாளையம், க.நா.இராஜேஸ்வரன்

## ஆறு ரூபாயில் நெல்லை ட்ரிப்!

நெல்லைச் சிறப்பிதழா வெளியிட்டதுதான் வெளியிட்டீங்க, அதோடு கூட ஒரு பாக்கெட் அல்வாவை இணைத்துத் தந்திருந்தால் குறைந்தா போயிடுவீங்க. (இப்படி அல்வா கொடுத்திட்டீங்களே ஸார்!)

சின்னமனூர், சி.எஸ்.ராஜமழை

திருநெல்வேலி மாவட்டத்தில் பறவைகள் சரணாலயம் அமைந்துள்ளது மாஞ்சோலையில் அல்ல. மூன்றடைப்பிலும் கூந்தன்குளத்திலும்தான் பறவைகள் சரணாலயம் உள்ளது.

கல்லிடைக்குறிச்சி, தர்மசம்வர்த்தினி

ஆன்மிக தலங்களைப் பற்றிய தகவல்களைக் கொண்ட 'அருள்மொட்டு' தொகுப்பு அருமை.

அயன்புரம், த. சத்தியநாராயணன்

அல்வாவைப் பற்றிய செய்தி விடுபட்டது ஏன் தலைவா?

திருவாரூர், எஸ்.பாலச்சந்தர்

நெல்லை மாவட்டத்தைச் சேர்ந்த எனக்கே தெரியாத பல புதிய தகவல்களுடன் நெல்லைச் சிறப்பிதழ் அமைந்திருந்தது. படித்து முடித்ததும், ஆறு ரூபாயில் எங்க மாவட்டத்துக்கு ஒரு ட்ரிப் அடித்துவிட்டு வந்த திருப்தி ஏற்பட்டது.

கோவை, டி.ஜெய்சிங்

தாமரையின் கார்ட்டூன்கள் மூன்றும் நச்! சுருங்கச் சொல்லி நிறைய விளங்க வைத்தது.

சிதம்பரம், ஸ்ரீவித்யா காளிதாஸ்



## வாழ்வில் முடிவெடுத்த அந்தத் தருணம் என்றும் பசுமையானது...



## அதற்கு ஈடான மற்றொரு தருணம் நீங்கள் யெஸ்டி அஸோஸியேட் பில்டர்ஸிடம் இல்லம் வாங்கும் இனிய தருணம்தான்!



அண்ணா நகர், தி. நகர், நங்கநல்லூர், வேளச்சேரி, முகப்பேர் (கிழக்கு) மற்றும் பிற இடங்களில் அழகிய தரமான டீலக்ஸ் ஃபிளாட்டுகள் மற்றும் தனி வீடுகள் வாங்க

அணுகுங்கள்




**YESDE ASSOCIATED BUILDERS LTD.**

(FLAT PROMOTERS & PROPERTY DEVELOPERS)

402, "Challamall" 17, Thyagaraya Road, (Pondy Bazaar), T. Nagar, Chennai - 600 017. Phone: 4340224/4333636/4342667 Fax: 044-4340210

E.Mail:yesde@md3.vsnl.net.in Web:www.yesde-builders.com

# ராங் பண்ணினா ராஜா!

• தமிழினியன்

**மிவ**யில் புழுக்கம் தாளாமல் நொச நொசத்துக் கொண்டிருந்த ஆனந்தனை முகம் சுளிக்க வைத்துவிட்டான் அந்த இளம் பிர யாணி.

சாம்பல் நிற சலவைச் சட்டை. பாலீஷ் பள பளக்கும் காலணி. காலத்தைப் பிரதிபலிக்கும் கண்ணாடி சகிதம் நேர்த்தியான தோற்றம் தந்தவனிடம் பழகும் பண்பாடு முழுமையாகத் தொலைந்து போய்விட்டது தான் பரிதாபம்.

சீட் நம்பரைத் தேடுகிறேன் பேர்வழி என்று ஓர சீட்டில் உட்கார்ந்திருந்தவர்களின் முட்டி களை எல்லாம் பெயர்த்தெடுத்து விட்டான். கன மான சூட்கேஸால் அவன் இடித்த இடிக்கு அதிகம் பாதிக்கப்பட்டவர்தான் ஆனந்தன். அவருக்குப் பக்கத்தில்தான் அவனுக்கு இருக்கை. என்னைக் கண்டு பிடித்த உற்சாகமோ என்னவோ, சூட்கேசை 'அப்படி' திருப்பினான் பாருங்கள். செத்தார் மனிதர். ஏற்கெனவே அவருக்கு மூட்டுவலி. ஆயுர் வேதிக, ஆசனாதிகள், முடக்குத்தான் கீரைக் கெல்லாம் மசியாத 'செல்லம்' அடிபட்டால் சும்மா இருக்குமா? வலி பொறுக்காமல் ஆ...!

ஆனால் அவன், 'சாரி' சொல்லாவிட் டாலும் பரவாயில்லை. ஓய்வு பெற்ற சீனியர் சிட்டிசன் ஒருவர் அலறுகிறாரே... என்னா யிற்று என்று பார்க்கலாம் அல்லவா. ஊஹூம்.

மூஞ்சூறு மாதிரி மேலே இடம் தேடினான் பெட்டி வைக்க.' அங்கோ... முந்திக் கொண் டவர்களின் ஆக்ரமிப்பு. இவன் பெட்டிக்கு இடம் இல்லை.

"இப்படி ஆளுக்கு ஆள் இடத்தை அடைத் துக்கொண்டால் நான் எங்கே பெட்டி வைப் பது?'' என்று உட்கார்ந்திருந்தவர்களை ஒரு முறைப்பு முறைத்தான். பிறகு என்ன நினைத் தானோ. படபடவென்று மேலே இருந்த



பெட்டி பைகளை அப்படியும் இப்படியும் இடம் மாற்றினான். சிறு உருப்படிகளைப் பெரிசுகளின் தலையில் தூக்கி வைத்தான் கொஞ்சம் இடைவெளி கிடைத்தது. தனது சூட்கேஸை அதில் திணித்தான். ஆபத்து.

பாதி பெட்டி தட்டுக்கு வெளியே நீண்டு பயமுறுத்தியது.

"என்ன மிஸ்டர் இப்படி வைக்கறீங்க... ரயில் ஓடும்போது விழுந்துடுமே'' என்று தலை யைத் தடவினார், ஜன்னல் ஓர இருக்கையாளர்.

உடனே அவன் "உங்களுக்குப் பயமாக இருந்தால்... நகருங்கள்... நான் அங்கே உட்காருகிறேன்" என்றான்.

அரிதாய்க் கிடைத்த ஜன்னல் இருக்கையைச் சந்தடி சாக்கில் இழப்பாரா அவர்? 'போய்யாபிசுக்கு' என்கிற தோரணையில் முகம் திருப்பிக்கொண்டார். பரிசோதகர் வந்ததும் புகார்.

"ஆமாம் சார். பெட்டிப் பெரிசாய்த்தான் இருக்கிறது. எதுக்கு அனாவசிய ரிஸ்க். ப்ளீஸ்... கீழே இறக்கி வெச்சுடுங்க, சார்" என்றார் பரிசோதகர், பனிக்கட்டி தொனியில்.

இளைஞனுக்கு முகம் செத்துப்போனது.

அவன் தோற்றுப் போனதாக ஆனந்தன் உட்பட வரிசையில் இருந்த அத்தனை பேருக்கும் ஏக மகிழ்ச்சி.

ஆனால் இறக்கிய பெட்டியை அவன் என்ன பண்ணினான் தெரியுமோ?

இரு வரிசைக்கும் நடுவே துவஜஸ்தம்பம் போல் நிறுத்தி வைத்தான். எதிரும் புதிருமாய் மடக்கிய காலை நீட்டவோ, பக்கவாட்டில் அசைக்கவோ முடியாமல் ஐயனார் சிலையாட்டம் அமர்ந்திருக்கும்போது இப்படி ஒரு சுவர் எழுப்பியதும், சவப்



பெட்டிக்கு ஆணி அடித்த மாதிரி ஆயிற்று. விரல் கடை அளவுக்குக்கூட இனி காலை உசுப்ப முடியாது.

உருப்படியாய் அரியலூர் போய்ச் சேர முடியுமா? என்ற கவலை வந்துவிட்டது, ஆனந்தனுக்கு.

இரயில் தாம்பரம் தாண்டும்போது திடீரென்று பிள்ளைத்தாய்ச்சி மாதிரி உடம்பை நெளித்தான், அவன். மறுவினாடி சம்மணமிட்டிருந்த வலது காலைப் பெட்டி மீது நெட்டநெடுக நீட்டினான். எதிர் சீட்காரரின் தொடையருகே ஷு காலை வைத்தான். அந்த ஆள் பாவம். வாய் திறக்கப் பயந்து அவமரியாதையைச் சகித்துக்கொண்டார்.

ஆனால் ஆனந்தனுக்குப் பொறுக்கவில்லை.

"தம்பி... சொல்றேன்னு தப்பா நினைக்காதீங்க. உங்கள் வயசென்ன... அவர் வயசென்ன... அவர் மேலே உங்கள் கால் படலாமா?" என்று மிகவும் தாழ்ந்த குரலில் அவன் தவறைச் சுட்டிக்காட்டினார்.

அவனுக்குக் கோபம் பொத்துக்கொண்டது.

"உங்கள் மேலா கால் போட்டேன். பேசாமல் போங்க.." என்று கடிந்தான்.

இப்படியும் ஒரு பிறவியா? என்று நொந்து போனார், ஆனந்தன்.

"ஸ்வீட் போளி" கூவி வந்தான் பேண்ட்ரி சர்வர்.

வாங்கிச் சாப்பிட்டுவிட்டு, பக்கத்தில் இருந்தவரின் மினரல் வாட்டர் பேக்கைத் திறந்து அனுமதி இன்றி மடக் மடக்கென்று குடித்தான்.

பதினைந்து ரூபாயில் பாதி காலி. பணம் போட்டவர் திடுக்... திடுக்கென்று விழித்தார். வேறென்ன செய்வார் பாவம்?

காப்பி வந்தது. வாங்கிக் குடித்தான். எச்சில் கப்பை கொஞ்சம் எழுந்தால் விட்டெறிந்து விடலாம். அது அவனுக்குச் சோம்பல். ஜன்னல் ஓரமாய் அமர்ந்திருந்தவரிடம் கொடுத்து வெளியில் போடச் சொன்னான்.

என்ன திமிர்?

பிடித்துச் சாத்தலாமா? என்று கை துறுதுறுத்தது ஆனந்தனுக்கு. அடக்கிக் கொண்டார்.

**வீ**டு.

வராந்தாவில் காத்திருந்த மைதிலி - அவரது மனைவி - ஆர்வமாய் எழுந்தாள்.

"பல்லவனில்தான் வர்றீங்களா. டிக்கட் கிடைச்சுதா. சதீஷ் நல்லபடியா புறப்பட்டு விட்டானா...?"

"ஓ... அவன் நல்லவிதமா புறப்பட்டு விட்டான். நான்தான் நல்லபடியா வந்து சேரலை." முட்டியைத் தடவிக்கொண்டார், அவர்.

"ஏன்?"

"அது பெரிய கதை. அப்புறமா சொல்றேன்."

"சரி.. சதீஷுக்கு கண் டெஸ்ட் பண்ணினீங்களா."

இதைக் கேட்டதும் ஆனந்தனுக்கு எங்கோ உதைத்தது. உடனே பிரயாணப் பெட்டியைத் திறந்தார். கண் ஆஸ்பத்திரி கவர்தான் இருந்தது. உள்ளே இருந்த பிரிஸ்கிரிப்ஷன் கடிதத்தைக் காணோம்.

"ஏன்... என்னாச்சு" புரியாமல் விழித்தாள் மைதிலி.

எழும்பூரில் இரயில் ஏறியதும், ஏதோ ஆர்வத்தில் அப் பிரிஸ்கிரிப்ஷன் கடிதத்தை எடுத்துப் பார்த்தது என்னவோ நிஜம்தான். ஆனால் மறுபடியும் அதை மடித்து பத்திரப்படுத்தவில்லை. அதற்குள்தான் அந்த எருமை மாடு வந்து ரகளை பண்ணிவிட்டானே. அந்த அரிபரியில் கடிதம் எங்கோ தவறிவிட்டது.

அவர் மகன் சதீஷ், துபாயில் பணிபுரிகிறான். ஒரு மாதம் லீவில் வந்தவனை இன்று காலையில்தான் அண்ணா பன்னாட்டு விமான நிலையத்தில் வழியனுப்பி வைத்தார், ஆனந்தன். பல்லவனில் அவர் ஊர் திரும்பிய படலம்தான் மேலே பார்த்தோமே.

**மு**ந்தாநாள் சதீஷின் கண்ணாடி கீழே விழுந்து நொறுங்கிவிட்டது. கண் பார்வையை மீண்டும் பரிசோதிக்கும் யோசனை இருந்ததால் அதை அவன் பெரிதுபடுத்தவில்லை. ஒருநாள் முன்னதாக சென்னை சென்று டாக்டரிடம் கண்ணைப் பரிசோதித்த பின், அப்படியே துபாய்க்குப் பயணமாகலாம் என்று முடிவாயிற்று. அச் சீட்டின்படி கண்ணாடிக்கு ஆர்டர் கொடுத்து வாங்கி, அதை அடுத்த வாரம் துபாய்க்குச் செல்லும் அவனது நண்பன் வசம் அனுப்பி வைப்பதாக ஏற்பாடு.

எல்லாம் சரிதான். இப்போது பார்வைக் குறைவின் அளவுச் சீட்டையே காணோமே.

மறுபடியும் பரிசோதிக்க சதீஷ் இங்கு இல்லை. துபாயில் பரிசோதிப்பதானால் இங்கு இருநூறில் முடிந்த பரிசோதனை அங்கு இரு பதாயிரம் ஆகும். அது மட்டுமா, எத்தனை காலவிரயம்! கண்ணாடி அணியாமல் சதீஷால் கம்ப்யூட்டர் முன்னால் உட்காரவே முடியாது. சிரமப்படுவான்.

"ஆனாலும் உங்களுக்கு இத்தனை அஜாக்கிரதை ஆகாது" என்று குறை சொன்னாள், மைதிலி.

"வாஸ்தவம்தான். முக்கியமான கடிதத்தைத் தவற விட்டது என் தப்புதான். ஆனால் என்னை என்ன பண்ணச் சொல்றே. அந்த தடிராஸ்கல்... அறிவு கெட்ட முண்டம்... அநாகரிகம் பிடிச்ச கழுதை எனக்குச் சத்ருவாய் முளைச்சுட்டானே..."

பிரயாணக் களைப்பெல்லாம் போய், எதிர்பாராத சோகத்தில் ஒடுங்கிப் போனார், ஆனந்தன்.

**இ**ரவு எட்டு மணி.

ஃபோன் அழைத்தது.

'மகனாய்த்தான் இருக்கும்' என்று வேட

---

**"நடிகை நளினாஸ்ரீ நேற்று என் கனவுல வந்து என்னை மேரேஜ் பண்ணிக்கிட்டதா சொன்னேல்ல...?"**

**"ஆமா...ஆமா... அதுக்கென்ன?"**

**"இன்னைக்கு கனவுல வந்து டைவர்ஸ் பண்ணிட்டாங்க!"**

**- சீர்காழி வி. ரேவதி**



வெடப்புடன் ரிசீவரை எடுத்தார், ஆனந்தன்.

"ஆனந்தன் வீடுதானே இது."

யாரோ ஒரு பொடியன். எடுத்த எடுப்பில் பேர் சொல்லிக் கூப்பிட்டதும், நொந்து போயிருந்தவருக்குக் கோபம் பீறிட்டது.

"யார்டா நீ?"

"என் பேரு ராஜா. ஆனந்தனோட பேசணும். அவர் இருக்காரா?"

"ஆனந்தன்தான் பேசறேன். எந்த ராஜா?"

"நேற்று உங்களோட பல்லவனில் வந்த ராஜா..."

ஆனந்தனுக்குப் புரிந்துவிட்டது. அந்த இடியட். அவன் எதுக்கு ஃபோனில் வருகிறான். "ம்... என்ன விஷயம்?"

"...சதீஷ் உங்களுக்கு என்ன வேணும்?"

"சதீஷ் என் மகன்தான். ஏன்...?"

"உங்கள் மகனுக்கு ஐ டெஸ்ட் பண்ணின டாக்டர் சீட்டு, திருச்சியில் இறங்கறபோது ஸீட்டுக்குக் கீழே கிடந்தது. உங்கள் பக்கத்திலிருந்த பெரிசும் மற்றவர்களும் அதை எடுத்துக் கிழிக்கப் பார்த்தாங்க. நான் உடனே அதைத் தடுத்து, நீங்கள்தான் தவற விட்டிருப்பீங்கன்று ஞாபகத்தில் எடுத்து வைச்சிருக்கேன்."

வயிற்றில் பால் வார்த்ததுபோல் இருந்தது ஆனந்தனுக்கு. "அப்படியா... ரொம்ப சந்தோஷம். என் அட்ரஸ் எப்படி கிடைச்சது."

"ரிசர்வேஷன் சார்ட்டில் உங்கள் பேரையும், டிக்கட் நம்பரையும் நோட் பண்ணிட்டு சென்னையில் இருக்கும் என் நண்பனுக்குத் தகவல் சொன்னேன். அவன் எழும்பூர் ரிசர்வேஷன் சென்டருக்குப் போய் உங்கள் அப்ளிகேஷனைத் தேடி எடுத்து அட்ரஸ்.. ஃபோன் நம்பர் எல்லாம் சேகரிச்சுட்டான்.

"இப்ப நான் அரியலூர் பஸ் நிலையத்திலே இருக்கிறேன். ஆட்டோவிலே வரணும். டிரைவருக்கு இடம் தெரியாதாம். அதைக் கேட்கத்தான் ஃபோன் பண்ணினேன். அதென்ன சார்... ஆட்டோ டிரைவருக்குக் கூட தெரியாத இடத்திலே வீடு கட்டி இருக்கிறீங்க?"

"இது ஒரு புது எக்ஸ்டென்ஷன். இப்பத்தான் வள்ளலார் நகர்னு பேர் வச்சிருக்காங்க" என்று வீட்டுக்கு வழி சொன்னார், ஆனந்தன். ○

# கபீர்

மதங்களுக்கு அப்பாற்பட்ட மகான் கபீர். இளவயதில் குருவை மிஞ்சிய சீடராக அவர் இருந்தார்.

ஒருமுறை கபீரின் குரு ராமானந்தர் தனது பித்ருக்களுக்குச்



சிரார்த்தம் செய்ய அவர்களுக்குப் பிடித்த உணவுகளைத் தயார் செய்யச் சொன்னார். ராமானந்தரின் மறைந்த தந்தைக்குப் பால் மிகவும் பிடிக்கும். எனவே பசும்பால் கொண்டு வரும்படி கபீரை அனுப்பினார்.

பாத்திரத்தை எடுத்துக்கொண்டு பால் வாங்கி வரச் சென்றார் கபீர். வழியில் ஓரிடத்தில் பசு ஒன்று இறந்துகிடந்தது.

கபீர், அந்தப் பசு முன்னால் கொஞ்சம் புல்லை எடுத்துப் போட்டு விட்டு பாத்திரத்தை வைத்துக்கொண்டு நின்றார்.

நெடுநேரமாகியும் பால் வாங்கப் போன கபீர் திரும்பாததால் ராமானந்தர் அவரைத் தேடிக்கொண்டு வந்தார்.

இறந்த மாட்டின் அருகே கபீர் நிற்பதைக் கண்டு "இங்கே என்ன செய்கிறாய்?" என்றார்.

"குருவே இந்தப் பசு பாலும் கொடுக்கவில்லை; புல்லையும் தின்னவில்லை" என்றார் கபீர்.

ராமானந்தர், "அட பைத்தியமே! இந்தப் பசு இறந்து போயிருக்கிறது. அது எப்படி புல்லைத் தின்னும்?" என்றார்.

உடனே கபீர் "குருவே இப்போது இறந்த பசுவே புல்லைத் தின்ன முடியாதென்றால் எத்தனையோ ஆண்டு முன்பு இறந்த உங்கள் முன்னோடி பாலை எப்படி பருகுவார்கள்?" என்றார்.

**உலகெங்கும் விற்பனையில்...**



## ஆலயங்களைச் சுற்றி குடும்ப உறவு!

**நகரத்தாரின்தெய்வீக கலாச்சாரத் தொடர்!**

## மதுரை மாவட்ட ஆலயங்களின் சிறப்புச் செய்திகள்!

**சரவணபவ**

தெய்வீக மாதஇதழ்

# அன்பளிப்பு

**16செல்வங்களும் பெற்று பெருவாழ்வு வாழ**

# 4 வெள்ளி

(முலாம் பூசப்பட்ட செப்பு)

# காசுகள்

**சொர்ண பூஜை விளக்கத்துடன்!**

# சிவகாமியின் சபதம்

## முப்பத்து ஏழாம் அத்தியாயம்

## தியாகப் போட்டி

சிவகாமியின் அலறலைக் கேட்ட சர்ப்பம் சற்று நேரம் திகைத்து நின்றது. பிறகு, தன் வழியே போய்விட்டது.

தூரத்தில் பாறைகளுக்கு அப்பாலிருந்து, "சிவகாமி! என்னைக் கூப்பிட்டாயா?" என்று ஆயனரின் குரல் கேட்டது. "இல்லை அப்பா!" என்று சிவகாமி உரத்த குரலில் கூறினாள்.

இந்த இரண்டு வார்த்தைகள் மாமல்லருக்கு எவ்வளவு மகிழ்ச்சியையும் நன்றி உணர்ச்சியையும் உண்டாக்கின என்பதைச் சிவகாமி அவருடைய கரங்களின் ஸ்பரிசத்தினால் உணர்ந்தாள்.

இருவரும் மரத்தடியிலிருந்து சற்று அப்பால் சென்று, பட்டப் பகல் வெளிச்சமாயிருந்த பாறையின் மீது உட்கார்ந்தனர்.

"மன்னிப்புக் கேட்பதாகச் சொன்னாயே, சிவகாமி! எதற்காக?" என்று மாமல்லர் கேட்டார்.

"தங்களைப் பற்றிப் பொல்லாத வசை மொழிகளைக் கேட்டுக் கொண்டு சும்மா இருந்ததற்காக! அம்மொழிகளை நம்பியதற்காக!"

"இவ்வளவுதானே! மன்னித்து விட்டேன். அப்படி யார் என்னைப் பற்றி என்ன கூறினார்கள்?"

"நாகநந்தி என்னும் புத்த பிக்ஷுவைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தோமல்லவா? அவர்தான் தங்களைப் 'பயங்கொள்ளிப் பல்லவன்' என்றார். தாங்கள் போர்க்களத்துக்குப் போகப் பயந்துகொண்டு, காஞ்சிக் கோட்டைக்குள் ஒளிந்துகொண்டிருப்பதாக சொன்னார். இன்னும் என்னவெல்லாமோ சொன்னார்..."

சிவகாமி கூறியதையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த மாமல்லர், "இதற்காக நாகநந்தியின் மேல் எனக்குக் கோபம் இல்லை. என் தந்தை பேரில்தான்

அமரர் கல்கி

கோபம். இராஜ்யத்தைத் தேடி மகா யுத்தம், வந்திருக்கும்போது, நான் கோட்டைக்குள்ளேயே அடைபட்டுக் கிடந்தால் 'பயங்கொள்ளி' என்று ஏன் ஜனங்கள் சொல்லமாட்டார்கள்...? அதைப் பற்றி எனக்குக் கவலையில்லை. ஆனால் அதையெல்லாம் நீயும் நம்பினாயா, சிவகாமி?'' என்றார்.

"ஆம், பிரபு! நம்பினேன். தங்களைப் பிரிந்திருந்ததில் என் மனவேதனையைச் சகிக்க முடியாமல் அந்த அவதூறுகளை நம்பினேன். 'இவ்வளவு மட்டமான மனுஷரின் காதல் இல்லாமற் போனால்தான் என்ன?' என்று எண்ணுவதில் ஓர் ஆறுதல் உண்டாயிற்று. ஆனாலும், என் வெளி மனம் அப்படி நம்பியதே தவிர, என் உள் நெஞ்சம் 'இதெல்லாம் பொய்' என்று சொல்லிக்கொண்டிருந்தது. 'மாமல்லர் வீர புருஷர்; அவருடைய காதலுக்கு நீ பாத்திரமானவள் அல்ல! ஆகையால், அவரைப் பற்றித் தாழ்வாக எண்ணுகிறாய்! இது உன் நீச குணம்' என்று என் உள் இதயம் எனக்கு இடித்துச் சொல்லிக் கொண்டிருந்தது. பிரபு! என்னை மன்னிப்பீர்களா?''

"சிவகாமி! உன்னை மன்னிப்பதற்குரிய குற்றம் எதுவும் நீ செய்யவில்லை. அவ்வளவு மனவேதனைக்கு உன்னை ஆளாக்கியதற்காக நான்தான் மன்னிப்புக் கேட்டுக் கொள்ள வேண்டும். இனிமேல் என்னைப் பற்றி அத்தகைய அவதூறுகளை நம்ப மாட்டாயல்லவா?" என்று கேட்டார் மாமல்லர்.

"ஒருநாளும் நம்ப மாட்டேன். அந்தப் புத்த பிக்ஷுவை மறுபடி பார்க்க நேர்ந்தால் அவரை இலேசில் விடப் போவதில்லை!" என்றாள் சிவகாமி. பிறகு, திடீரென்று எதையோ நினைத்துக்கொண்டு "பிரபு! கூடு விட்டுக் கூடு பாயும் வித்தை என்று கதைகளில் சொல்கிறார்களே? அதிலே உங்களுக்கு நம்பிக்கை உண்டா?'' என்று தயக்கத்துடன் கேட்டாள்.

''என்ன கேட்கிறாய், சிவகாமி! நம்பிக்கை உண்டா என்றால்...?''

"ஓர் உயிர் ஓர் உடலிலிருந்து இன்னொரு உடலுக்குப் போவது சாத்தியமாகுமா என்று கேட்டேன். அதாவது, ஒரு மனுஷர் பாம்பு உருவம் எடுத்துக் கொள்ள முடியுமா...?"

"இப்படிக் கேட்டபோது சிவகாமியின் உடம்பு மறுபடியும் நடுங்குவதை மாமல்லர் கண்டார். உடனே அவளை ஆதரவோடு தன் அகன்ற மார்பிலே சேர்த்து அணைத்துக்கொண்டு, "இதென்ன வீண் பீதி! மனுஷனாவது, பாம்பு உருவங் கொள்வதாவது? அப்படி ஒருவன் பாம்பு உருவம் எடுத்து உன்னைத் தீண்ட வரும் பட்சத்தில், நான் கருடன் உருவங் கொண்டு வந்து அவனை சம்ஹரிப்பேன். அல்லது உன் எதிரே அவனுடைய விஷப் பல்லைப் பிடுங்கி எறிவேன். நான் இருக்கும்போது உனக்கு ஏன் பயம்?'' என்றார்.

"பிரபு! எப்போதும் தாங்கள் என் அருகில் இருந்து என்னைப் பாதுகாத்துக் கொண்டிருப்பீர்களா? இந்த ஏழைப் பெண்ணைக் காப்பாற்றுவது ஒன்றுதானா உங்களுக்கு வேலை? உங்களுடைய பாதுகாப்பை எதிர்பார்த்து இராஜ்ய லக்ஷ்மி காத்துக்கொண்டிருக்கிறாளே?'' என்றாள் சிவகாமி.

"சிவகாமி! நீ மட்டும் ஒரு வார்த்தை சொல்லு! இராஜ்யம் எக்கேடாவது கெடட்டும் என்று விட்டு விட்டு உன்னோடு இருந்து விடுகிறேன். உன்னைவிட எனக்கு இராஜ்யம் பெரிதல்ல..'' என்று மாமல்லர் கூறிவந்தபோது, சிவகாமி குறுக்கிட்டாள்.

''பிரபு! அவ்வளவு சுயநலக்காரி இல்லைதான். அப்படி உங்களை எனக்கே உரிமைப் படுத்திக் கொள்ள வேண்டுமென்ற எண்ணம் எனக்கில்லை. விஸ்தாரமான சாம்ராஜ்யத்திறகு உரிமை கொண்டவர் தாங்கள். வாழையடி வாழையாக வந்த பல்லவ வம்சத்தின் சிம்மாசனத்துக்குத் தனி உரிமை பூண்டவர். எத்தனையோ லட்சம் பிரஜைகள் தங்களுடைய தோள் வலியையும் வாள் வலியையும் நம்பி இந்தப் பெரிய ராஜ்யத்தில் வாழ்ந்துகொண்டிருக்கிறார்கள். பொல்லாத பகைவர்களை விரட்டி அடித்துப் பிரஜைகளைப் பாதுகாக்கும் பொறுப்பு தங்களுடைய இந்த இரு புஜங்களிலும் சார்ந்திருக்கிறது. அத்தகைய புஜங்கள் இன்று இந்த ஏழையை அணைத்துக் கொண்டிருப்பது என்னுடைய பூர்வ ஜன்மத்து சுகிர்தம். ஆனால், இந்த பாக்கியத்

தினால் என் தலை திரும்பிப் போய்விட வில்லை. என் பகுத்தறிவை நான் இழந்து விடவில்லை. பல்லவர்குலம் விளங்க வந்த மாமல்லருடைய வலிமையும் வீரமும் கேவலம் இந்தச் சிற்பியின் மகளைப் பாது காப்பதற்காக மட்டும் உபயோகப்பட வேண்டும் என்று ஒரு நாளும் சொல்ல மாட்டேன். அப்பேர்ப்பட்ட மகா தியா கத்தைத் தங்களிடம் நான் ஏற்றுக் கொள் ளவும் மாட்டேன். இந்தக் கிராமவாசிகள் புள்ளலூர்ச் சண்டையில் தாங்கள் நிகழ்த் திய வீரச் செயல்களைப் பற்றி உற்சாக மாகப் பேசுவது என் காதில் விழும்போது, என் உள்ளமும் உடலும் எப்படிப் பூரிக் கின்றன, தெரியுமா...?"

"சிவகாமி! இந்தக் கிராமவாசிகள் உன் னுடைய நடனக் கலைத் திறனைப் பற்றிப் பாராட்டும்போது, நானும் அப்படித்தான் பூரித்துப்போகிறேன். நினைத்துப் பார்த் தால், என்னுடைய சுயநலத்தைப் பற்றி எனக்கு வெட்கமாய்க்கூட இருக்கிறது."

"தங்களிடம் ஒரு சுயநலத்தையும் நான் காணவில்லையே, பிரபு!"

"நீ காண மாட்டாய், சிவகாமி! உன்னு டைய காதலாகிற பொன்னாடையினால் என்னை நீ போர்த்திவிட்டுப் பார்க்கிறாய். அதனால் என்னிடமுள்ள குற்றங் குறைகளை நீ காணமாட்டாய். ஆனால், என்னுடைய சுயநலத்தை நான் நன்றாக உணர்கிறேன். இறைவன் உனக்கு அற்புத மான கலைச்செல்வத்தை அளித்திருக் கிறார். அதையெல்லாம் நான் எனக் கென்று ஆக்கிக் கொள்ளப் பார்க்கிறேன். என்னைப் போன்ற சுயநலக்காரன் யார்? உன்னுடைய அற்புத நடனக் கலை இறை வனுக்கே உரியது - கேவலம் மனிதர் களுக்கு உரியதல்ல என்று என் தந்தை கூறுவதுண்டு. அதன் பொருள் நேற்று இந் தக் கிராமத்துக் கோயிலில் நீ நடனமாடிய போதுதான் எனக்குத் தெரிந்தது. இறை வனுக்கு உரிய நிவேதனப் பொருளை நான் அபகரிக்கப் பார்ப்பது, தெய்வத் துக்குச் செய்யும் அபசாரமாகாதா என்று கூட எண்ணமிட்டேன்..."

சிவகாமி அப்போது எழுந்து மாமல் லருக்கு முன்புறமாக வந்து குனிந் தாள். அவளுடைய உத்தேசத்தை அறிந்து மாமல்லர் அவளைத் தடுப்பதற்கு முன்னால், அவருடைய பாதங்களைத் தொட்டுத் தன் கண்களிலே ஒற்றிக் கொண்டாள். பின்னர் அவர் எதிரில் அமர்ந்து கூறினாள்: - "சுவாமி! என்னு டைய நடனக் கலை இறைவனுக்கே உரியதாயிருக்கும் பட்சத்தில், அந்த உரிமை பூண்ட இறைவன் தாங்கள்தான். அந்த நாளில் நான் ஆர்வத்துடன் என் தந்தையிடம் நடனக் கலையைப் பயின் றதன் காரணம், அடுத்தடவை தாங்கள் வரும்போது தங்களுக்கு ஆடிக்காட்டி மகிழ்விக்க வேண்டும் என்னும் ஆசையே. எனது நடனக் கலை கனிந்து, உணர்ச் சியும் உயிரும் பெற்றதெல்லாம் தங்களு டைய காதலினால்தான். என்னை மறந்து, ஆனந்தப் பரவச நிலையில் நான் ஆடும் போதெல்லாம், தங்களுடைய அன்புக்கு உரிமை பூண்டவள் என்னும் எண்ணமே, அந்த ஆனந்தப் பரவசத்துக்கு ஆதாரமா யிருக்கிறது. திருநாவுக்கரசர் பெருமானின் இனிய தீந்தமிழ்ப் பாடல்களைப் பாடிக் கொண்டு நான் அபிநயம் பிடிக்கும்போது தங்களுடைய திருவுருவந்தான் என் அகக் கண் முன்னால் நிற்கிறது. தங்களால் கிடைத்த இந்தக் கலைச் செல்வத்தை வேறொருவருக்கு உரிமையாக்க எனக்கு பாத்தியதையில்லை. நடனக்கலை தெய் வத்துக்கும் எட்டாத கலையாகவே யிருக்கட்டும். தங்களைக் காட்டிலும் அது எனக்கு உயர்ந்ததல்ல. தாங்கள் வாய் திறந்து ஒரு வார்த்தை சொன்னால் போதும்; உடனே அந்த நடனக் கலையை இந்த நதிப் பிரவாகத்திலே விட்டு விட்டு, ஒரு முழுக்கும் போட்டு விடுகிறேன்."

மடல் விரிந்த மாதுளை மொட்டுப் போன்ற சிவகாமியின் செவ்விதழ்களை மாமல்லர் தமது அகன்ற கரத்தினால் மூடி னார். "சிவகாமி! நீ இப்படியெல்லாம் சொல்லச் சொல்ல, என் தர்மசங்கடந் தான் அதிகமாகிறது. ஒருநாள் நீ இந்தக் கலையை விட்டு விடத்தான் வேண்டி யிருக்கும் என்று எண்ணும்போது எனக் குப் பகீர் என்கிறது; பல்லவ சாம்ராஜ் யத்தின் சக்கரவர்த்தினி அரங்க மேடை யில் நின்று நடனமாடுவது என்பது நினைக்க முடியாத காரியம் அல்லவா? அதை எண்ணும்போதுதான் உண்மை

யிலேயே நான் உன்னுடைய தந்தையின் சிற்பக் கலைச் சீடனாக இருந்திருக்கக் கூடாதா என்று தோன்றுகிறது. அப்படியா னால் இந்த மூன்று நாட்களைப் போல் நம் வாணாள் முழுதுமே ஆனந்தமய மாயிருக்குமல்லவா? சாம்ராஜ்யம் என்



னத்திற்கு? யுத்தமும் இரத்த வெள்ளமுந் தான் என்னத்திற்கு? உண்மையாகவே சொல்கிறேன். சிவகாமி! நான் சக்கர வர்த்திக்குச் சொல்லி அனுப்பிவிடுகிறேன். எனக்கு இராஜ்யம் வேண்டாம் என்று, நானும் நீயும் உன் தந்தையுமாகப் படகில் ஏறிக்கொண்டு கிளம்புவோம். ரதியை யும், சுகரையும் கூட அழைத்துக் கொள் வோம். எங்கேயாவது கடல் நடு விலுள்ள தீவாந்தரத்துக்குப போய்ச் சேர்வோம். அங்கே நமது வாணாளை ஆனந்தமாகக் கழிப்போம். என்ன சொல்கிறாய்? 'ஆகட்டும்' என்று சொல்லு!''



"ஒருநாளும் சொல்லமாட்டேன்!'' என்று அழுத்தந்திருத்தமாகக் கூறிவிட் டுச் சிவகாமி மேலும் சொன்னாள்.

''கதைகளிலே, காவியங்களிலே கேட்டிருக்கிறேன். வீரப் பெண்கள் நாயகர்களுக்குப் போர்க்களத்தில் துணை நின்று சாஹஸச் செயல்கள் புரிந்தார்கள் என்று. தசரதருக்குக் கைகேயியும், அர்ச்சுனனுக்குச் சுபத் திரையும் போர்க்களத்தில் ரதம் ஓட் டினார்கள் என்றும் படித்திருக்கிறேன். அப்பேர்ப்பட்ட பாக்கியத்துக்கு நான் பிறக்கவில்லை. போர்க்களத்திற்கு என் னால் வர முடியாது. இரத்தத்தைக் கண்டால் நான் மூர்ச்சையடைந்து விடுவேன். ஆடவும் பாடவும் அலங் காரமாகக் கொலுவிருக்கவும் பிறந்த பேதைப் பெண் நான். ஆனால், தங் களையும் என்னைப் போலாக்க உடன் பட மாட்டேன். சிம்மாசனத்தில் அமர்ந்து சாம்ராஜ்யம் ஆளவும் போர்க்களத்தில் பகைவர்களைச் சின்னாபின்னம் செய்யவும் பிறந்த தங் களைக் கல்லுளி பிடித்து வேலை செய்ய விட மாட்டேன். வாளும் வேலும் பிடித்து எதிரிகளைத் துவம் ஸம் செய்ய வேண்டிய கைகளை ஆடல் பாடலுக்குத் தாளம் போடும் படி விட மாட்டேன். சுவாமி! இராஜ் யம் என்னத்திற்கு? யுத்தம் என்னத் திற்கு? என்றெல்லாம் இனிமேல் சொல் லாதீர்கள். அவ்விதம் தாங்கள் சொன் னால், இந்தப் பாவியின் காரணமாகத் தானே இப்படித் தாங்கள் சொல்கிறீர் கள் என்று எண்ணிப் பிராணத் தியாகம் செய்துகொள்வேன்!''

"சிவகாமி! கையில் கல்லுளி பிடித்து

வேலை செய்யும் சிற்பியின் இரத்தம் மட்டும் உன் உடம்பில் ஓடவில்லை. பழந் தமிழ்நாட்டு வீரத் தாய்மாரின் இரத்தமும் ஓடுகிறது. மணக்கோலம் பூண்ட மணாளனைப் போர்க்களத்துக்கு மனமுவந்து அனுப்பிய வீரத் தமிழ் மங்கையின் இரும்பு நெஞ்சம் உன்னிடமும் இருக்கிறது. உண்மையில் வீர பத்தினியா



வதற்குரியவள் நீதான்! போர்க்களத்துக்கு என்னோடு நீ வர வேண்டியதில்லை. ரத சாரத்தியமும் செய்ய வேண்டியதில்லை. ஆனால், இனி நான் எப்போதும் போர்க்களம் சென்றாலும் என்னுடைய நெஞ்சில் நீ இருந்துகொண்டிருப்பாய். சற்று முன் நீ கூறிய வீர மொழிகள் என் செவியிலே ஒலித்துக்கொண்டிருக்கும். உன்னுடைய



காதலின் நினைவு எனக்கு இணையற்ற வீரத்தையும் துணிவையும் ஊட்டிக் கொண்டிருக்கும்..."

"சுவாமி! வீர பல்லவ வம்சத்தில் பிறந்து, பதினெட்டு வயதிற்குள் தென்னாட்டிலுள்ள மல்லர்களையெல்லாம் வென்று, மகாமல்லர் என்று பெயர் பெற்ற தங்களுக்கு, இந்த ஏழைப் பெண்ணின் நினைவுதானா தீரமும் துணிச்சலும் ஊட்ட வேண்டும்? புள்ளலூர் யுத்தத்திலே தாங்கள் எதிரிகளைச் சின்னாபின்னம் செய்து, உலகமே ஆச்சரியப் படும்படியான வெற்றிகொண்டது இந்த ஏழைப் பெண்ணின் ஞாபகத்தில்தானா...? கேவலம் ஒரு எட்டுக்கால் பூச்சியைக் கண்டு கதி கலங்குபவள் நான்! தங்களுக்கு ஞாபகமிருக்கிறதா! நமது குழந்தைப் பிராயத்தில், ஒருநாள் நீங்களும் நானும் என் தந்தையின் சிலைகளுக்குப் பின்னால் ஓடிப் பிடித்து விளையாடிக் கொண்டிருந்தபோது, ஒரு பெரிய கரப்பான் பூச்சியைப் பார்த்து, 'ஓ'வென்று அலறி விட்டேன். நீங்கள் ஒளிந்துகொண்டிருந்த இடத்திலிருந்து ஓடி வந்து என்னைக் கட்டி அணைத்துத் தேறுதல் கூறினீர்கள். 'என்ன? என்ன?' என்று கேட்டீர்கள். நான் முதலில் சொல்வதற்கு வெட்கப்பட்டு அப்புறம் உண்மையைச் சொன்னேன். தாங்கள் நம்பவே இல்லை. 'கரப்பான் பூச்சிக்குப் பயப்படவாவது? பொய்! என்னை ஒளித்து கொண்டிருந்த இடத்திலிருந்து வெளியே வரச் செய்வதற்காகவே நீ இப்படிப் பாசங்கு செய்தாய்!' என்றீர்கள்; நிஜமாக நான் அப்போது பயப்பட்டேன். சற்று முன்னால் இங்கே பாம்பைக் கண்டபோதும் எனக்கு உண்மையில் பயமாய்த்தான் இருந்தது.... பாருங்கள், இப்போது கூட என் உடம்பு நடுங்குவதை!"

மாமல்லர் மீண்டும் முன்போல சிவகாமியைத் தனது வலிய புஜங்களினால் சேர்த்து அணைத்துக்கொண்டு, "இதென்ன அசட்டுத்தனம், சிவகாமி! ஏன் இப்படி நடுங்குகிறாய்?" என்று கேட்டார்.

"ஏனோ தெரியவில்லை. சில காலமாக எனக்கு அடிக்கடி இம்மாதிரி பயம் உண்டாகிறது. ஏதோ ஒரு பெரிய அபாயம் - இன்னதென்று தெரியாத விபத்து என்னைத் தேடி வந்து கொண்டிருப்பதாகத் தோன்றுகிறது. சுவாமி தங்களிடம் ஒரு இரகசியம் சொல்லுகிறேன். என் தந்தையிடம் கூட அதை நீங்கள் சொல்லக் கூடாது..."

"சொல்லு, சிவகாமி!"

"காஞ்சியில் திருநாவுக்கரசர் மடத்திலே நான் மூர்ச்சை அடைந்து விழுந்த அன்று, எனக்குப் பிரக்ஞை வந்ததும் தாங்கள் நயன பாஷையில் விடைபெற்றுக் கொண்டு போய் விட்டீர்கள். சற்று நேரம் கழித்து, நானும் என் தந்தையும் வாகீசப் பெருமானிடம் விடை பெற்றுக் கொண்டு கமலியின் வீட்டுக்குக் கிளம்பினோம். அப்போது நாவுக்கரசர் என் தந்தையைப் பின்னால் நிறுத்திச் சில வார்த்தைகள் மெல்லிய குரலில் கூறினார்: 'உங்கள் பெண் மகா பாக்கியசாலி! உலகத்தில் இல்லாத தெய்வீகக் கலை அவளிடம் இருக்கிறது. ஆனால் அவளைப் பார்க்கும்போது ஏனோ என் மனத்தில் துயரம் உண்டாகிறது! ஏதோ ஒரு பெரிய அபாயம் அவளுக்கு வரப் போவதாகத் தோன்றுகிறது. ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ளுங்கள்' என்று அப்பெருமான் கூறியது என் காதிலும் விழுந்தது. அதைக் கேட்டதிலிருந்து..."

"அந்த மகா புருஷர் கூறியது உண்மைதான். சிவகாமி! உனக்குத்தான் பெரிய அபாயம் வந்ததே! இந்த வெள்ளத்தைக் காட்டிலும் பெரிய அபாயம் வேறு என்ன வர முடியும்? கடவுள் அருளால் அதிலிருந்து தப்பி விட்டாய்...! இனிமேல் ஒன்றும் வராது....!" என்று மாமல்லர் உறுதியான குரலில் கூறினார்.

"பிரபு தங்களை என்னுடன் சேர்த்து வைத்து மூன்று தினங்கள் நான் சொர்க்கத்தில் இருக்கும்படிச் செய்த வெள்ளத்தை விபத்து என்று எப்படிச் சொல்வேன்? ஆகையினால்தான், இன்னும் ஏதோ இருக்கிறது என்று எண்ணமிடுகிறேன். ஆனால் இனிமேல் என்ன விபத்து வந்தால் என்ன? தங்களுடைய விசால இருதயத்தின் ஒரு மூலையில் எனக்கு ஒரு பத்திரமான இடம் இருக்கிறது என்ற நம்பிக்கையே எனக்குத் தைரியமும் உற்சாகமும் ஊட்டி வரும். தாங்கள் யுத்தத்தையெல்லாம் முடித்துவிட்டு, தங்

## அருள்வாக்கு

சக்தி ஜாஸ்தியாக ஆக ஆனந்தம் ஜாஸ்தி என்பதால் அந்த சக்தியினாலேயே ஆனந்தம் உண்டாகிறது என்று அர்த்தமில்லை. சக்திக்கும் ஆனந்தத்துக்கும் நேர் ஸம்பந்தமில்லை. ஒருத்தருக்குத் தம்மை விடக் குறைந்த சக்தியுள்ளவர்கள் மீது தம் முடைய சக்தியினால் ஆதிக்கம் செலுத்த முடிகிறது. அவரைக் கட்டுப்படுத்த முடிகிறது என்பதிலே ஏற்படும் ஆனந்தம் தப்பான அஹங்காரத்தில் ஏற்படுவது; அதை - முறையான ஆனந்தம் என்று சொல்ல முடியாது. பின்னே, சக்தி ஜாஸ்தியானால் ஆனந்தம் எப்படி ஜாஸ்தியாகிறது என்றால், அப்போது நம்மை விடவும் அதிக சக்தியோடு இருந்துகொண்டு, நம்மைக் கட்டுப்படுத்துபவர்கள் குறைச்சலாகிக் கொண்டு வருகிறார்கள். ஆகையால், நாம் இன்னொருத்தரை ஆள முடிகிறது என்பதைவிட, நமக்குக் கட்டுப்பாடு குறைகிறது. நம்முடைய ஸ்வதந்திரத்தின் எல்லை ஜாஸ்தியாகிறது என்பதாலேயே ஆனந்தம் ஏற்படுகிறது.



பெரிய கம்பெனிகளில் மானேஜராகக் கொடி கட்டிப் பறந்த சில பேர் ராஜிநாமா பண்ணிவிட்டு, அதோடு 'கம்பேர்' பண்ணிப் பார்க்கும்போது, ரொம்பச் சின்னதாக ஸொந்தத்தில் கம்பெனி ஆரம்பிக்கிறார்கள். "ஏன் இப்படி வருமானம், வசதி எல்லாவற்றையும் குறைத்துக்கொண்டு ஸொந்த பிஸினெஸ் ஆரம்பித்திருக்கிறீர்கள்?" என்று கேட்டால், "அதுவா? அங்கே என்னதான் பெரிய பொறுப்புகள், பெரிய வருமானம் முதலானது இருந்தாலும் மேலே உள்ள டைரக்டர்களுக்கு ரொம்பவும் "obey" பண்ணிக் கொண்டிருக்க வேண்டியிருந்தது. அவர்கள் 'கன்ட்ரோல்' தாங்காமல்தான், பாக்கி ஸமாசாரங்களில் நஷ்டமேற்பட்டாலும் ஃப்ரீயாக இருக்கணுமென்று ஸொந்த பிஸினெஸ் ஆரம்பித்தது" என்கிறார்கள்.

ஆகையினால் ஸ்வாதந்திரியத்தால்தான் ஸந்தோஷமே தவிர சக்தியினால் இல்லை.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்**

கள் தந்தையிடம் அனுமதி பெற்று என்னை அழைத்துப் போக வரும் வரையில் நான் இவ்விடத்திலேயே மன நிம்மதியுடன் இருப்பேன். தங்களுடைய அன்பாகிய கவசம் என்னைக் காப்பாற்றும்போது, என்ன விபத்து என்னை என்ன செய்துவிடும்?"

"மண்டபப்பட்டு அவ்வளவு பாக்கியம் செய்திருக்கிறதா? இங்கேயே தங்கி விடுவதென்று தீர்மானம் செய்துவிட்டாயா?" என்று மாமல்லர் கேட்டார். அதுதான் அவருடைய விருப்பம் என்று குரலிலிருந்தே தெரிந்தது.

"ஆம், பிரபு! வேறு, எந்த இடத்திலும் நான் மன நிம்மதியுடன் இருக்க முடியாது. இந்தக் கிராமத்துக் கோயிலும், இந்தப் பாறைகளும் வராக நதியும் எனக்குப் பல இன்ப நினைவுகளை ஊட்டிக் கொண்டிருக்கும். என் தந்தையும் இந்தப் பாறைகளைக் கோயில்களாக அமைப்பதில் பெரும் ஆவல் கொண்டிருக்கிறார். அவரும் நிம்மதியாக இருப்பார். ஆனால் ஒரே ஒரு விஷயந்தான் கொஞ்சம் மனக்கவலை உண்டாக்குகிறது. அந்த நாகநந்தி மட்டும் இங்கே வராமலிருக்க வேண்டும்" என்றாள் சிவகாமி.

"நாகநந்தி இங்கே வர மாட்டார்! அந்தக் கவலை உனக்கு வேண்டாம்!" என்றார் மாமல்லர். குண்டோதரனிடம் நாகநந்தியைப் பற்றித் தெரிந்து கொண்டிருந்ததனால்தான் அவர் அவ்விதம் உறுதியாய்க் கூறினார்.

அதேசமயத்தில் அவர்கள் பேசிக் கொண்டிருந்த பாறைக்குப் பின்னால் ஒளிந்து கேட்டுக் கொண்டிருந்த புத்த பிக்ஷுவின் உருவம் மெதுவாக எழுந்து அப்பால் சென்றது!.

(தொடரும்)

# "நீங்களெல்லாம் விவசாயிகள்தானா?"

பெட்ரோல் பங்க் எல்லா இடத்திலும் இருப்பது தெரிந்ததுதான். ஆனால் எல்.பி.ஜி. ஸ்டேஷன் தெரியுமா? கர்நாடகாவில் தான் முதன் முதலாக இம்மாதிரி ஸ்டேஷன்கள் ஆரம்பிக்கப் போகிறார்கள். மத்தியிலிருந்து க்ரீன் சிக்னல் கிடைத்துவிட்டது. எல்லா வித வாகனங்களுக்கும் எல்.பி.ஜி. செல்லுபடியாகுமாம். முதலில் தொண்ணூற்று ஒன்பது எல்.பி.ஜி. ஸ்டேஷன்கள் நூறு





• கௌடா

கோடி செலவில் திறக்கப் போகிறார்கள். பிரான்சிலிருந்து மங்களூர் துறைமுகத்துக்கு காஸ் அனுப்பப்படும். பிறகு ஒவ்வொரு ஸ்டேஷனுக்கும் டாங்கரில் கொண்டு செல்லப்படும். கர்நாடக அரசும் மார்க்கெட்ஸ் இந்தியா பெட்ரோ காஸ் லிமிடெட் என்ற தனியார் கம்பெனியுமாகச் சேர்ந்து இந்த காஸ் ஸ்டேஷன் திட்டத்தை நடத்தப் போகிறார்கள்.

இனி பள்ளிக்கூடத்திலிருந்து பெண்கள் வெளியூர்களுக்குப் போட்டி, பிக்னிக் விளையாட்டு என செல்ல நேர்ந்தால் கண்டிப்பாக ஆசிரியைகள்தான் துணைக்குப் போக வேண்டும் என சட்டம் போட்டுவிட்டது கர்நாடக அரசு. கடந்த மாதம் தும்கூர் அரசு பள்ளியில் நாற்பது வயதைக் கடந்த ஆசிரியர் ஒருவர் விளையாட்டுப் போட்டிகளுக்கு மாணவிகளை வெளி இடங்களுக்கு அழைத்துச் சென்று பலாத்காரம் செய்து துன்புறுத்தியிருக்கிறார். பல பள்ளிகளில் ஆண் ஆசிரியர்களால் மாணவிகளுக்கு வெளியில் சொல்ல முடியாத வேதனைகள். கர்நாடக அரசின் பெண்கள் கமிஷன், இனி அரசு பெண்கள் பள்ளியில் ஆசிரியைகளை மட்டும் நியமிக்கச் சொல்லி பரிந்துரை செய்திருக்கிறது. பெண்ணைப் பெற்றவர்கள் இனி நிம்மதிப் பெருமூச்சு விடலாம். கூடவே மாணவிகளும்!

பரீட்சை முடிந்து ரிசல்ட் வந்த வண்ணமாக இருக்கிறது. ரிசல்ட் என்றால் மாணவ மாணவிகளுக்கு மட்டுமே பகீர் அல்ல. இனி ஆசிரியர்களுக்கும் அதே ஃபீலிங்தான். இருபது சதவிகிதத்திற்கும் குறைந்த அளவு தேர்ச்சி பெற்றிருந்தால் தலைமையாசிரியர்களின்மீது கடுமையான நடவடிக்கை எடுக்கப்படும் என கர்நாடக அரசு குண்டு போட்டிருக்கிறது. அவர்களுடைய ப்ரமோஷன் மற்றும் இன்னபிற சலுகைகளும் நிறுத்தி வைக்கப்படுமாம். பத்தாம் வகுப்பு பொதுத் தேர்வு என்றால் மாணவர்களுக்கு மட்டுமல்ல ஆசிரியர்களுக்கும் வயிற்றில் புளிதான்!

முன்னாள் பிரதமர் ஹெச்.டி. தேவேகௌடா நேஷனல் காலேஜ் க்ரவுண்டில் ஒரு கூட்டத்தில் பேசிக்கொண்டிருந்தபோது திடீரென்று சூடாகிவிட்டார். கடுமையான வெயிலில் போட்டிருந்த பந்தல் முறிந்துவிட, ஏராளமான விவசாயிகள் மேடையை நோக்கி உட்காராமல் மரங்களின் நிழலைத் தேடி ஓடினர். 'நீங்களெல்லாம் விவசாயிகள் தானா? வெயிலைக் கண்டு ஓடுபவன் விவசாயியாக இருக்க முடியாது. இங்கு மேடைக்கருகே வாருங்கள்" என்று கடுமையாக விமர்சித்தார். உறங்காமல் விழித்திருந்து பேசியதால் உண்மை நிலையைக் கண்டு கொதித்துவிட்டார் 'மண்ணின் மகா' தேவே கௌடா!

— லதா சேகர்

# மிரட்டி வாங்கிய கால்ஷீட்?



■ விக்ரம்சிங் தயாரிக்க, ப்ரியதர்ஷன் இயக்கும் 'கண்மணி நீ வரக் காத்திருந்தேன்' படத்தின் தலைப்பை 'லேசா லேசா' என்று மாற்றிவிட்டார்கள். தவிர படம் சம்பந்தமான செய்திகள், பேட்டிகள், புகைப்பட விநியோகம் போன்றவற்றை விநியோகிக்கும் பொறுப்பை ஒக்லிவி & மதர் என்ற கார்ப்பரேட் விளம்பர நிறுவனத்திடம் கொடுத்து புரட்சி செய்திருக்கிறார்கள்...

பாவம், பி.ஆர்.ஓக்கள் பிழைப்புல மண்ணு!

■ 'அழகி'யில் பள்ளி பருவத்து அழகியாக வந்து கலக்கிய மோனிகாவுக்கு டிராகுலா ரேஞ்சுக்குப் பயம். இவர் மலையாளத்தில் கவர்ச்சியாக நடித்த 'பேந்தம்' படம் தமிழில் டப் செய்யப்படுவதால் இந்தப் பயம்.

இதுக்குத்தான் ஆடை விஷயத்தில் அடிக்கடி கொள்கையை மாற்றக் கூடாதுங்கறது!

■ பல வருடங்களாக மேக்-அப் மேன். அப்புறம் போட்டோகிராபர். இப்போது 'கதாநாயகி' படத்தின் கதை, வசனகர்த்தா மற்றும் தயாரிப்பாளர். அட! விக்ரமன் படத்துலே காட்டுவது மாதிரி முன்னேறி இருக்கிறாரே யார் அவர்?... விஎம். நாகராஜன்!

ஆமா பழசை மறக்காமல், உங்க சொந்தப் படத்துக்கும் நீங்கதானே மேக்-அப் மேன்?

■ லொடுக்குப் பாண்டி பாப் கருணாஸ் காமெடியில் பிசியான பிறகு, அவரை நம்பி இருந்த இசைக்குழு அம்பேல் என்றுதான் எல்லோரும் நினைத்தார்கள். ஆனால் அவரது மனைவி கிரேசியும் ஒரு பாடகி என்பதால் அவரை வைத்தே இசைக்குழுவை நிர்வகிக்கிறாராம் கருணாஸ். படப்பிடிப்பு இல்லாத நேரத்தில் கச்சேரி என்றால் மட்டும் கருணாஸ் ஆஜர்!

இப்போ ஒரு கச்சேரிக்கு எவ்வளவு

வாங்குறீங்க லொடுக்கு?

■ சத்யம் தியேட்டர் அதிபர் தயாரிக்கும் 'பிரம்மபுத்திரா' படத்தில் நடிக்க, விஜய்யிடம் மிரட்டி கால்ஷீட் வாங்கியதாகச் செய்தி உலா வருகிறது. இந்தப் படத்தை இயக்கப்போவது 'அள்ளித்தந்த வானம்' படத்தின் இயக்குனர் ஸ்ரீதர் பிரசாத்தாம். இவர் சசிகலாவின் உறவினர் என்கிறார்கள்!

லாபத்தை 'அள்ளித் தந்து'விடாதா பிரம்மபுத்திரா!

■ புஷ்பவனம் குப்புசாமியும் நடிக்க வந்துவிட்டார். 'சொல்ல மறந்த கதை'யில் சேரனுக்கு அப்பாவாக நடிக்கிறார்.

பாட்டுப் பொளப்பு தப்பா ஆயிடாமப் பார்த்துக்குங்க!

■ மார்க்கெட் இழந்த முன்னாள் நாயகிகளைப் பிடித்து வந்து, தமது படத்தில் ஒரே ஒரு பாடலுக்கு ஆட வைக்கும் அல்டிமேட் அஜித், இப்போது 'ராஜா' படத்தில் அந்த வாய்ப்பை மந்த்ராவுக்குக் கொடுத்திருக்கிறார்.

என்ன ஒரு சீரிய கலைப்பணி?

■ கும்மாளம் படத்தில் அறிமுகமாகும் செல்வாவுக்கு, படப்பிடிப்புத் தளத்தில் திடீர் அதிர்ச்சி. குலதெய்வத்துக்கு மொட்டை அடிக்கிற காட்சி என்று சொன்னதும் அழாத குறையாக சம்மதித்த செல்வா, மொட்டை அடிக்கும்போது நிஜமாய் அழுதே விட்டாராம். அழுத செல்வம் கலைவாணர் என்.எஸ். கிருஷ்ணனின் பேரன். இந்தக் காட்சி இயல்பாய் இருக்கட்டும் என்று மொட்டை அடிக்கிற விஷயத்தை ரகசியமாய் வைத்திருந்து ஸ்பாட்டில் ஓபன் பண்ணிய அந்த இயக்குனர் சுசி மூர்த்தி!

ரவுண்ட்ஸ் பாய்

■ சியான் விக்ரம் நம்பர் ஒன் குதிரை என்று முத்திரை குத்தப்பட்ட பிறகு, அவர் நடித்த பிறமொழிப் படங்களையெல்லாம் தமிழில் டப் செய்து, டப்பு பார்க்க துடிக்கிறார்கள். மலையாளத்தில் லைலா விக்ரம் நடித்த படம் திரில்லாகத் தயாராகிக் கொண்டிருக்கிறது.

தமிழுக்குன்னு கொஞ்சம் ஸ்பெஷலாக ஷூட் பண்ணுவீங்களே?

■ 'மலமல' பாடலை அனுராதா ஸ்ரீராமுடன் இணைந்து பாடிய ரெஹானா, 'நினைவே' படத்தின் மூலம் இசை அமைப்பாளர் ஆகிறார். இவர் ஏ.ஆர். ரஹ்மானின் தங்கை...

அண்ணனுக்குப் போட்டி இல்லீங்களே?

■ கமல் நடிக்கும் 210வது படம் பஞ்சதந்திரம். அறுபத்து இரண்டு நாடுகளில் முதன் முறையாக வெளியிடுகிறார்கள். படத்தில் கமல் தமிழ் பேசுகிறார், யூகி மலையாளி, ரமேஷ் அர்விந்த் கன்னடர், ஸ்ரீமன் தெலுங்கர்... ஜெயராம்... அதுமட்டும் சஸ்பென்ஸ் என்கிறார்கள்.



— காதில் விழுந்தவை

# ஒரு வட்டத்துக்கு ரூ. 30 லட்சம்!

● கலைஞருக்கு இந்த ஆண்டு பிறந்த நாள் பரிசாக ரூ.35 லட்சம் மதிப்புள்ள ஆடம்பர கார் ஒன்றை சன் தொலைக்காட்சி சார்பாக பரிசளிப்பது என்று தீர்மானித்திருந்தார்கள். ஆனால் அவர் பிறந்த நாள் கொண்டாட்டங்களை ரத்து செய்து விட்டதால் பரிசைக் கொடுக்கவில்லை. அதற்குப் பதிலாக முரசொலி செல்வம், தாம் பயன்படுத்தி வந்த காரை கலைஞருக்குக் கொடுத்துவிட்டார்.



● சைதையில் முதல்முறை நடந்த வாக்குப்பதிவின்போது, அமைச்சர் அனிதா ராதா கிருஷ்ணனின் தொண்டர் படை, புகைப்படக்காரர் ராமு என்பவரின் காமிராவைப் பிடுங்கி சுக்கு நூறாக உடைத்துவிட்டது. காரணம் கள்ள வோட்டுக் கும்பலை அவர் படம் பிடித்திருப்பாரோ என்ற சந்தேகம்தான். உடனே புகைப்படக்காரர் போயஸ்கார்டன், செங்கோட்டையன் ஆகியோருக்கு ஃபாக்ஸ் செய்தி கொடுக்க, புகைப்படக்காரருக்குப் புதிதாகக் காமிரா வாங்கிக் கொடுக்கும்படி மேலிடம் அமைச்சருக்குக் கட்டளையிட்டுவிட்டது. அம்மா ஆணையாயிற்றே! உடனே அமைச்சர் புகைப்படக்காரரைக் கூப்பிட்டு புதுக் காமிரா ஒன்றை வாங்கிக் கொடுத்துவிட்டார்.

● சென்னை அயனாவரம் பகுதியில் உள்ள அ.தி.மு.க பெண் கவுன்சிலர் ஒருவர் 'கட்டிங்' பெறுவதில் சாதனை படைத்து விடுவார் என்கிறார்கள். சமீபத்தில் வீடு கட்டிய ஒருவர், தெருவில் வாசற்படியைக் கூடுதலாக வைத்துவிட்டார். உடனே பத்தாயிரம் ரூபாய் கேட்டு நச்சரிக்கத் துவங்கினார் கவுன்சிலர். "மூன்று லட்சம் செலவு செய்து கவுன்சிலராகியிருக்கிறேன்; எப்படி வசூல் செய்வது? என்று கேட்கும் இவர் மட்டும் வீட்டு வாசலில் தெருவை மறைத்துக் கொட்டகை போட்டிருக்கிறாராம்.

● சைதைப்பேட்டைத் தொகுதியில் ஒரு வட்டத்திற்கு மட்டும் ஒரு லட்சம் ரூபாய் வரை அ.தி.மு.க பிரமுகர்கள் செலவழிக்க வேண்டி வந்ததாம். ஆனால் தலைமை கழகத்திலிருந்து நிதியுதவி இடையாது என்று சொல்லி விட்டார்களாம். பத்து வட்டத்திற்கு பொறுப்பாக இருந்த ஆளும் கட்சிப் பிரமுகர்கள் "அங்கே இங்கே" கடன் வாங்கி(?) செலவு செய்ததாக சொல்கிறார்கள்.



● இடைத்தேர்தல் முடிவுகள் வெளிவந்த நிலையில் தி.மு.க முன்னாள் மாண்புகள் மீதான பிடி இறுகும் என்று சொல்லப்படுகிறது. "ஆனால் ஊழல் வழக்குகளை மக்கள் சீரியசாக எடுத்துக் கொள்வதில்லை. இந்த விவகாரத்தில் வேகமாகச் செயல்பட்டால் நாங்கள் சொன்னது போலவே 'பழி வாங்கல்' என்று பிரசாரம் செய்யப்படலாம். எனவே எங்கள் நோக்கம் தி.மு.க பிரமுகர்களைக் கொஞ்சம் டென்ஷனிலேயே வைத்திருந்து, ஆட்சி நான்காண்டு காலம் முடிந்த பிறகு ஐந்தாவது வருடம் சார்ஜ் ஷீட், கைது, சம்மன் என்று அதிரடி அடித்தால் பொதுத்தேர்தலில் தி.மு.க மாண்புகளை தோலுரித்துக் காட்டலாம் என்பதுதான்" என்கிறார் அ.தி.மு.க ஸீனியர் பிரமுகர் ஒருவர்.

— சஞ்சயன்

# பக்கிரிப் படும்பாடு!

## மும்பை மசாலா

மஹாராஷ்டிரத்தில் மழைக்கால அறிகுறிகள் தென்பட ஆரம்பித்து விட்டனவே? ஜனநாயக முன்னணி அரசுக்குள், இடி இடித்து, மின்னல் வெட்டி, புயல் வீசிக் கொண்டிருக்கிறது. ஆம்! தேசியவாத காங்கிரஸின் (என்.சி.பி.) சுனில் தத்கரே, ராய்கட் ஜில்லா பரிஷத் தேர்தலில் தங்களுக்கு எதிராக இயங்கியதாக பிடபிள்யூபி. குற்றஞ்சாட்டி, அவரை அமைச்சரவையிலிருந்து நீக்கியதா? கிடுகிடுவென்று ஒரு கமிஷனை நியமித்து, விசாரணை செய்து, அவரைக் குற்றமற்றவர் என்று நிரூபித்து, மறுபடியும் மந்திரி பதவியைத் தூக்கிக் கொடுத்து விட்டது அரசு! பொங்கி எழுந்த பி.டபிள்யூ.பி., தன் ஆதரவை (ஐந்து எம்.எல்.ஏக்கள்) வாபஸ் வாங்கியது. சி.பி.எம்(2), பி.ஆர்.பி(2), சுயேச்சைகள் பன்னிரண்டில் ஏழு பேரையும் காலை வாரிவிடச் செய்தது. ஆக, 288 மெம்பர்கள் உள்ள சபையில் இப்போது அரசுக்கு ஆதரவளிப்பது நூற்றி நாற்பத்தைந்து பேர் தான்.

அரசு பீடமே ஒற்றைக் காலில் நிற்கிறது. (ஒரே ஒரு சீட்தானே மெஜாரிட்டி!) தங்கள் கட்சியினரின் பேரிலுள்ள ஊழல் குற்றச்சாட்டுகளிலிருந்து மக்களைத் திசை திருப்ப, என்.சி.பிகாரர்கள் வேண்டுமென்றேதான் நாடகமாடுகிறார்கள் என்கிறது காங்கிரஸ். சரத்பவாருக்குத் தர்ம சங்கடம்; சிவசேனை _ பிஜேபி கண்ணிமைக்கும் நேரத்தில் மீண்டும் ஆட்சியைப் பிடித்து விடப் போகிறதே என்ற பீதியில், அவர் சி.பி.எம்., பி.ஆர்.பி. தலைவர்களை எல்லாம் சந்தித்து, "குஜராத் நிலவரத்தை மறக்காதீர்கள்" என்று கலவரப்படுத்திக் கொண்டிருக்கிறார்.

மற்றவர்களுக்குக் கொடுக்கும் அட்வைஸை, தன் கட்சிக்காரர்களுக்குக் கொடுத்தால் என்ன! புத்திமதிகள் எப்போதுமே பிறர்க்கு வழங்குவதற்காகத் தானோ?



• சுனில் தத்கரே

வழங்குவதா? வேண்டாமா? என்ற குழப்பத்திலிருக்கிறது வோட்டர்ஸ் கிளப்; எதை, யாருக்கு என்கிறீர்களா? ஹானரரி மெம்பர்ஷிப்பை, சச்சின் டெண்டுல்கருக்கு! இந்தக் கிளப்பில் உள்ள விளையாட்டுகளை விளையாடுபவர்களுக்கு, அதுவும் அர்ஜுனா அவார்டு வாங்கியவர்களுக்கு மட்டுமே கௌரவ உறுப்பினர் பதவி பிராப்திக்கும். இங்கே கிரிக்கெட் கிடையாது; சச்சினுக்காக என்றே சிலர் ஆட ஆரம்பித்தாலும், அது நிலைக்கவில்லை; இங்கே மெம்பர்ஷிப் கிடைப்பதே பெரும்பாடு; பத்து வருடக் காத்திருப்பு, பதினைந்து லட்சம் ஃபீஸ் என்று ஒரே தடபுடல்; ஷாருக்கான் ஐந்து வருடம் காத்திருந்தார். சல்மான், சுர்பாஸ், சோஹேல் போன்ற கான்களுக்குக் காத்திருப்புக்குப் பின்னும் நன்னடத்தை அடிப்படையில் மெம்பர்ஷிப் நிராகரிக்கப்பட்டது. தமது நண்பரின் விருந்தாளியாக இங்கே ஆட வரும் சச்சினை மெம்பராக்கினால் கிளப்பின் மவுசு கூடும் என்று விசிறிகள் கையெழுத்து வேட்டையாடினர். 'வெயிட்

டிங்கில் போடாமல் உடனே எடுத்துக் கொள்ளலாமே தவிர, ஓசியில் கூடாது; அவரும் மெம்பர்ஷிப் ஃபீஸை கட்டியே ஆக வேண்டும்' என்ற கூக் குரல் வலுத்திருக்கிறது. இதற்கிடையில், சச்சினுக்கு உண்மையிலேயே இதில் விருப்பமா? இல்லையா? என்பது அவர் வெஸ்ட் இண்டீஸிலிருந்து திரும்பினால்தான் தெரியும்!



• 'பகவத் சிங்'குகள்... - பாபி தியோல் - அஜய்



• விருப்பமா? - சச்சின்

தெரியும் தெரியும் என்று மார்தட்டிவிட்டு, எதையாவது உளறிக் கொட்டினால் சாதாரணமாக அவர்மீது கோபம் கொப்பளிக்கும்; ஆனால் உளறுவோர் உளறினால் மலர்ச்சியும் தோன்றும்; உதாரணத்துக்கு நெல்சன் மண்டேலாவை எடுத்துக் கொள்வோம். பாலிவுட்டைப் பற்றி முற்றும் தெரிந்த தோரணையில், ஒரு மும்பைப் பத்திரிகையாளரிடம் "நீங்கள் அமிதாப்பையும் ஷாருக்கானையும் சந்தித்திருக்கிறீர்களோ? 'கபி குஷி' 'கபி ஃபன்'னில் அவர்கள் நடிப்பு அபாரம்" என்று கமெண்ட்டடித்தால் சிரிக்கத்தானே தோன்றும்? "என்ன இது? 'கபி குஷி' 'கபி கம்'மை இப்படிக் குதறுகிறாரே" என்று நினைக்கவா தோன்றும்? நெல்சன் மண்டேலாவை எல்லாம் பாலிவுட் ஆகர்ஷிக்கத் தொடங்கி விட்டால், அப்புறம் 'கபி (எப்போதாவது) ஃபன்' ஏனுங்க? ஹமேஷா (எப்போதுமே) ஃபன்தானே?

"ஃபன்னி"..."க்ரேஸி" என்று நினைக்கத்தான் தோன்றும்; ஆனால் ஒரே சமயத்தில், பகத்சிங்கை வைத்து ஐந்து பாலிவுட் படங்கள் உருவாகியுள்ளன என்பதுதான் ஜீரணிக்க முடியாத உண்மை; ஒன்று ரிலீசாகிவிட்டது; இரண்டுக்கு ஷூட்டிங் நடந்து கொண்டிருக்கிறது; தவிரவும் அஜய் தேவ்கானை ஹீரோவாகக் கொண்டு ஒன்றும், பாபிதியோலைக் கதாநாயகனாக்கி மற்றொன்றும்... ஒரே நாளில், (ஜூன் 7) ரிலீசாகியுள்ளன. அஜய் தேவ்கான் இதற்காகவென்றே பகத்சிங் பற்றிய புத்தகங்களை எல்லாம் கரைத்துக் குடித்திருக்கிறார். சிங்கின் அசல் சகோதரரான குல்தாரைச் செட்டுக்கு வரவழைத்து பகத்சிங், தன் தம்பிக்கு எழுதுவதுபோல் ஒரு கடிதத்தை அவரை விட்டே எழுதச் செய்திருக்கிறார். ரொமான்ஸ் அதிகமில்லாததால் சாதாரண ஹீரோயின்தான்.

பாபி தியோல் புத்தகமெல்லாம் படிக்கவில்லை; ஆனால் 'அசப்பில் நான் பகத்சிங் மாதிரியே இருக்கிறேன்' என்கிறார். சிங்கின் உறவினர் யாரையும் இவர் வளைக்கவில்லையாயினும், கதாநாயகியாக ஐஸ்வர்யா ராயைப் போட்டிருக்கிறார்.

இரு நடிகர்களுமே, "எங்களிடையே எந்தவித விரோதமுமில்லை; இப்படி ஒரு பைத்தியக்காரத்தனம் மீண்டும் நிகழாமல் எதிர்காலத்தில் ஜாக்கிரதையாக இருப்போம்" என்கிறார்கள்.

— ஜெயஸ்ரீ ராஜ்

# சோனியா பிரதமராக



• சமர்த்தாயிருந்தால்...

● எம்.சுப்ரமணி, விராலிப்பட்டி

? இடைத்தேர்தலில் மூன்று தொகுதிகளையும் அ.தி.மு.க. கைப்பற்றினால் அந்த வெற்றியை எப்படிச் சொல்வது?

! பிளஸ் த்ரீ - ஜனநாயக நேர்மைக்குப் பிளாஸ் திரி!

● கீதா ரத்தின சாமி, சத்யமங்கலம்

? இன்றைய நடப்பில் 'மெனக்கெட்டு' என்பதற்கொரு பொருத்தமான சம்பவம் கூற முடியுமா?

! கர்நாடக அரசு அலுவலக ஊழியர்கள் குறித்த நேரத்தில் வந்து வருகைப் பதிவேடுகளில் கையெழுத்துப் போடுகிறார்களா என்று கண்காணிக்க பிரத்யேகமாக ஒரு துறையையே எஸ்.எம். கிருஷ்ணா உருவாக்கியுள்ளது தான்.

● பா. குணா, சேத்துப்பட்டு

? சமீபத்தில் உங்களைச் சிந்திக்க வைத்த சம்பவம்..?

! விமான விபத்தில் குரோனியே அகால துர்மரணம் அடைந்த கட்டத்தில்கூட 'கிரிக்கெட் சூதாட்ட புகழ்' வீரர் என்றுதான் நாளிதழ்கள் அவரைக் குறிப்பிட்டன. ஒரு குற்றம் ஏராள சாதனைகளுக்குத் திரைபோட்டு விடுகிறதே!

● சே. வள்ளி, தென்கடப் பந்தாங்கல்

? தமிழக அரசியலில் மிகவும் ஆபத்தான நிலை எது?

! வாஸ்து சாஸ்திரம் தெரியாமலிருப்பதுதான்.

● க.நா.இராஜேஸ்வரன், மொரட்டுப்பாளையம்

? சினிமாவில் புகை பிடிக்க வேண்டாம் என்று நடிகர்களுக்குப் பசுமைத் தாயகம் தலைவர் அன்புமணி வேண்டுகோள் விடுத்துள்ளாரே...? நடிகர்கள் செவிமடுப்பார்களா?

! மாட்டாங்க; சமுதாயத்தைப் பார்த்துத்தான், பிரதிபலித்துத்தான் தாங்கள் படம் எடுப்பதாக வழக்கம் போல வாதாடுவாங்க.

● வி.ருக்பஸ், கோவை-37

? மகப்பேறு இல்லாத சிலர், தங்கள் கடைசி காலம்வரை 'தத்து'கூட எடுக்காமல் இருக்கிறார்களே, ஏன்...?

! அது அவரவர் சௌகரியத்தையும் மனோநிலையையும் பொறுத்த முடிவு. மனத்திலிடமின்றி ஒரு குழந்தையைத் தத்தெடுத்து வளர்ப்பது அக்குழந்தைக்குச் செய்யப்படும் மிகப் பெரிய அநீதி.

● கிருஷ்ண ராஜ் கோபால், சென்னை - 92

? சில வாரங்களுக்கு முன்பு, 'பாக்.குடனான பிரச்னைக்குத் தீர்வுகாண, கொஞ்சம் இறங்கி வந்து பேச்சுவார்த்தை தொடங்குவதில் தவறில்லை' என்று எழுதியிருந்தீர்கள். இன்றுள்ள நிலையில்..?

! அதையேதானய்யா சொல்கிறேன். முஷாரஃப் வேறு, பேச்சுக்குப் பேச்சு 'பேசலாம்'னு சிக்னல் கொடுத்து வருகிறார். உலக நாடுகளும் வலியுறுத்துகின்றன. 'கபால்'னு வாய்ப்பைப் பிடித்துக் கொள்ள வேண்டியதுதானே!

● எம்.ராஜேந்திரன், லால்குடி

? 'படிப்பாளி, அறிவாளி, ஆரோக்கியமானவன் - நான்தான் ஜனாதிபதி பதவிக்குப் பொருத்தமானவன்' என்று ராம் ஜெத்மலானி கூறுகிறாரே..?

! இப்படித் தற்பெருமை பேசுகிறவர் பண்பாளராயிருக்க முடியாது. எனவே அப்பதவிக்கு ஏற்றவராகவும் இருக்க முடியாது.

● ஜி. மாரியப்பன், சின்னமனூர்

? பேசாமல் இந்தியாவையும் பாகிஸ்தானையும்



• டிசம்பர் டு மே!



• மெனக்கெட்டு துறை!

**நீங்கள் கேட்டவை - தராசு**

முன்புபோல் ஒரே நாடாக இணைத்துவிட்டால் இவ்வளவு பிரச்னைகள் ஏற்படாது அல்லவா...?

● கே.கே. வெங்கடேசன், சென்னை - 58

? டிசம்பர் 13 நிகழ்ச்சிக்குப் பிறகே இந்தியா பாகிஸ்

அவை அச்சத்தின் விளைவு என்பதைக் காட்டிலும், 'எதை வேண்டுமானாலும் நாங்கள் செய்வோம்; செய்ய முடியும்' என்ற அகந்தையின் விளைவு

* தும்பை விட்டுவிட்டு....

# இருந்தால்..?





• 'அன்பு' வேண்டுகோள்!

! ஒரே நாடாக இருந்த போதுதானே பாக். பிரிவினைப் பிரச்னையே ஆரம்பித்தது! அதன் தொடர்ச்சிதானே இப்போது நாம் காண்பதெல்லாம்! சரித்திரத்தை மாற்றி அமைக்க முடியாது.

● ஜி.ஜெயராமன், கூந்தலூர்

? எளிமைக்கும் வறுமைக்கும் என்ன வித்தியாசம்?

! எளிமை : நம் தலைவர்களும் அரசியல்வாதிகளும் மறந்துவிட்ட அல்லது புறக்கணிக்கும் பண்பு.

வறுமை : பெரும்பாலான இந்தியர்கள் அனுபவிக்கும் அவஸ்தை.

● எஸ்.தாண்டவன், மயிலாடுதுறை *

? அணுகுண்டு வெடிப்புச் சோதனைக்குத் தீவிர எதிர்ப்பு தெரிவித்திருந்தீரே - இன்று பாகிஸ்தான் நம்மீது அணுகுண்டு போடலாம் என்று மிரட்டல் வருகிறதே; இதற்கு என்ன சொல்லப் போகிறீர்கள்?

! நாம் அணு ஆயுதத்தை உற்பத்தி செய்ததற்குப் போட்டியாகத்தான் பாகிஸ்தானும் உற்பத்தி செய்தது; இப்போது உறுமுகிறது. அதனால்தான் அப்போதே இந்த விபரீதத்தை எதிர்த்தோம். பாகிஸ்தானின் மிரட்டல் ஒரு ராணுவ ஆட்சியின் யதேச்சாதிகார மிரட்டல் என்பது நமது நிலைமையை மேலும் அபாயமாக்குகிறது.

தானுக்குப் பதிலடி கொடுத்திருக்க வேண்டும் என்ற பிரதமர் வாஜ்பாய் கருத்து குறித்து...?

! மற்ற பல விஷயங்களைப் போலவே இதிலும் ரொம்பக் காலம் கடந்த ஞானோதயம்.

● அ. பரஞ்ஜோதி, எலவம்பட்டி □

? சோனியா இந்நேரம் பிரதமராயிருந்தால் பாகிஸ்தான் பிரச்னையை எப்படி சரி செய்திருப்பார்?

! பேச்சு வார்த்தைக்கு ஒப்புக் கொள்வதோ முயற்சி செய்வதோ ஒரு பி.ஜே.பி. பிரதமரைக் காட்டிலும் காங்கிரஸ் பிரதமருக்குச் சுலபம். கட்சிக்குள்ளேயே எதிர்ப்பும் கசப்புணர்வும் இருக்காது. ஆதலால் சோனியா இதற்குள் பேச்சு வார்த்தை நடத்தி முடித்து, நற்பலன் கண்டிருப்பார். (அசடாயிருந்தாலொழிய)

● டி. விஜயகுமார், வேலூர்

? தோல்வி பயம் அ.தி.மு.க. அணிக்கு வந்துவிட்டது என்பது உண்மையா...?

! இடைத் தேர்தல் அந்திகளைத்தானே சொல்கிறீர்கள்!

எனலாம்.

● வே. முருகேசன், சென்னை - 88

? குடும்பத் தலைவர் (ரேஷன் அட்டையில் போட்டோவில் இருப்பவர்) போனால் மட்டுமே ரேஷன் அரிசி என்று கூறிவிட்டார்களே - இது நியாயமா?

! 'அநியாயம்! அதைவிட அநியாயம் ரேஷன் கடையில் விற்கும் 'ஊட்டி' டீத்தூளை வாங்கினால்தான் அரிசி, சர்க்கரை தருவேன் என்று கட்டாயப்படுத்துவது - மோசமான நிர்வாகத்துக்கு மற்றொரு உதாரணம்.

● பி.எஸ்.முருகேஷ், ஈரோடு - 1

? 'எங்கள் த.மா.கா. ஜனநாயகப் பேரவைக்கு ரஜினி ரசிகர்களின் முழு ஆதரவு உள்ளது' என்று ப. சிதம்பரம் கூறியிருப்பதைப் பற்றி...?

! அதற்காக சொந்த பலத்தை வளர்த்துக் கொள்ளாமல் இருந்துவிடப் போகிறார்; ஆபத்து!

□ ரூ.100 பரிசு பெறுபவர் : அ.பரஞ்ஜோதி, எலவம்பட்டி அஞ்சல், ஜாகண்டபுரம் (வழி), ஓமலூர் தாலுகா, சேலம் - 636 501.

* ரூ.50 பரிசு பெறுபவர் : எஸ்.தாண்டவன், 14/6, மேலமடவிளாகம், மயிலாடுதுறை - 609 001.

# குறுவையா

**• வதனா**



**வா**சலில், வெண்மையாகச் சிதறிக் கிடந்த முருங் கைப் பூக்களின் மீது சருவ சட்டியிலிருந்த சாணிக் கரைசலைத் தெளித்தாள் கிட்னம்மா. சாணித் தண்ணி பட்டு அவற்றின் நிறம் பாதி கரும் பச்சையும் பாதி வெள்ளையுமாகக் காட்சியளித்தன.

விடிந்தும் கூவிக்கொண்டிருந்த பக்கத்து வீட்டுச் சேவல், சாவகாசமாக இவள் வீட்டு வாசலில் நடந்தது. நேற்று முள் கிழித்திருந்த அதன் கொண்டையில் இரத் தம் காய்ந்து போய், முருங்கை பிசின் மாதிரி திட்டுத் திட்டாய் இருந்தது.

எதிரில் கோழிக் கூட்டின் மீதிருந்த நான்கைந்து கட்டை வாரியல்களில் தென்னங்கீற்று வாரியலை எடுத்தாள். அதன் கைப்பிடி அருகில் கோழி எச்சம். பக்கத்தில் கிடந்த பழைய துணி மீது அந்தப் பகுதியை வைத்து வாரியலை அங்கும் இங்கும் இழுத்துத் தேய்த்தாள். அரைகுறையாகத்தான் போயிருந்தது. 'சரி பரவாயில்லை' என்று பெருக்க ஆரம்பித்தாள்.

தரையில் இரண்டு இழுப்பு இழுத்ததும் வயிற்றுக் குள்ளிருந்து 'ர்ர்'ரென்று சப்தம் எழும்பி வாய் வழியே காற்றாகப் போனது. ஒரு நிமிடம் இடுப்பைப் பிடித்துக் கொண்டு நிமிர்ந்து நின்றாள். ஆயாசமாக வந்தது அவ ளுக்கு. கண்கள் இலேசாகச் செருகின. பசி. இன்னும் செத்த நேரம் தூங்கலாம் போல இருந்தது. வேண்டாம் ஒரேயடியாய் வாசலைத் தூத்துவிட்டுத் தூங்கலாம் என்று பெருக்க ஆரம்பித்தாள்.

பறவைகள் கூட்டமாய்க் கிழக்கு நோக்கிப் பறந்து கொண்டிருந்தன. இறக்கை அடிக்கும் ஒலி 'ஸ்ஸ்' என்று காற்றில் மிதந்து வந்தது.

வாசலைப் பெருக்கும் 'சரட் சரட்' - சப்தம் கேட்டு கீழ வீட்டு மாரியம்மா, "என்ன பெரியம்ம, ராத்திரி நேரத்தோடயே தூங்கிட்டியா?" என்றாள்.

அவள் முத்துப் பாண்டிக்குப் புதிதாகத் திருமண மாகி வந்தவள். பத்தமடைக்காரி. திமிர் பிடித்தவள், நகைகளோடும் இரண்டு காரில் சீதனத்தோடும் வந் தாள். இன்னும் கழுத்தில் புதுச் சங்கிலிகள் நெஞ்சுவரை

விழுந்து ஆடுகின்றன. இவ்வளவுக்கும் முத்துப் பாண்டி ஒண்ணும் கலெக்டருக்குப் படிக்க வில்லை. பெரிய வேலையுமில்லை. ரைஸ் மில் ஐயர் வீட்டில் எடுபிடிதான். எடுபிடிக்கே இவ்வளவு நகை நட்டோடும் வந்திருக் கிறான்.

'தங்கிடு' மட்டும் ஒழுங்காக இருந்திருந் தால் இவளை விட அதிக நகை நட்டோடு கல்யாணம் முடித்திருக்கலாம் என்று நினைத் தாள் கிட்னம்மா. முத்துப்பாண்டியை விட வும் என் மகன் 'தங்கிடு' அழகு. அவன் வளத்திக்கும், தேகத்துக்கும், நான், நீ என்று போட்டி போட்டுக் கொண்டு பெண் கொடுக்க வருவார்கள். ஆங்.... எல்லாந் தலைவிதி! பெருமூச்சு விட்டாள்.

"ஏ... பெரியம்ம, ஒன்னயத்தானக் கேக்கன், காது அவிஞ்சு போச்சா ஒனக்கு!"

"ஆங்... ஆமா தாயி, பொழுதோடயே படுத்துட்டேன். விடிய விடிய முழிச்சு எந்தக் கடல்ல முத்தெடுக்கப் போறேன்!"

"நேத்து அவ்வோ, தெப்பக்குளத்துல மீன் புடிச்சுட்டு வந்திருந்தாவோ, கொழும்பு நெறய மிச்சமிருந்தது. கொண்டு வந்து, 'பெரியம்ம; பெரியம்மன்னு வாசல்ல நின்னு அவயம் போடுதேன்; பேச்சு மூச்சே இல்ல; அந்த நேரம் பாத்து சடச்சி வந்தா... அவ்ளத்தையும் அவட்டத் தூக்கிக் கொடுத்தேன்!"

"ஏட்டி அதுயென்ன வம்பாவா போவும்? அடுப்புல சுடவச்சி, கண்ட வச்சிப் போட் டனா, காலைல சாப்புட அல்வா மாதிரி



இருக்குமட்டி, அவகிட்ட கொடுத்தேங்கிய..."

"இவ்வோளுக்கு அது தொண்டையில எறங்கல."

"மீனு ஏம்ட்டி எறங்கல."

"ரெண்டு மொளத்தல் கூடிப் போச்சி; வாயில வச்சா எரிச்சிக் கொல்லுது; பின்ன என்ன பண்ண சொல்லுத? கழுதய அவ கிட்ட கொடுத்தேன். வீணா தூரத்தானப் போடணும்."

சுருக்கென்றது கிட்னம்மாவுக்கு. தூரப் போடுவதைக் கொண்டு வந்திருக்காளே... என்னய என்ன எச்சிக்கலைன்னு நெனைச்சிட்டானா? எடுபட்டவ; அவ வாயில ஈரமண்ணு விழ...

குபுக்கென்று கண்ணீர் வந்தது. வேறெதுவும் அவளுடன் பேசவில்லை. அவசர அவசரமாகத் தூத்து ஒதுக்கிவிட்டு வீட்டுக்குள் போய் உட்கார்ந்தாள்.

சேலை முந்தானையை அந்த மண் தரையில் அப்படியே விரித்து ஒருக்குச் சாய்த்துப் படுத்தாள்.

இந்தப் பய ஒழுங்கா இருந்தாம்னா, நான் இந்த நெலக்கு ஆளாவணுமா? ஏ தெய்வமே என்னய இதுக்குத்தான் படைச்சியா?"

கண்ணைத் துடைக்க துடைக்க அழுகை பீறிட்டு வந்துகொண்டிருந்தது. ஊற்று மாதிரி. ரணத்தின் வெளிப்பாடு.

**த**ங்கிடு ஒன்றும் அப்படிப் படிக்கவில்லை. ஊர் சுற்றிக்கொண்டிருந்தான். பாபநாசம் மலைக்கு மேலே சேர்வலாறு அணை கட்ட லாரியில் வேலைக்கு ஆள் கூட்டிச் சென்றார்கள். சோத்துச் சட்டியைத் தூக்கிக்கொண்டு அப்போது போனதுதான் முதன்முதலாக அவன் வேலைக்கென்று சென்றது. ஒன்றரை வருட வேலை. மூன்றாவது மாதத்தில் அவன் வாங்கிக் கொடுத்த சேலையால் பூரித்துப் போனாள் கிட்னம்மா. இந்தப் பூரிப்பு நீண்டநாள் நீடிக்கவில்லை. அணைக்கட்டு முடிந்து வேலையில்லாமல், கூப்பிட்ட வேலைக்குச் சென்று வந்த நாளில் அவன் நடை உடையில் மாற்றம் தெரிந்தது. கைகளில் தாராளப் பணப் புழக்கம். என்னதான் மாங்கு மாங்கென்று வேலை செய்தாலும், முப்பது ரூபாய்க்கு மேல் தேறாது. ஆனால் தங்கிடு கைகளில் நூறுகளாய்ப் புரண்டது. ஒருமுறை கேட்டாள்.

"ஏதுல இவ்ளவு ரூவா."

"ஆங்... தெருவுல கெடந்தது?"

"தெருவுலயா..."

"ஆங்... கெடக்கும் தெருவுல... போலியா, எப்படி வந்துச்சு. ஏன் வந்துச்சின்னுட்டு..."

அதன் பிறகு எதுவும் கேட்கவில்லை அவள். ஒருநாள் உச்சி வெயிலில் மேலத்தெரு மோர்க்காரி, "ஏக்கா... ஒம் மவனே போலீஸ்காரனுவோ அடி அடின்னு அடிச்சுக் கூட்டிட்டுப் போறானுவத்தா" என்றபோது அரண்டு விட்டாள்.

தலையை விரித்துப் போட்டு ஒப்பாரி வைத்துக்கொண்டே ஓடியவள் பிள்ளையார் கோவில் அருகே, அதைப் பார்த்ததும் பேயறைந்தது போல் நின்று விட்டாள்.

ஒரு பெரிய சாராயப் பானையைத் 'தங்கிடு'வின் தலையில் ஏற்றி, "இனும சாராயம் வடிக்க மாட்டேன்னு சொல்லிட்டே நட" என்று போலீஸ்காரரொருவர் லத்தியால் அடிக்க, அடி தாங்காமல் அவன் அழுது கொண்டே போவதைப் பார்க்க முடியவில்லை அவளால். கண்ணீர் முட்டி வந்தது.

எந்தத் தொழில் அவன் அப்பனோடயே போகட்டும் என்று நினைத்தாளோ அதே தொழிலில் மகன்! அழுவதைத் தவிர வேறெதுவும் செய்ய முடியவில்லை.

**உ**டலில் வலு இருந்தவரை கருவை முள் வெட்டி விற்பது, பந்தல் முள் புடுங்கி விற்பது, களை எடுக்க, அது இது என்று முயன்று பார்த்துவிட்டாள் கிட்னம்மா. இப்போது முடியவில்லை. கைகால் ஆட ஆரம்பித்துவிட்டது. முகத்தில் சுருக்கங்கள் அதிகமாகிவிட்டன. குனிந்து நிமிர்ந்து வேலை பார்க்க முடியவில்லை. இடுப்பு பிடித்து விடுகிறது. கண் பார்வை வேறு மங்கிக் கொண்டே வந்தது. இந்தா இருக்கிற சின்ன வாய்க்காலிலிருந்தே தண்ணீர் தூக்கி வர முடியவில்லை. மேல்மூச்சு கீழ் மூச்சு வாங்குகிறது.

"தெரியுமா, அந்த டாக்டர், ரஜினி ரசிகராம்..."

"அதுக்காக, 'உங்களை எப்ப அனுப்புவேன்... எப்படி அனுப்புவேன்னு யாருக்கும் தெரியாது; அனுப்ப வேண்டிய நேரத்துல டாண்ணு அனுப்பிடுவேன்'னு சொல்றது ரொம்ப ஓவருங்க!"

- சீர்காழி வி. ரேவதி

ஒருமுறை 'தங்கிடு'விடம் கேட்டாள்.

"இந்த நாசமாப் போற தொழிலு தேவயால...? நாலு பேரு மதிக்க மாதிரி, கொத்த வேலைக்குப் போயுமா பொளைக்க முடியாது?"

"சும்மா... தொண தொணக்காத... இதுநாள் வரை போலீஸ்காரன் துட்டு வாங்கிட்டுச் சும்மாதான் இருந்தான். புதுசா வந்திருக்க இன்ஸ்பெக்டரு திமிறு பண்ணுதான். எங்க போயிருவான். கொஞ்ச நாள்ல சரியாயிருவான்."

"சாராயத்தை வித்துதான் வயிறு வளக்கணுமா? ஒங்கூட சேந்தவன்தானல முத்துப்பாண்டி.. அவன் பொழைக்கலயா? ஒங்கப்பன் இப்படித்தான் போலீஸ்காரன் கையால அடிவாங்கிச் செத்தான். இப்ப நீ.."

"இந்த எழவுக்குத்தான் வூட்டுக்கு வர மாட்டேங்க; ஒன் எமத்துல நிக்க முடியாது."

"ஏம்ல... நீ எப்ப பரதேசம் போற; எப்ப வீட்டுக்கு வாரன்னு ஒரு மண்ணும் நீ தெரியல, என்னால முடிஞ்ச அளவுக்கு ஒழச்சித் திங்கன்; இவ்வளவு வயசுக்கு மேல என்னால வேலை செய்ய முடியுதா? எனக்கென்ன வயசா திரும்புது...? நான் என்ன ஈரமண்ணயா திங்க; குருவிக்கும் கோழிக்கும் போடுத குறுணய, வெக்கத்த விட்டுக்கேட்டு அவரு வீட்ல வாங்கியாரன்; இதவிட வேறென்ன கேவலம் எனக்கு வேணும்? அவளும் ஒரு அளவுக்கு மேல தருவாளா சண்டாளா?"

"இங்க பாரு, இருந்தா தின்னு; இல்லனா ஒரேயடியாப் போய்த் தொல, நிம்மதியா இருக்கும்."

அன்று சென்றவன்தான்; இன்னும் வரவில்லை. ஜெயிலில் இருக்கிறானோ? சாராயம் விற்றுக் கொண்டிருக்கிறானோ?



கிட்டனம்மாவுக்கு இப்போதெல்லாம் வயிற்றுப்பாட்டுக்கு இரை போடுவது பம்பாய் வீட்டுக்காரம்மாதான். ஏதோ இரக்கப்பட்டு வாரம் ஒருமுறை அவள் வீட்டுக் குறுணையைக் கொடுத்துக் கொண்டிருக்கிறாள்.

முதலில் கேவலமாகத்தான் இருந்தது. கோழிக்குப் போடும் குறுணையை வாங்கித் திங்கவா? இதைப் போய் எப்படிக் கேட்க?

தயக்கம், கழிவிரக்கம், அழுகை எல்லாம் மனத்துக்குள் வந்து புரண்டது. இரண்டு நாள் பட்டினி கிடந்து பார்த்தாள். மூன்றாவது நாள் முடியவில்லை. பசிக்கு முன் வேறெதுவும் நிற்கவில்லை.

கேட்டுவிட்டாள். "ஏத்தாயி குறுணை இருக்குமா?" கூனிக் குறுகிவிட்டாள். உடல் ஒடுங்கி உலகமே தன்னை ஒதுக்கிவிட்டது போல ஒரு வெறுமை அவள் உள்ளத்தில் எழுந்து அடங்கியது.

பம்பாய்க்காரர் பொண்டாட்டி என்ன நினைத்தாளோ? ஒரு பெட்டி முழுவதுமாகக் கொடுத்தாள். கல்லும் மண்ணும் கலந்த குறுணை. நன்றாகப் புடைத்தெடுத்து கல்லைப் பிரிக்க வேண்டும்.

"இது காலியாச்சுனா வெட்கப்படாம வந்து கேளு."

அவள் நல்ல மனத்தை என்ன சொல்வது?

வீட்டுக்குள் படுத்துக் கிடந்தவள் எழுந்தாள். மாரியம்மா கேட்டதில் என்ன தப்பு? நான் ஒண்ணுமத்தவதானே?

'ஆமா... ஒண்ணுமில்லாதவதான்னாலும் அக்கம் பக்கத்து வீட்ல இதுவரை கை நீட்டுனதில்லயே?'

'எடுக்கது பிச்சை. இதுலயென்ன அவா இவா பாகுபாடு?'

'சரிதான்... மாரியம்மா சரியாத்தான் கேட்டா... நீ பட்னியா கெடப்பேன்னு கேட்டிருப்பா! இதுலயென்ன தப்பு.'

'கேட்டவ நல்ல சோறு கொழம்பு கொண்டு வந்திருந்து கேட்டான்ன அவ மனசைத் தெரிஞ்சிருக்கலாம்.'

'அவ இருக்கறதைத்தான் தருவா. மிச்சம் மிஞ்சாடியைத்தான் தருவா... ஒனக்குன்னு 'பெஷலா' பொங்கியா தருவா? தப்பு. அவ மேல ஏன் கோவப்படணும்?'

மனம் இரண்டு விதமாய்ப் பேசியது.

மீன் கொழம்பு நேற்று இரவே கிடைத்திருந்தால் இவ்வளவு பசி ஏற்பட்டிருக்காது. மீன். அதுவும் குளத்து மீன். சாப்பிட்டு எவ்வளவு நாள் ஆகிவிட்டது?.

எழுந்தவள் பெட்டியைத் தூக்கிக்கொண்டு வெளியில் வந்தாள். பனை மட்டை, தென்னம் ஓலைகளால் செய்யப்பட்ட தட்டியால் வாசலை மூடினாள். கதவு! பம்பாய்க்காரர் வீட்டை நோக்கி நடந்தாள்

அவள் வீட்டில் விருந்தாட்களாக இருந்தார்கள். வாசலில் இரண்டு மோட்டார் சைக்கிள்களும், செருப்புகளுமாகக் கிடந்தன. உள்ளுக்குள்ளிருந்தது ஆட்களின் இடக்கும், சிரிப்புச் சப்தமும் வந்தன. முன் வாசல் பக்கம் போக வெட்கமாக இருந்தது. சிறிது நேரம் நின்றாள். வெற்றிலை எச்சிலைத் துப்புவதற்காக வாசலுக்கு வந்த குட்டுப் போட்டிருந்த ஓர் இளைஞன், "என்ன வேணும்?" என்று சைகையால் கேட்டான்.

'தங்கிடு' வயதிருக்கும். அவனும் படித்திருந்தால் இப்படித்தான் இருந்திருப்பான். கிட்னம்மா எதுவும் பேசாமல் நின்றாள். அதற்குள் அந்த இளைஞன் வீட்டுக்காரம்மாவைக் கூட்டி வந்தான். இவளைப் பார்த்ததும் புரிந்துகொண்டு "பொறவாசலோடி வாயேன்" என்றாள்.

புறவாசலில் நிறைய எச்சில் இலைகள் கிடந்தன. இளம்பச்சை நிறத்தில் கிடந்த அந்த

## சாக்கடைக்குள் விக்ரம்!

**நா**ட்டின் பாதுகாப்பைக் குலைக்க வரும் தீவிரவாதக் கும்பல் எல்லா மாநிலங்களிலும் சதி வேலைகளில் ஈடுபட அதை முறியடிக்கும் வேலை 'சாமுராய்' விக்ரமுக்கு! பத்து மாநிலங்களில் படத்தின் கதை நகர்வதால் அந்தந்த மாநிலங்களுக்கே போய்



படம் பிடித்திருக்கிறார்கள்.

கதைப்படி பீகாரில் ஒரு சாக்கடைக் குழிக்குள் ஒளிந்து கொள்வதுபோலக் காட்சி. வேடிக்கை பார்க்க வந்த பீகாரிகள் மூக்கைப் பிடித்துக் கொண்டு நிற்க, குடலைப் புரட்டிய நிஜ சாக்கடைக் குழியில் மூழ்கி நடித்துக் கொடுத்தாராம். இப்படி ஐந்து மணி நேரம் சாக்கடை குழியில் இருந்து சாதனை செய்திருக்கிறார் சீயான்.

...கவையும், தெறித்துக் கடந்த ... சோற்றுப் பருக்கைகள் மற்றும் கூட்டுப் பொரியல்களைப் பார்த்ததும் நாக்கில் எச்சில் ஊறியது.

"பம்பாய்ல எம் மவனுக்குக் கல்யாணம். யாரோகூட வேல பாக்கவள கட்டப் போறானாம். ரெண்டு, மூனு மாசத்துக்கு நான் இங்க வரமாட்டேன். இருக்க எல்லா சாமானயும் கட்டி, அரங்கூட்டுல போட்டு வச்சிட்டேன். குறுணையையும் கட்டி வச்சிட்டேன். இப்ப அத எடுத்தா எல்லாத்தையும் ஒதுங்க வக்கணும்; வேற ஏதாவது பாத்துக்க... இப்ப சோறு தாரேன் வாங்கிட்டுப் போறியா?"

தூக்கி வாரிப் போட்டது கிட்னம்மாவுக்கு. கொஞ்ச நஞ்சமாவது கிடைத்து வந்த வயிற்றுப்பாட்டிலும் இடி!

அவள் கொடுக்கும் சோறை ஏற்க மறுத்தது மனது. நடந்தாள். வயிற்றுக்குள் கொடகொடத்து ஏப்பம் வந்தது. பசி ஏப்பம். இடுப்பில் வைத்திருந்த கொட்டாபெட்டி கூட கனமாகத் தெரிந்தது.

வீடு நோக்கிச் செல்லும் வழியில் போத்திக் கோயில் இருந்தது. கோயில் எதிரில் இருந்த வேப்ப மரத்துக்குக் கீழே பெட்டியை வைத்துவிட்டு உட்கார்ந்தாள். மயக்கம் வருவது போல இருந்தது. மரநிழலில் சாய்ந்தால் நல்ல தூக்கம் வந்துவிடும். கட்டுப் படுத்திக் கொண்டாள்...

போத்தி சாமியிடம் வேண்டினாள்.

'எனக்கு நல்ல புருஷனையும் கொடுக்கல. நல்ல புள்ளையையும் கொடுக்கல. என்னை ஏம் இப்படி சோதிக்குயோ சாமியளா? ஊரு ஒலகத்துல யாருக்கும் இல்லாதது எனக்கு மட்டும் ஏன்? என் குடும்பம் என்ன இலேசுபட்டதா? ராணி மாதிரி வாழ்ந்த வீட்லயிருந்து இந்த ஊருக்கு நான் ஒண்ணுமில்லாமலயா வந்தேன்? இன்னிக்குக் குடிக்க கஞ்சிக்கு இன்னொருத்தி வீட்டு வாசல்ல நிக்க வச்சிட்டியே... சாமியளா? நீங்கலாம் நெசமாவே இருக்கேயளா இல்லையா?'

பேசிக்கொண்டே இருந்தாள். மனத்திலிருந்து வந்ததையெல்லாம் கொட்டித் தீர்த்தாள். சாமிக்கு என்ன புரிந்ததோ?

அடுத்து யாரிடம் குறுணை கேட்கலாம்? பிள்ளையார் கோயில் சிட்டுக்குருவியிடம் கேட்கலாம். தருவாளா? தட்டிப் பார்ப்போமே? என்று கிளம்பினாள் கிட்னம்மா.

மேலபத்து வயக்காட்டில், வட்டிக்குப் பணம் கொடுத்துச் சம்பாதித்தே, பாதியை வளைத்துப் போட்டிருக்கிறாள் சிட்டு. நெல், அரிசி மூட்டைகளை வைப்பதற்கென்று போன அறுவடையின்போது தனி வீடு ஒன்று கட்டினாள்.

அவள் வீட்டு முன் வாசல் திண்டில் ஆம்பளைகள் பேசிக்கொண்டிருந்தார்கள். அவர்கள் முன் போய் நிற்க வெட்கமாக இருந்தது. பிறகு வரலாம் என்று திரும்பிப் போனவளைப் பார்த்துவிட்டாள் சிட்டுக்குருவி.

"ஏக்கா... என்ன பொட்டியைத் தூக்கிட்டு வந்துட்டுத் திரும்பிப் போறே?"

"ஒன்னத்தான் பாக்கலாம்னு வந்தேன்."

"வந்துட்டு போறியோ..."

"ஆம்பளைலா இருந்தது."

"இருந்தாயென்னா... ஒனக்கு இன்னும் கொமரின்னு நெனப்புதான், செரி, என்ன வெஷயம்?"

"ஒண்ணுமில்ல தாயீ... கொஞ்சம் குறுணை இருக்குமா?"

"குறுணையா?"

"ஏக்கா... இப்பதான் தாராக்கோழிக்காரனும் கோழிப்பண்ணைக்காரனும் மோட்டார் சைக்கிள்ல வந்து அரைமூட்டைக் குறுணையை ரூவா கொடுத்துத் தூக்கிட்டுப் போறான். நீ இப்ப வந்து கேக்கியே... இப்பல்லாம் முன்ன மாதிரி இல்லக்கா... குறுணைக்கும் நல்ல துட்டு, பாத்துக்கோ."

- சிட்டுக்குருவி பேசிக் கொண்டே போக கிட்னம்மாவுக்கு வயிற்றுக்குள்ளிருந்து ஏப்பம் வந்து கொண்டிருந்தது. பசி ஏப்பம்! ○

# தேவதாஸ் தேவையா?

## மாற்றான் தோட்டம்

**பிற பத்திரிகைகளில் வெளியான சில கடிதங்கள். சற்றே சுருக்கமாக.**

**அ**ப்துல் கலாமை ஜனாதிபதியாக்க திரிணாமூல் காங்கிரஸ் விரும்புகிறது என்ற செய்தி விந்தையாக இருந்தது. தவிர சில காங்கிரஸ் தலைவர்கள் ஏ.ஆர். அந்துலேவை ஜனாதிபதியாக்க முயற்சிக்கிறார்கள் என்பதைப் படித்தேன். பா.ஜ.க. வின் சிபாரிசான அப்துல் கலாமுக்கு எதிரான நடவடிக்கையாம் இது! காங்கிரஸ், ஊழலைப் பொதுமைப் படுத்த முயற்சிக்கிறதா? என்பதுகளில் நடைபெற்ற மாபெரும் சிமெண்ட் ஊழலை மகாராஷ்டிர மாநில மக்கள் அவ்வளவு சீக்கிரம் மறந்திருக்க மாட்டார்கள் என்பது நிச்சயம்.

**(டைம்ஸ் ஆஃப் இந்தியா - எஸ்.ஜி. நாயக், (மும்பை)**



• அப்துல் கலாம்

**நா**ட்டில் உள்ள நூறு கோடி மக்களுக்கும் அதிகமானவர்களில் பாதி பேர் படிக்காதவர்கள், வறுமைக் கோட்டுக்குக் கீழே வாழ்ந்து கொண்டிருப்பவர்கள். இப்படிப்பட்ட தேசத்தில் ஒரு குடிகாரனைப் பற்றிய (தேவதாஸ்) திரைப்படம் ஐம்பது கோடி ரூபாயில் தயாராகிறது என்ற செய்தி வருத்தத்தை அளிக்கிறது. எண்பத்தைந்து வருடங்களுக்கு முந்தைய ஒரு கதையை இன்றைய தலைமுறையினர் ஏற்றுக்கொள்வார்களா?



• தேவதாஸில்... ஐஸ்

தவிர இந்தச் சூதாட்டத்தில் வெற்றியடையப் போவது யார்? நிச்சயம் இந்திய மக்கள் அல்ல.

**(இந்தியா டுடே (ஆங்கிலம்) - ஜி. சுவாமிநாதன், சென்னை)**



• முஷாரஃப்

**ஆ**ப்கானிஸ்தான் மீது தாக்குதல் தொடங்கியபோது முஸ்லிம் வெறியர்கள் பின்லே

## பட்டினத்தார்

பட்டினத்தார் ஒருமுறை வரப்பில் தலை வைத்து வயலில் படுத்துக்கிடந்தார். அவ்வழியே இரண்டு பெண்கள் தண்ணீரெடுக்கச் சென்றனர். அவர்களில் ஒருத்தி பட்டினத்தாரைப் பார்த்து, ''பெரிய ஞானி. முற்றும் துறந்த முனிவர். வீட்டை, நாட்டை, பொன்னை, பொருளை, கட்டிலை, மெத்தையைத் துறந்தார். இத்தனைத் துணிவு யாருக்கு வரும்? இவரை வணங்க வேண்டும்'' என்று சொன்னாள்.

மற்றவள், ''நீ சொன்னதெல்லாம் சரிதான். ஆனால் இவர் துறக்க



வேண்டியது இன்னும் பாக்கி இருக்கிறது'' என்றாள்.

''ஏன் அப்படிச் சொல்கிறாய்?''

''தலையணையைத் துறந்தவர், தலைக்கு ஓர் உயரம் வேண்டும் என்ற உணர்வை, நினைப்பைத் துறக்கவில்லையே!''

அவர்கள் கடந்து சென்றார்கள். இடுக்கிட்டு எழுந்தார் பட்டினத்தார். அன்னை பராசக்தியே வந்து இவர்கள் வார்த்தையாகப் பேசி இருக்கிறாள் என்று நினைத்தார். வரப்பில் இருந்து நகர்ந்து ஒரு வயலில் படுத்துக்கொண்டார்.

அப்பெண்கள் திரும்பினர்.

முன்னவள் ''இப்போது பார்த்தாயா?'' என்றாள். மற்றவள் ''துறவு மேம்பட்டிருக்கிறது. அது இன்னும் பூர்த்தியாகவில்லை.''

''ஏன்?''

''எல்லாம் துறந்தவர் ஊரார் என்ன பேசுகிறார்கள் என்று கேட்பதை விடவில்லையே?'' என்றாள்.

''சிவனே! இந்தப் பழம், கம்பின் பிடியை விடுமளவு பழுப்பது எப்போது?'' எனக் கதறினார் பட்டினத்தார்.

டனுக்கு ஆதரவாகப் பிரசாரம் செய்தார்கள். நம் நாட்டின் ஷாஹி இமாம்கூட ''இஸ்லாமுக்கு ஆபத்து என்பதால் இந்தப் புனிதப் போரில் கலந்து கொள்ள வேண்டும்'' என்று அழைப்பு விடுத்தார். அமெரிக்கா, ஆப்கானிஸ்தான் மீது குண்டு மழை வீசத் தொடங்கி இரண்டு மாதங்களுக்கு மேல் ஆகிவிட்டது. இஸ்லாம் எந்த அழிவுமின்றி பாதுகாப்பாகவே இருக்கிறது. ஆனால் தங்களை இஸ்லாமின் தளபதிகள் என்று கூறிக் கொண்டவர்கள்தான் என்ன ஆனார்கள் என்று தெரியவில்லை. 'உயிர்த் தியாகம் செய்தால் சொர்க்கத்துக்குப் போகலாம், அங்கு 72 கன்னிகளை மணக்கலாம்' என்று இஸ்லாம் நெறிகள் கூறுவதாக பின்லேடன் சொன்னதுண்டு. அப்படி ஒரு நற்பேற்றினை அவர் அடைவதைத் தடுப்பவர் யார்?

(அலைவ் - முகேஷ் குமார், புதுடெல்லி)

குஜராத் கலவரங்களை குஜாராத்திய ஏடுகள் மிகவும் மோசமாகக் கையாண்டன. தங்கள் எழுத்துக்களில் நஞ்சைக் கலந்து படிப்பவர்களை உஷ்ணப்படுத்தின. ஆனால் ஆங்கில இதழ்கள் பொறுப்போடு நடந்துகொண்டது குறித்து நான் பெருமைப்படுகிறேன்.

(அவுட்லுக் - ஹெச். நவ்ரோஜி, மும்பை)

தங்கள் இதழில் வெளியான ஒரு கட்டுரையில் ''எட்டுமாத கர்ப்பிணியின் வயிற்றைக் கிழித்து உள்ளே இருந்த கருவைச் சிதைத்தனர்'' என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. இதற்கு ஏதாவது ஆதாரம் உண்டா? இதுபோன்ற வாக்கியங்களைத் தவிர்த்திருக்கலாமே. கோத்ராவிலும் அதற்குப் பிறகு குஜராத்திலும் நடந்த சம்பவங்கள் வெட்கப்படத்தக்கவை. ஆனால் மேற்கூறியதைப் போன்ற வன்முறையைத் தூண்டும் வாசகங்கள் அச்சில் இடம் பெறக்கூடாது.

(ஃப்ரண்ட்லைன் - டாக்டர் சுரேஷ் ஜாரிவாலா, நெல்லூர்)

''எங்களால் இந்தியத் தாக்குதலை சமாளிக்கவும் முடியும். இந்தியாவுக்குள் நுழைந்து தாக்குதல் நடத்தவும் முடியும்'' என்று கூறியுள்ளார் முஷாரஃப். இந்தக் கொக்கரிப்பைக் கேட்டபோது பாரதியார் சொன்ன ''யானைக்கால்காரன்'' கதைதான் நினைவுக்கு வந்தது. யானைக்கால் நோய் வந்த ஒருவன் ''சாதாரணக் காலால் உதைத்தாலே வலிக்கும். என் கால் பெரிய கால். அதனால் யாரும் என்னோடு சண்டைக்கு வர முடியாது. யானைக்காலால் மிதித்துத் துவைத்து விடுவேன்'' என்று பூச்சாண்டிக் காட்டிக்கொண்டிருந்தான். குழந்தைகளும் அவனைக் கண்டு பயந்தன. ஒருநாள் உண்மை தெரிந்தது. அந்தக் காலைத் தூக்கிக்கொண்டு அவன் நடக்கவே, பாடாய்ப் பட்டான். பாகிஸ்தானின் திமிர்ப் பேச்சும், ஏவுகணைச் சோதனையும் அதன் பலம் அல்ல.''

தினமலர் - ஆர். ராம்மோகன், என்.மேட்டுப்பட்டி)

தொகுப்பு: ஜி.எஸ்.எஸ்

## எண்ணியது அனைத்தும் ஈடேற்றி வைக்கும்

# ‘தேவதா உச்சாடனம்’

### ( தபால் வழி பூஜை உபதேசம் )

அன்றைய கால சித்தர்கள் ஆக்கி வைத்த அரிய பூஜை இதனை மன ஒடுக்க நிலையோடு செய்துவிடில் அஷ்டமாசித்துக்கள் அத்தனையும் அடைந்திடலாம். பெய்யா மழையை பொழியச் செய்யவும், பெய்யும் மழையை நிறுத்திடவும் இப்பூஜா சக்தியால் இயலும் என்பதும், கோடான கோடி செல்வத்தில் சிறந்த குபேரன் இந்த பூஜை செய்து தான் கோடீஸ்வரன் ஆனான் என்பதும் - அதன் வழியே தானும் ஒரு கோடீஸ்வரன் ஆக எண்ணிய இலங்கேஸ்வரனும் இந்த பூஜையை செய்துதான் முழுமையான லக்ஷ்மிகடாஷத்தை அடைந்தான் என்பதும் வரலாறு கண்ட உண்மை.

இன்றைய நாளிலும் இனிதான இல்லறம் கனிவான குழந்தைகள், ஏற்றதான காரியங்கள் இடைதடையின்றி நடக்க ஏற்ற சூழ்நிலைகள், செல்வ சுகம், சொத்து சுபிச்சம், என்றும் தடையின்றி காரியங்கள் நடைபெறும் கடவுள் அருள், லாப மேன்மை தரும்தொழில், எவரும் போற்றும்படியான பெருமையுறும் வாழ்வு, சுற்றத்தார் புகழ் பாடும் நிலை, கூட கோபுரம் மாட மாளிகை அனைத்தும் பெற்று ஆனந்த வாழ்வு பெற்றிட உரிய நிலை அடைய உதவும்

இந்த பூஜையை காலை மாலை இரு பொழுதிலும் என்றும் விடுபடாமல் செய்கின்ற மன உறுதியும் அருள் நிலையை வர விடாமல் தடுக்கும் தீய பழக்கங்களான - புகை பிடித்தல், மதுபானம் செய்தல், பொடி, புகையிலை போடுதல் ஆகிய தீய பழக்கங்கள் அறவே இல்லாத ஒழுக்கமும் இருப்பின் இதில் உபதேசம் பெற்று உறுதியான நலங்கள் செல்வ மேன்மை என்றும் இனிது வாழும் இறையருளையும் பெற்றே தீரலாம்.

எவர் ஒருவருக்கு இந்த அரிதான உபதேச வழியாக நிச்சய நலன்களை அடையும் ‘விதி’ அமைப்பு இருக்கின்றதோ அவருக்குத்தான் இந்த விளம்பரம் கண்ணில்படும். அவ்விதம் தென்பட்டு உரிய தேதிக்குள் ஜாதக நகலுடன் ‘இப்பூஜை உபதேசம் பெற விரும்புகின்றேன்’ என்று எழுதி அனுப்பிடும் வாய்ப்பு ஏற்பட்டுவிடில் நிச்சயமாக வாழ்வில் எப்படியும் மேன்மை ஏற்பட்டே தீரும் என்பது தெய்வ தீர்ப்பு. எனவே ஜாதக நகல் ஒன்று அனுப்பிட வேண்டியது முக்கியம்.

**மதுபானம் செய்வதோ.புகைபிடிப்பதோ. பொடி. புகையிலை போடுவதோ அறவே இருக்கக்கூடாது.**
**அந்த தீய பழக்கம் இருந்தால் அருள்நிலை வரவே வராது. அவர்கள் விண்ணப்பிக்க வேண்டாம்.**
**தினசரி காலை. மாலை இரண்டு வேளையும் அமர்ந்து பூஜை செய்யும் பழக்கம் நிச்சயம் இருக்க வேண்டும்.**

அவ்வித பழக்கம் உள்ள நபர்கள் மட்டும் 27-07-2002 தேதிக்குள் விண்ணப்பம் செய்து கொள்க.

**பெண்களும் இப்பூஜா உபதேசம் பெற்று அரிய காரியங்கள் செய்து வெற்றி கண்டுமேன்மை அடைந்திருக்கின்றார்கள். ஆதலால் பெண்களும் அத்தேதிக்குள் ஜாதக நகலுடன் விண்ணப்பித்துக்கொள்ளலாம்.**

உங்கள் விண்ணப்பம் கிடைத்தவுடன் ஜாதகத்தை பரிசீலித்து உரிய விபர படிவம் அனுப்பி வைப்போம்.




பிரபல ஜோதிடர், ஜோதிடஆசிரியர்

**ஸ்ரீமத் ஜெயவீர தேவா, யோகி**

இராஜயோக பயிற்சியாளர்

பிளாட்எண்:204,அண்ணாநகர் மதுரை- 625 020 தமிழ்நாடு



533412
650576

# பொய்யில் பூத்த நிஜம்

10

● வாஸந்தி

"எனக்கு உங்களைத் தெரியாது."

சினேகிதமில்லாமல் வெறித்த அந்தக் கண்களை அவள் திகைப்புடன் பார்த்தாள். அந்தத் தோள்களைப் பிடித்து 'ஏய் என்னாச்சு உனக்கு, சரியாப்பாரு!' என்று உலுக்க வேண்டும் போலிருந்தது. ஆனால் கைகளை அவனருகே எடுத்துச் செல்ல தயக்கமேற்பட்டது. அந்தப் பார்வை தடுத்தது. ஒருமுறை ராஜா, தன் நண்பர்களுடன் 'ஆண்கள் மட்டும்' காக்டெயில் விருந்துக்குப் போய்விட்டுப் போதையேறின நிலையில் வீட்டிற்கு அழைத்து வரப்பட்டபோது, "இது யார் வீடு, இந்தப் பொம்பளை யாரு?" என்று கேட்டதும், அவள் ஆத்திரம் தாங்காமல் அவனைக் குளியலறையில் ஷவருக்கடியில் நிறுத்திப் போதையைத் தெளிவித்ததும் பிறகு இருவரும் அதை நினைத்துச் சிரித்ததும் நினைவுக்கு வந்தது. இது போதையில்லை. ஜோக்கடிக்கிறானா? அவளை ஆழம் பார்க்கிறானா? அவளுக்குப் பொறுமை நழுவி எரிச்சல் ஏற்பட்டது.

"ராஜா இது ஜோக்கடிக்கிற நேரமில்லே." என்றாள் தமிழில். "உனக்கு ஆக்ஸிடெண்ட் ஆன நாள்லேந்து நா எவ்வளவு பெரிய டென்ஷன்லே இருக்கேன்னு உனக்குப் புரியணும்! எனக்கு உன்னைத் தெரியாதுன்னா என்ன அர்த்தம்? நா உன்னுடைய குழந்தையுடைய அம்மா, டாமிட்!"

ராஜாவின் கண்களில் குழப்பம் தெரிந்தது. பரிச்சயம் தெரியவில்லை.

படுக்கையை மறைத்த ஸ்க்ரீனுக்கு அப்பால் ஒரு முகம் தெரிந்தது.

"தயவு செய்து மெதுவாகப் பேசுங்கள்" என்றாள் ஒரு அம்மாள் ஹிந்தியில்.

"ஸாரி" என்று முணுமுணுத்தபடி சகுந்தலா, ராஜாவின் பக்கம் திரும்பினாள். திடீரென்று நினைவு வந்தவன் போல, இலேசாகப் புன்னகைத்து மெல்லிய குரலில் சொன்னான். "இது உங்கம்மா அப்பாவுக்காக போட்ட வேஷம்! அதனாலேதான் உனக்கு அடையாளம் தெரியல்லே போலிருக்கு."

ராஜா அவள் பேசுவதை உற்றுக்கேட்டு, சோர்வுடன் கண்ணை மூடிக்கொண்டு கண்டிப்புடன் சொன்னான்.

"ப்ளீஸ், லீவ் மீ அலோன். எனக்கு மனைவி இல்லை. குழந்தையும் இல்லை. எனக்குக் கல்யாணமாக

வில்லை!'' அவன் தமிழில் பேசாமல் ஆங்கிலத்தில் பேசினான். 'லீவ் மீ அலோன்!'

அவள் சற்றுநேரம் அந்த மூடிய கண்களையும் சோர்ந்த முகத்தையும் பிரமை பிடித்தவள்போல பார்த்தபடி நின்றாள். உண்மையிலேயே இது ஒரு மருத்துவப் பிரச்னையா அல்லது இவன் வேண்டுமென்றே அடாவடித்தனம் செய்கிறானா என்று புரியவில்லை. அடாவடித்தனம் செய்கிற அளவுக்கு அவனிடம் சிறுபிள்ளைத்தனம் இருக்க முடியாது. அவளுடைய தவிப்பைப் புரிந்து கொள்ள முடியாத மூர்க்கன் இல்லை அவன். கதிரை அடையாளம் தெரியவில்லை. அவளையும் தெரியவில்லை. ஆனால் அவனுடைய அப்பாவையும் அம்மாவையும் தெரிந்து கொண்டானே? எதை நம்புவது? எதை நம்பாமல் இருப்பது என்கிற திகைப்பு அவளை ஆட்கொண்டது. கண்களைத் திறந்தால் அவளைப் பார்க்க நேரிடும் என்பதற்காகவே அவன் கண்மூடியபடியே இருக்கிறான் என்று அவள் சந்தேகப்பட்டாள்.

''எனக்கு உங்களைத் தெரியாது. எனக்கு மனைவியுமில்லை, குழந்தையுமில்லை!'' எத்தனைத் தெளிவாகச் சொல்கிறான்! இதை அவன் நிச்சயமாக சுயநினைவோடு சொல்லவில்லை.

இரண்டு வருஷங்கள் காதலுடன் வாழ்ந்தது, குழந்தை பெற்றது எல்லாம் பொய்யாகிப் போகுமா? அப்படிப்பட்ட அபத்தமான



ஒரு நிலைமை வரும் என்பது கற்பனையில் கூட சாத்தியமில்லை என்று தோன்றிற்று. ஏதோ சைத்தான் அவனுள் புகுந்து பேசுவது போலிருந்தது. அவளையும் பரத்தையும் அங்கிருந்து விரட்டப் பார்க்கும் சைத்தான் அது. நடக்காது என்று தனக்குள் தீவிரமான ஆக்ரோஷத்துடன் அவள் சொல்லிக் கொண்டாள். மறுபடியும் அவனுடன் பேச முற்பட்டால் அவன் கலவரமடையலாம் என்று அவளுக்குக் கவலையேற்பட்டது. நர்ஸைக் கூப்பிட்டு இந்தப் பெண்ணைப் போகச் சொல்லுங்கள் என்று சொன்னாலும் சொல்வான். அவள் மெள்ள வெளியேறினாள். இன்று டாக்டரைக்கூடப் பார்க்க முடியாது என்பது அவளை பலவீனப்படுத்திற்று. வார்டை அடுத்த காபினில் ட்யூட்டி டாக்டரின் முகம் தெரிந்தது. சின்னப் பையன் போலத் தெரிந்தார். இரண்டு நர்ஸ்களுடன் ஏதோ சிரித்துப் பேசிக் கொண்டிருந்தார். சகுந்தலா உள்ளே நுழைந்தாள். டாக்டரின் வெள்ளை அங்கியில் 'பிரகாஷ் என்ற பெயர் பொறித்த பாட்ஜ் இருந்தது.

"யூ ஆர் மிஸஸ் ராஜ் மோகன்-ரைட்?" என்றார் பிரகாசமாக.

"ஆமாம்" என்றாள் அவள். "அவரிடம் ஏதோ கோளாறு தெரிகிறது."

"என்ன? அப்படியொன்றும் தெரியவில்லையே? நன்றாக முன்னேறி வருகிறாரே?"

"உடல் ரீதியாக இருக்கலாம். ஆனால் என்னை அவருக்கு அடையாளம் தெரியவில்லை."

டாக்டர் சரளமாகப் புன்னகைத்தார். "ஓ அதுவா? கவலைப்படாதீர்கள். மெல்ல மெல்ல நினைவு வந்துவிடும்."

"இப்பொழுது ஏன் வரவில்லை?"

"மனைவி தூக்கத்துல எழுந்து நடக்கறா டாக்டர்..!"

"அதுக்கு ஏன் இவ்வளவு கவலைப் படுறீங்க?"

"திரும்பவும் வந்துடுறாளே டாக்டர்!"

— சோழபுரம் யாக்கோப்



"நாளைக்குக் காலையில் டாக்டர் சென்குப்தா வருவார். அவர் உங்களுக்கு விளக்குவார். நீங்கள் நம்பிக்கை வையுங்கள். ராஜ் மோகன் உடல் நிலையில் மிக நல்ல திருப்பம் ஏற்பட்டிருப்பதற்காகச் சந்தோஷப்படுங்கள். நினைவும் பழையபடி வந்து விடும்."

"நிச்சயமாக?"

"நிச்சயமாக!"

பிரகாஷ் வரிசைப்பல் தெரிய சிரித்த போது நர்ஸ்களும் சிரித்தார்கள் ஒரு அசட்டுக் குழந்தையைச் சமாதானப் படுத்துவது போல.

தான் பலவீனப்பட்டு அவமானப்பட்டு நிற்பதாக அவளுக்குக் கூச்சமேற்பட்டது.

"தாங்க்யூ" என்று முணுமுணுத்தபடி அவள் கிளம்பினாள்.

"ரிலாக்ஸ், ஹி வில் பி ஓ.கே.!"

அது ஒரு சம்பிரதாயப் பேச்சு என்றாலும், இதமாக இருந்தது.

ரிலாக்ஸ்.

எப்படி என்று அந்த வரிசைப்பல்காரனிடம் கேட்டிருக்க வேண்டும். மூணு நாளா அவன் பிழைப்பானா கண் திறப்பானா என்று நான் பட்ட வேதனையும் தவிப்பும் உனக்குத் தெரியாது. ராஜாவுக்கும் எனக்குமிடையே இருக்கிற உறவைப் பற்றி உனக்குத் தெரியாது. அந்த உறவும் அதிலே இருக்கிற பரஸ்பர நம்பிக்கையும் எங்களுக்கு மட்டுமே புரியக் கூடியது. இப்ப அவனுக்கே அதை நான் விளக்க வேண்டிய நிலைமை ஏற்பட்டால் நான் எங்கேயிருந்து தொடங்க முடியும்? பஞ்சாபி டாபாவிலிருந்தா? கோடைக் கால இரவுகள்லே இந்தியா கேட் புல்தரையிலே உட்கார்ந்து ஸார்த்துக்கும் ஸிமோன் தெபூவாவுக்கும் நடுவே இருந்த காதலை அசைபோட்ட தருணத்திலேர்ந்தா? எல்லா உறவுகளும் நம்பிக்கையின் அடிப்படையில் நீடிப்பவையே; வேறு எந்தப் புனித அங்கீகாரத்தினாலேயும் அல்ல என்கிற ஆன்ம தரிசனம் கிடைத்த நேரத்திலேர்ந்தா?

பார்க்கிங் லாட்டுக்கு வந்து காரைக் கண்டுபிடிக்கவே அவளுக்குத் தடுமாற்றம் ஏற்பட்டது. காரைக் கிளப்பும்போது பிரகாஷ் சொன்னது நினைவுக்கு வந்தது.

"மெள்ள மெள்ள நினைவு வந்துவிடும்."

"வரணும்" என்றாள் அவள் மெள்ளச் சிரித்து. "வராமல் போனால் அந்த உறவுக்கு அர்த்தமில்லாமல் போகும்." ஆச்சரியமாக இப்போது துக்கம் குமுறிக் கொண்டு வரவில்லை. கண்களில் நீர் நிரம்பவில்லை.

மனசு மோன நிலையை எட்டிவிட்டதோ சோம்பிவிட்டதோ, அல்லாட மறுத்தது. ராஜா பழையபடி ஆகிவிடுவான் என்று மூலையில் முடங்கிக் கொண்டு ஜபித்தது. கார் தானாக நகர்ந்தது. டிராஃபிக் சிக்னலில் ஓங்கிதத்துடன் நின்றது. ஆஷ்ரம் வெட்டில் எச்சரிக்கையுடன் திரும்பிற்று. மகாராணி பாகை ஆர அமர தாண்டிற்று. அதிர்ச்சியின் எல்லையைத் தொட்டுவிட்ட ஆயாசத்தில் அவள் இருந்தாள். அவளது முயற்சிக்கு உட்பட்ட ஒரு செயலும் இல்லை என்று மிக நெடிய பெருமூச்சு விட்டாள்.

விரக்தியின் விளிம்பைத் தொட்டிருந்த ஒரு நாளில் தான் ராஜா அவள் வாழ்வில் புகுந்தான். யாரும் சொல்லாமலே நாடகப் பாத்திரத்தை ஏற்கவந்த மாதிரி. நேற்றுத்தான் வந்ததுபோல இருந்தது. அதற்குள் வசனம் மறந்துவிட்டது.' எனக்கு உங்களைத் தெரியாது' நம்பக் கூடிய கதையா இது?

ஸார்த் இப்படி நினைவு தப்பி ஸிமோனைப் பார்த்து 'எனக்கு உங்களைத் தெரியாது என்று (ஃப்ரெஞ்சில்) சொல்லியிருந்தால் ஸிமோன் என்ன செய்திருப்பாள் என்று யோசித்தாள். ஃப்ரெஞ்சு இலக்கிய உலகம் திரண்டு வந்திருக்கும் ஸிமோனுக்கு உதவ. நான் அநாதை.

திடீரென்று நினைவு வந்தவள்போல அவள் செல்போனை எடுத்து, ஸ்டியரிங் வீலைப் பிடித்தபடி லாகவமாக விவேக்கின் எண்ணைத் தட்டினாள்.

" விவேக். ராஜா எங்கிட்டப் பேசினான்" என்றாள்.

"குட்!" என்றான் விவேக் உற்சாகமாக. "கவலைப்பட்டியே?"

"இன்னும் படறேன், எனக்கு உன்னைத் தெரியாதுன்னான்."

விவேக் நிதானித்து பதில் சொன்னான். "பொறுமையாயிரு சகுந்தலா" என்றான் கனிவுடன்.

அவள் இலேசாகச் சிரித்தாள். "பொறுமையாயிருக்கிறதைத் தவிர எனக்கு வேற வழியில்லே தெரியுமோ?"

"யூ ஆர் ரைட்" என்றான் விவேக். "ரொம்பப் பெரிய ஆபத்திலேர்ந்து ராஜா மீண்டு வந்திருக்கான்."

"ஐ நோ, ஐ நோ" என்றாள் அவள் பொறுமையில்லாமல். "ட்யூட்டி டாக்டரும் அதைத்தான் சொன்னார்."

"உன்னுடைய ஏமாற்றம் எனக்குப் புரிகிறது சகுந்தலா."

அவளுக்குப் பதில் சொல்லமுடியாமல்



"'தூங்கறதுக்கு எதுக்கு ஆபீசுக்கு வர்றீங்க, வீட்டுலயே தூங்கலாமே'ன்னு மானேஜர் கேட்டதுக்கு நாங்க சொன்ன பதில்ல வாயடைச்சுப் போயிட்டார்!"

"அப்படி என்ன சொன்னீங்க?"

"பெண்டாட்டி, பிள்ளைக் குட்டி பிடுங்கல்ல, எப்படி சார் வீட்டுல நிம்மதியா தூங்க முடியும்னு ஒரு போடு போட்டோம்!"

*- சீர்காழி வி. ரேவதி*

தொண்டை அடைத்தது.

"ரிலாக்ஸ் சகுந்தலா" என்றான் விவேக் கனிவுடன். "நாளைக்கே அவனுக்கு நினைவு வந்துவிடும் பார்."

"வரணும். வரலேன்னா அவனுக்கு ஞாபகப்படுத்த ஒரு மோதிரம்கூட இல்லே எங்கிட்ட."

"நீ என்ன சொல்றே?"

"துஷ்யந்தன் கதை தெரியாது?"

விவேக் சிரித்தான். "சியர் அப் சகுந்தலா. ரொம்ப குழப்பிக்காதே. ஒரு காம்போஸ் போட்டுண்டு தூங்கு இன்னிக்கு."

விவேக்குடன் பேசியதில் மனசு சற்று இலேசாகியிருந்தது. அவர்களுடைய சினேகிதவட்டம் பெரிது. பாசாங்குத்தனமில்லாத நெருக்கம் கொண்டது. அவளுக்காக ராஜாவிடம் பேச நிறைய பேர் இருக்கிறார்கள். ஆனால் இது சிபாரிசு செய்ய வேண்டிய விஷயமில்லை. நினைவூட்டல் விஷயம். மூடிவிட்ட மனச்சாளரங்களைத் தட்டித் திறக்க வேண்டிய விஷயம். அதிக அழுத்தம் கொடுத்துத் தட்டாமல் தட்ட வேண்டும். நண்பர்கள் நிச்சயம் செய்வார்கள். ராஜாவின் நினைவுப் பெட்டகம் கண்டிப்பாகத் திறக்கும். எனக்குப் பொறுமை வேணும். துஷ்யந்தன் கதை தனக்கு ஞாபகம் வந்தது நினைத்துச் சிரிப்பு வந்தது. இப்போது ராஜா, அவளுடைய குழந்தையின் தந்தையாகப்பட்டவன், அவளைப் பார்த்து "எனக்கு உங்களைத் தெரியாது" என்றதற்கும் அவன் பெயரைக் கொண்ட புராண

காலத்து சகுந்தலையின் கதைக்கும் விசித்திர மான ஒற்றுமை இருந்தது. சகுந்தலா என்ற பெயர் சபிக்கப்பட்ட பெயராக இருக்கலாம். குழந்தை பிறந்தபோது, பரத் என்ற பெயர் வெகு இயல்பாக இருவருக்கும் தோன்றிற்று. குழந்தையை அலாக்காகத் தூக்கி நண்பர்களி டம் - "பரத் பாரதத்தின் நம்பிக்கைக்குரிய பிரஜை" என்று ராஜா முழங்கியது நினை வுக்கு வந்தது. அவள் சகுந்தலா என்பதால் பரத். நீ துஷ்யந்தனா? என்ற கேள்வியை யாரும் அன்று கேட்கவில்லை. ஷாம்பேயின் க்ளாஸைத் தூக்கி எல்லோரும் "சியர்ஸ்! பாரத பிரஜைக்கு!" என்று கரகோஷித்த போது பாரதமே காலடியில் அமர்ந்தது போல் சிலிர்த்தது. அன்று எடுத்த புகைப் படங்கள்கூட இருந்தன. பதினைந்து நாள் குழந்தையை அவன், அப்படித் தூக்கு கிறானே என்று கவலைப்பட்ட அவளது பார்வைகூட அதில் பதிவாகியிருந்தது.

சகுந்தலா கைக்கடிகாரத்தைப் பார்த் தாள். பன்னிரண்டே முக்கால் ஆகியிருந் தது. மாலை வரை மிஸஸ் மல்ஹோத்ரா பரத்தைப் பார்த்துக் கொள்வாள். விவேக் சொன்னதுபோல வீட்டிற்குச் சென்று ஒரு காம்போஸ் போட்டுப் படுத்தால்தான் சற்று தெளிவு பிறக்கும் என்று தோன்றிற்று. சமேலி சமைத்து வைத்திருப்பாள்.

**ப**கல் வேளையில் காமாட்சி அப்படித் தூங்கி சரவணன் பார்த்ததில்லை. ஆஸ்பத் திரியில் இன்று ராஜாவைப் பார்த்துவிட்டு கெஸ்ட் ஹவுஸுக்குத் திரும்பும்போது ஏதோ சாம்ராஜ்யத்தை வென்றுவிட்ட திருப்தி தெரிந்தது அவளுடைய முகத்தில். முக விலாசமே மாறிப் போனது ஆச்சரியமாக இருந்தது. காமாட்சி அழகி இல்லை. அது வும் கடந்த இரண்டு வருடங்களாக, முகத் தில் ஒரு சவக்களை படிந்து அவலட்சண மாக தோற்றமளித்தது. எண்ணெய் தேய்த்துக் குளிக்கும் நேரத்தைத் தவிர எல்லா காலத் திலும் அவள் அணிந்து கொள்ளும் வைரத் தோடும் வைர மூக்குத்தியும்கூட முகத்தைப் பிரகாசமாக்கும் தகுதியை இழந்திருந்தன. இப்போது ஏதோ மாயக் கோல்பட்டது போல மாற்றம் ஏற்பட்டிருந்தது. வைரம் ஜொலித்தது. முகம் லட்சணமாகியிருந்தது. கெஸ்ட் ஹவுஸ் வட இந்திய சாப்பாடு ருசித் தது. புலாவும் கடியும் ரொட்டியும் மட்டர் பன்னீரும் மூக்குச் சளிப்புக்கு ஆளாகாமல் உள்ளே இறங்கின. அதரங்களில் புன்னகை மலர, அவரைப் பார்த்து 'நா சித்த படுக் கறேன்' என்றபோது அதில் தெரிந்த நெருக் கம் அவருள் இனம்புரியாத கனிவை ஏற் படுத்திற்று. கடந்த இரண்டு ஆண்டுகளில் இவள்தான் அதிகக் கஷ்டப்பட்டவள் என்று மின்னலாய் எண்ணம் தோன்றி மறைந்தது. படுத்த சடுதியில் அவள் தூங்கிப் போனதை அவர் கவனித்தார். ராஜாவைப் பற்றிய சேதி கேட்டதிலிருந்து அவள் தூங்கி யிருக்கமாட்டாள் என்று நினைத்துக் கொண்டார். அவருக்குத் தான் வழக்கமாக மதியம் வரும் தூக்கம் வரவில்லை. நேற் றைக்கு இருந்த மன நிலைக்கும் இன்றைக் கும் கற்பனை செய்திராத மாறுதல் நிகழ்ந் திருப்பதை அவரால் உணரமுடிந்தது. இரண்டு ஆண்டுகளாக வதைத்து வந்த பரி தவிப்பும் கொந்தளிப்பும் அலைகள் அடங்கி விட்ட கடலாய் மௌனமாகிப் போனது போல பிரமையேற்பட்டது. நிறைவான மௌனம் அது என்பதுதான் அவர் எதிர்பார்த்திராத ஒன்று. அவர் மீதிருக்கும் கோபம் தணியாமலே பிள்ளையின் உயிர் பிரியக்கூடும் என்ற ஐயத்துடன் அவர் மேற்கொண்ட பயணம் இது. ஐ.ஸி.யு.வில் பேச்சு மூச்சற்றவனாய் நிராதரவாய் பல ட்யூப்களின் பிணைப்பில் கிடந்த அவனைப் பார்த்தபோது மனமும் தேகமும் தன்னிச்சை யாக அதிர்ந்தன. ஆனால் அவனுக்கு நினைவு திரும்பியதும் அவரிடம் அவன்

## புத்தர்

**அ**ந்தக் கிராமத்தின் வழியே சென்ற புத்தரை அங்கிருந்த மக்கள் அவமானப்படுத் தினர். அவர்களது வார்த்தைகள் கேட்கத் தக்கதாய் இல்லை. ஆனாலும் அவர்களிடம் புத்தர் அமைதி யாகப் பேசினார். "நான் அவசர மாக அடுத்த கிராமத்துக் குப் போக வேண்டும். திரும்பி வரும் போது மீதி யிருக்கும் உங் கள் பேச்சைக் கேட்டுவிட்டுப் போகிறேன்" என்றார். மக்கள் ஆச்சரியமடைந்தனர். "நாங்கள் உங்களிடம் என்ன பேசிக் கொண்டிருக்கிறோம் திரும்பி வரும்போதும் நீங்கள் கேட்டுவிட்டுப் போவ தற்கு? நாங்கள் உங்களை அவமதித்துக் கொண்டுதானே இருக்கிறோம்" என்றனர்.



புத்தர் சிரித்தார். "அப்படியா? என்னை அவமதிக்க வேண்டுமென்றால், நீங்கள் பத்து

காண்பித்த பாசம் அவரை நிலைகுலைய வைத்தது. 'அப்பா ஏன் வந்தாங்க, ஹார்ட் அட்டாக் வந்த உடம்பிலே!' அவரிடம் பரிவு காண்பிக்கிறான்! 'நீ எனக்கு மகனில்லே' என்றவரிடம். அவன் செத்துப் போயாச்சு, தண்ணி தெளிச்சாச்சு' என்று சொன்னவரிடம். கசையடி கிடைத்ததுபோல ஒரு விநாடி பதைத்து தேகமே கூசிப் போயிற்று அவருக்கு. மனசு தூசாகி கசிந்து உருகிற்று. காமாட்சியை நிமிர்ந்து பார்க்கத் தெம்பில்லாமல் போயிற்று.

அந்தப் பெண் சகுந்தலா அங்கு நின்றிருந்தது வெளியில் வந்த பிறகுதான் நினைவுக்கு வந்தது. அவள்தான் ராஜாவைத் தயார் செய்து வைத்தாளோ என்னவோ. இரண்டு வார்த்தை அவளோடு பேசியிருக்கலாம். இதைக் காமாட்சியிடம் சொல்ல நினைத்து பிறகு மௌனமாகிப் போனார். அப்போது இருந்த மனநிலையில் பேசாமல் இருப்பதே உகந்ததாகப்பட்டது. அவர் உடம்பைத் தளர்த்திப் படுத்தார். ராஜா பழசை மறந்ததற்குக் காமாட்சியிடம் அவனுக்கு இருக்கும் நஞ்சுக்கொடி பிணைப்பே காரணம் என்று தோன்றிற்று. 'இவங்களுக்குத்தான் வடகத்திலேயும் முறுக்கிலேயும் பிரியத்தைக் காட்டத் தெரியுதே' என்று சபாபதி சொன்னது நினைவுக்கு வந்தது. இந்தப் பிணைப்பை அத்தனை எளிமையாக்கக் கூடாது என்று அவர் தனக்குள் சொல்லிக் கொண்டார்.

மாலையில் பார்வையாளர் நேரத்தில் மறுபடி ராஜாவை சென்று பார்க்க வேண்டும் என்று காலையிலேயே தீர்மானித்தபடி அவருக்கு முன்னால் எழுந்திருந்து காமாட்சி தயாரானாள். ஆஸ்பத்திரியை நோக்கி வண்டி செல்லும்போது அவள் சின்னப் பெண்ணைப் போல சுற்றுப் புறத்தைப் புதிய சுவாரஸ்யத்துடன் பார்த்துக் கேள்வி கேட்டது அவருக்கு விநோதமாக இருந்தது. ஆஸ்பத்திரியை அடைந்ததும் அவள் வெகு வேகமாக வார்டை நோக்கி நடந்தபோது சலவைக்கல் தரை வழுக்கலாம் என்று அவர் கவலைப்பட்டார். பார்வையாளர்களினால் வார்டு கலகலப்பாக இருந்தது. காமாட்சி பிரசன்ன முகத்துடன் ராஜாவின் படுக்கையருகில் சென்றாள். ராஜா விழித்திருந்தான். அவர்களுக்காகக் காத்திருந்தவன் போலப் பெரிதாகப் புன்னகைத்தான். காமாட்சி அவன் நெற்றியில் கையை வைத்து, "எப்படியிருக்கே கண்ணு?" என்றாள். ராஜா அவரையும் புன்னகையுடன் பார்த்துவிட்டு, அவளிடம் சொன்னான்.

"நல்லாயிருக்கேன். நீங்க ஏன் கிளம்பிப் போயிட்டீங்க?"

அவள் சிரித்தபடியே சொன்னாள்.

"இங்கே உட்காரவிடமாட்டேங்கறாங்க ராஜா. நீ வேற களைச்சு தூங்கிட்டே! நர்ஸம்மா வந்து விரட்டிடுச்சு."

ராஜா இலேசாகப் புன்சிரிப்புச் சிரித்தான்.

"ஏதாவது வேணுமா கண்ணு? ஏதாவது சாப்பிடக் கொடுத்தாங்களா?"

ஆமாம் என்பதுபோல அவன் தலையசைத்தான். "யாரு?" என்றாள் காமாட்சி எச்சரிக்கையுடன்.

"நர்ஸ்" என்றான் அவன். "இங்க ஒரு பொண்ணு வந்து வந்து நிக்குது. நாதான் அவ புருஷன்ங்கறா. எனக்குக் கல்யாணமே ஆகல்லேன்னு சொன்னா நம்பமாட்டேங்கறா."

அவன் சொல்வதைக் கிரகித்துக் கொள்ளச் சரவணனுக்குச் சற்று நேரம் பிடித்தது. நிம்மதியா ஏமாற்றமா என்று புரியாத ஓர் உணர்வு ஏற்பட்டது. நாளைக் காலை முதல் வேலையாக டாக்டரைப் பார்க்க வேண்டும் என்று எண்ணம் எழுந்தது.

(தொடரும்)

ஆண்டு முன்பாக வந்திருக்க வேண்டும். நீங்கள் என்னை அவமானப்படுத்துவது உங்கள் உரிமைதான். ஆனால் அதை ஏற்பதும் ஏற்காததும் என் விருப்பம்'' என்றார்.

''நீங்கள் என்னதான் சொல்கிறீர்கள் எங்களுக்குப் புரியவில்லை'' என்றார் ஒருவர்.

புத்தர் ''இந்த கிராமத்திற்கு வரும்முன் வேறொரு கிராமம் வழியாக வந்தேன். அக்கிராமத்து மக்கள் எனக்குத் தர நிறைய இனிப்பு பண்டங்களைக் கொண்டு வந்தனர். நான் அவர்களுக்கு நன்றி கூறிவிட்டு, நான் இனிப்பு உண்பதில்லை. எனவே எனக்கு இனிப்புகள் வேண்டாம் என்று கூறினேன். அவர்கள் இனிப்பை என்ன செய்திருப்பார்கள் என்று நினைக்கிறீர்கள்?'' என்று கேட்டார்.

கூட்டத்தில் இருந்த ஒருவர், ''அவர்கள் அதனைத் திரும்ப வீட்டிற்கு எடுத்துச் சென்றிருப்பார்கள்'' என்றார்.

உடனே புத்தர், ''இப்போது நீங்கள் என்ன செய்வீர்கள்? நீங்கள் எனக்கு அளித்த அவமானங்களை நான் ஏற்றுக் கொள்ளவில்லை. எனவே நீங்களே அதை உங்கள் வீட்டிற்குத் திரும்ப எடுத்துச் செல்ல வேண்டியதுதான்'' என்றார்.

# அட்மிஷன் ஜோக்ஸ்!

**எஸ்.மோகன்**

"வாஸ்தவம்! கல்விக்கு வயதில்லைன்னு சொல்றது சரிதான். அதுக்காக எழுபது வயசாகிற உங்களுக்கு அட்மிஷன் தர முடியாது சார், சொன்னா கேளுங்க!"





"எதற்காக நீ கள்ள நோட்டு அடிச்சே?"

"என் பிள்ளையை எல்.கே.ஜி.யிலே சேர்க்கணும்ங்க."

"என்னங்க, நீங்களும் யூனிபார்மிலே போறீங்க?!"

"என்ன சார் பண்றது? எங்க பையன் ஸ்கூலில் ரொம்ப ஸ்டிரிக்ட். கொண்டு வந்து விடறவங்களும் யூனிபார்மிலேதான் வரணுமாம்."





''அதென்ன ஸன்டே யூனிபார்ம்?''

''எங்க ஸ்கூல் டீச்சர் ஸண்டேல வீட்டுக்கு விசிட் வருவாங்க. அன்னிக்கு உங்க பையன் இந்த யூனிபார்மிலே இல்லேன்னா ஃபைன் போட்டுடுவோம்.''

''எல்.கே.ஜி. அப்ளிகேஷன்ல ஏதோ புது விவரம் இருக்கா, என்ன சார் அது?''

''இன்கம்டாக்ஸ் விவரத்தோட ஜெராக்ஸ் வைக்கணுமாம். அதைப் பார்த்துதான் டொனேஷன் கேட்பாங்களாம்''






''பிளஸ்டு ரிசல்ட் வந்ததுலேர்ந்து ஒரே கவலையா இருக்கீங்களே, உங்க பையன் பெயிலாயிட்டானா?''

''இல்லே சார், பாஸாயிட்டான். அட்மிஷனுக்கு அலையணுமே.''

''கல்வித் திட்டத்துல குறை இருக்குப்பா, மாத்தணும்.''

''சரி சரி, அடுத்த தடவை எழுதி பாஸ் பண்ணலாம், போ.''



# 'கோல்' மால்

★ காமரூன் அணியைச் சேர்ந்த ரோஜர் மில்லர் என்பவருக்கு ஒரு தனிச் சிறப்பு உண்டு. 1994 உலகக் கோப்பைப் பந்தயங்களில் ரஷ்ய அணிக்கெதிராக ஆடியபோது இவரது வயது 42. உலகக் கோப்பைப் பந்தயங்களில் கலந்து கொண்டவர்களில் மிகவும் சீனியர் இவர்தான்.

★ மேற்கு வங்காள முதல்வர், தனது அமைச்சரவையின் அத்தனை பேருக்கும் ஒரு சுற்றறிக்கை அனுப்பியிருக்கிறார். ''உலகக் கோப்பைப் பந்தயங்களைத் தொலைக்காட்சியில் பார்ப்பதற்காக ஒட்டு மொத்தமாக விடுப்பு எடுத்துக் கொண்டு விடாதீர்கள்'' என்பதுதான் அதன் சாராம்சம்.

★ ராமாயணத்தில் சிவதனுசை ராமன் வளைத்ததை ''எடுத்தது கண்டனர், இற்றது கேட்டனர்'' என்று வர்ணித்தார் கம்பர். உலகக் கோப்பைப் பந்தயங்களில் அந்த அளவுக்கு மிக வேகமான கோல் ஒன்று 1930ல் போடப்பட்டது. பெரு நாட்டு அணிக்கெதிராக ஆடியபோது ரோமானியாவைச் சேர்ந்த ஆடல் வெர்ட்யூ என்பவர் ஆட்டம் தொடங்கிய பதினைந்தாவது நொடியே ஒரு கோலைப் போட்டு சாதனை படைத்துள்ளார்.





★ திஹார் சிறைச்சாலையின் அத்தனைப் பிரிவுகளிலும் இப்போது கலர் டி.வி. நிறுவப்பட்டிருக்கிறது. பல புரட்சிகளுக்கு வித்திட்டிருக்கும் இந்தச் சிறைச்சாலையில் உள்ள கைதிகளின் நெடுநாள் கோரிக்கையாம் இது. இப்போது இது நிறைவேறியதில் அவர்களுக்கு இரட்டை மகிழ்ச்சி. உலகக் கோப்பைப் பந்தயங்களைக் கண்டு களிக்கலாமே!

★ இப்போது நடக்கும் போட்டிகள் உட்பட இதுவரை பதினேழு உலகக் கோப்பைப் பந்தயங்கள் நடைபெற்றுள்ளன. அவை அத்தனையிலும் கலந்து கொண்ட ஒரே நாடு என்ற பெருமை பிரேசிலுக்குத்தான்.

★ உலகக் கோப்பை ஒரு புறம் இருக்கட்

டும். இதுபோன்ற சந்தர்ப்பத்தில் "தங்கப் பந்து" ஒன்றும் ஒவ்வொரு முறையும் வழங்கப்படுகிறது. மொத்த ஆட்டங்களிலும் மிகவும் சிறப்பாக விளையாடியவருக்கு இந்தக் கோப்பை வழங்கப்படுகிறது. ஆனால் எந்த ஆட்டத்திலும் அவர் நடுவரால் வெளியேற்றப்பட்டிருக்கக் கூடாது.

★ கோழிக்கோடில் உள்ள ஒரு ஆட்டோ ரிக்ஷாக்காரர் ஒரு தவறு செய்ததால் ஏற்பட்ட கைகலப்பில் மருத்துவமனையொன்றில் ஆபத்தான கட்டத்தில் இருக்கிறார். அவர் செய்த தவறு - பிரான்ஸ் நாட்டு கால்பந்து சூப்பர் ஸ்டாரான ஜிடேனைக் கடுமையான வார்த்தைகளால் திட்டியதுதான்!



★ உலகக் கோப்பைப் பந்தயங்களில் மிக அதிகமானவற்றில் கேப்டனாக இருந்தவர் என்ற பெருமை மாரடோனாவுக்குத்தான். பதினாறு ஆட்டங்களில் இவரே அணித் தலைவர்.

★ இப்போது பார்வையாளர்கள் அலை மோதுகிறார்கள். நுழைவுச் சீட்டு கிடைக்காமல் பரிதவிக்கிறார்கள். ஆனால் 1950ல் பிரேசில் நாட்டில் உலகக் கோப்பைப் பந்தயங்கள் நடைபெற்றபோது பார்வையாளர்களை வரவழைக்க அந்த நாடு மிகவும் சிரமப்பட்டது. இதற்காக இரண்டு லட்சம் பேர் அமரக்கூடிய, உலகின் மிகப் பெரிய மைதானத்தை ரியோ நகரில் உருவாக்கியது.



ஆனால் அது நிரம்பவில்லை. பார்வையாளர்கள் இருக்கட்டும், கலந்து கொள்வதாக வாக்களித்திருந்த பல அணிகளே கடைசி நிமிடத்தில் பின்வாங்கிவிட்டன. இரண்டாம் உலகப் போர் முடிவடைந்த கட்டம் என்ற பின்னணியைப் பார்த்தால் காரணம் விளங்கியிருக்கும்.

★ மால்டா தேசத்தின் தலைநகர் வலட்டா. இங்கு மையமான ஓரிடத்தில் பெரிய திரையில் உலகக் கோப்பைப் பந்தயங்கள் ஒளிபரப்பாகிக் கொண்டிருந்தன. அதைப் பார்த்துக் கொண்டிருந்த நூற்றுக் கணக்கான தொழிலாளிகள் திடீரென்று அந்த இடத்தை விட்டு வேகமாக ஓடிச் சென்றனர். காரணம் அவர்களைப் படம் பிடிக்க ஒரு தொலைக்காட்சி சானலின் படப்பிடிப்பு முயற்சி செய்ததுதான்! பொய்க் காரணங்களைக் கூறிவிட்டு லீவெடுத்துக் கொண்டு வந்திருந்தார்கள் அந்தத் தொழிலாளிகள். காமிராவில் சிக்கி அது ஒளிபரப்பானால் முதலாளிகளின் கோபத்துக்கு ஆளாக வேண்டியிருக்குமே, அதுதான் ஓட்டம்!

★ எந்த நாட்டில் உலகக் கோப்பைப் பந்தயங்கள் நடைபெறுகிறதோ அந்த நாடே கோப்பையைத் தட்டிச் சென்றதற்கு ஐந்து உதாரணங்கள் உண்டு. உருகுவே (1930), இத்தாலி (1934), இங்கிலாந்து (1966), ஜெர்மனி (1974) மற்றும் அர்ஜென்டினா (1978).

— குல்லூ

# வானம் தொடுவோம்!

ஊட்டிக்கு வருகிறவர்கள் மலர்க் கண்காட்சி, ரோஜாத் தோட்டம், படகு சவாரி, குதிரை சவாரி என்று அனுபவித்து விட்டுப் போகிறார்கள். இங்கு சில புராதன அழகிய கோவில்களும் பார்க்கப்பட வேண்டியவை. காசி விச்வநாதர் கோவில், பாலாஜி கோவில், ஹனுமார் கோவில், முருகன் கோவில் ஆகியன. காசி விச்வநாதர் கோவிலில் லிங்கவடிவில் சிவன், அன்னபூரணி, விசாலாட்சி, கணபதி, முருகன், ஐயப்பன், தட்சிணா மூர்த்தி, துர்க்கை, நவ கிரஹங்கள் அழகுற அமைந்திருக்கின்றன. தவிர, 'நவஜோதி' எனும் ஒன்பது பெரிய வெண்கல அகல்விளக்குகள் எரிந்து கொண்டிருக்கும். நாம் எண்ணெய் வாங்கிவிட்டு நவஜோதியைப் பதினாறு முறை வலம் வந்து நமஸ்கரித்தால் எண்ணிய எண்ணம் கை கூடுமாம்.

- என்.சாரதா, ஊட்டி.

## விஹார்... பீஹார்!

தன் மகள் இந்திரா பிரியதர்ஷினிக்கு நேரு 30.3.1932ல் எழுதிய கடிதத்தில் : ''நாடெங்கும் 'விஹாரங்கள்' என்னும் பெயருடைய பெரிய புத்தமடங்கள் தோன்றின. 'பாட்னா' என்னும் பாடலிபுத்திரத்துக்கருகில் இந்த விஹாரங்கள் மிகவும் அதிகமாயிருந்தபடியால் அந்த மாகாணம் முழுவதுக்கும் 'விஹார்' என்பது பெயராயிற்று. 'விஹார்' என்பது திரிந்து இப்போது 'பீஹார்' என்று வழங்குகிறது.

- ஆர். ராம்மோகன், விருதுநகர்

வேக வைத்தபின் உருளைக் கிழங்கின் தோலை மிகவும் சுலபமாக உரிக்க முடிகிறது. இது எப்படி சாத்தியமாகிறது? உருளைக் கிழங்கின் தோலையும் உட்பாகத்தையும் இணைப்பது 'பெகடிக்' எனப்படும் பொருள். உருளைக்கிழங்கை வேகவைக்கும்போது இந்த பெகடிக் அழிந்து விடுவதால் சுலபமாகத் தோலை உரிக்க முடிகிறது!

- பா. நாகலட்சுமி, சென்னை




## வாசம் பார்த்து...!

வரிசை வரிசையாகச் செல்லும் எறும்புகளில் சில அவ்வப்போது 'சடன் பிரேக்' போட்டு நின்று, மீண்டும் செல்வதைப் பார்த்து வியப்படைந்திருப்பீர்கள். எறும்பு ஏன் இப்படிச் செல்கிறது? எறும்பு நிதானித்து நின்று மறுபடியும்

செல்லும்போது மிகவும் நுண்ணியதொரு வாசனையை விட்டுச் செல்கிறது. பின்னால் வரும் எறும்புகள் இந்த வாசத்தைப் பிடித்துக் கொண்டு தங்கள் இருப்பிடம் போய்ச் சேர்கின்றன.

- ப. நாகலட்சுமி, சென்னை

## 'டி!'

அமெரிக்காவில் ஒரிகான் மாநிலத்தில் உள்ள லிங்கன் என்ற ஊரில் ஓடும் ஆறுதான் உலகிலேயே நீளம் குறைவான ஆறு. இந்த ஆற்றின் பெயர் 'டி'. நீளம் 440 அடி.

- கடற்கரை நடேசன், சின்னமனூர்

## 'குப்பை'

இங்கிலாந்தில் 'குப்பை' என்ற பெயரில் ஒரு பத்திரிகை வெளிவருகிறது. குப்பைகளை எவ்வாறு அகற்றுவது. அவற்றை மீண்டும் எவ்வாறு பயன்படுத்துவது என்றெல்லாம் அது விளக்குகிறது.

- நெ.இராமன், சென்னை



## சப்போட்டா மகிமை!

சப்போட்டா பழத்தில் வைட்டமின் ஏ, பி, சி மற்றும் கால்சியம் சத்தும் அடங்கியுள்ளது. எலும்பு, பற்கள், நகங்கள் போன்றவற்றிற்கு வலுவைத் தருகிறது. தொண்டைப்புண், கர்ப்பப்பை சம்பந்தமான நோய்களையும் குணப்படுத்துகிறது. இரத்த விருத்திக்கும் மிகச் சிறந்தது இந்தச் சப்போட்டா!

- பா. செல்வி, சென்னை

## ரூ.1200க்கு கல்கத்தா!

சபரணாராய் சௌத்ரி எனும் நிலக்கிழார் கல்கத்தாவை கிழக்கிந்தியக் கம்பெனிக்கு ரூ.1200க்கு விற்றார். ராவ் சர்நாக் எனும் அதிகாரி 11.9.1698 அன்று கம்பெனியின் சார்பாக கையொப்பமிட்டு கல்கத்தாவை வாங்கினார்.

- ஆர். பிரகாசம், திருவண்ணாமலை

## வானம் தொடுவோம்!

ரஷ்யப் புரட்சித் தலைவர் லெனின், நாற்காலியில் அமர்ந்தால், அவரது கால்கள் தரையைத் தொடாது. அந்த அளவுக்கு அவருடைய கால்கள் குட்டையானவை.

ஒரு முறை அவருடைய நண்பர், ''நீங்கள் நாற்காலியில் உட்காரும்போது உங்கள் கால்கள் தரையைத் தொடவில்லையே என்ற குறை உங்களுக்கு உண்டா?'' என்று கேட்டுவிட்டார்.





அதற்கு லெனின், ''கால்கள் தரையைத் தொடாவிட்டால் என்ன? கைகளால் வானத்தைத் தொட்டுக் காட்டுவோம்!'' என்றார் கம்பீரமாக.

- மூ. பெரியசாமி, விட்டுக்கட்டி

## பித்தான் குணங்கள்!

கன்பூஷியஸ் காலத்தில் சீனர்கள் சகட்டு மேனிக்குச் சட்டைப் பித்தான்களை வைத்துத் தைத்து அணிவார்கள். அதை ஐந்து பித்தான்களாகக் குறைத்து மக்களை அணியச் சொன்னார் கன்பூஷியஸ். இந்த ஐந்து பித்தான்களும் உண்மை, அமைதி, பொறுமை, நேர்மை, சகிப்புத் தன்மை ஆகிய ஐந்து குணங்களைக் குறிக்கும்.

- ப. இராம் முருகன், சிவகங்கை



# ராஜவம்சத்து துறவி!

“எல்லாமே மனத்தில்தான் இருக்கிறது. மனம், அமைதியாக, தூய்மையுடன் இருக்கிற போது, வாழ்க்கை தெளிவாக இருப்பதைக் காண்பீர்கள். அப்போது, எல்லாவிதமான துயரங்களும், போராட்டங்களும், கஷ்டங்களும், சோகங்களும் வாழ்க்கையின் அங்கமாக இருப்பதைப் புரிந்து கொள்வீர்கள்.

"நீங்கள் சூரிய ஒளியை விரும்புவீர்கள் என்றால், மழைத் துளியையும் ஏற்கும் மனப் பக்குவம் வேண்டும். ஆகவேதான், நம் பிரார்த்தனை என்பது, பகவானே! என்னால் மாற்ற முடியாதவற்றை ஏற்றுக் கொள்ளும் மனப்பக்குவத்தைக் கொடு; மாற்ற முடிந்தவற்றை மாற்றும் தைரியத்தைக் கொடு! இந்த இரண்டையும் வேறுபடுத்தி இனம்கண்டு கொள்ளும் ஞானத்தைக் கொடு என்பதாக இருக்க வேண்டும்."

- இப்படிக் கூறுபவர் பெண் துறவியான சுவாமி ஞானானந்த சரஸ்வதி. ஞான அத்வைத பீடம் என்ற ஒன்றைத் துவக்கி, ஆன்மிகப் பணியில் ஈடுபட்டிருக்கிறார்.

குருவாயூர் அருகில் உள்ள அன்னக்கரா என்ற ஊரில் பிறந்த இவர், தமது ஏழாவது வயதிலிருந்தே, ஆன்மிக அனுபவங்களைப் பெற்று விட்டதாகக் கூறுகிறார்.

"ஏதோ ஒரு சக்தி, என் மூலமாகப் பேசுவது போன்ற உணர்வு ஏற்பட்டதுண்டு. எனக்குத் தெய்வீகக் கட்டளை வந்தாலொழிய நான் எந்தக் காரியமும் செய்வதில்லை. அது தண்ணீர் குடிப்பதாக இருந்தாலும் சரி!'' என்கிறார் ஞானானந்த சரஸ்வதி.

திருச்சியில் கான்வென்ட் பள்ளியிலும் அதன்பின் ஹோலிகிராஸ் கல்லூரியிலும் படித்த இவர், கொச்சின் மகாராஜாவின் மூத்த மகனான பாலியத்திவாகரன் அச்சனைத் திருமணம் செய்து கொண்டு, இல்லறத்தில் ஈடுபட்டார். ஐந்து குழந்தைகளைப் பெற்றெடுத்தார்.

''இல்லறத்தில் ஈடுபட்ட காலத்திலும், ஆன்மிக நாட்டம் அதிகமாக இருந்தது. அதற்காக என் இல்லறப் பொறுப்புகளிலிருந்து நான் விலகிவிடவில்லை.

"ஆன்மிகம், குடும்பப் பொறுப்பு என்று இரண்டும் ஒன்றையொன்று பாதிக்காதபடி என் வாழ்க்கையை அமைத்துக் கொண்டேன். சிறுகச் சிறுக என் உணவு முறைகளை மாற்றிக் கொண்டு, கடந்த இருபத்தைந்து ஆண்டுகளாக தினம் ஒரே முறைதான் சாப்பாடு" என்கிறார் இவர்.

1975ல் சந்நியாசம் பூண்ட இவர் அடுத்த வருடமே ஸ்ரீஅத்வைத பீடம் அமைப்பை ஆரம்பித்தாராம்.

தற்போது, மேற்கு மாம்பலத்தில் உள்ள தமது ஆசிரமத்தை விட்டு, வெளியில் எங்கும் செல்வதில்லை. சுற்றுவட்டாரத்தில் உள்ள பாழடைந்த நிலையில் உள்ள கோவில்களைப் புனரமைத்து, நம் பாரம்பரிய கலாசாரத்தைப் பாதுகாக்கும் தீவிர முயற்சியில் இறங்கியிருக்கிறார்.

— மௌலி

# எடையைக் குறைக்கலாமா?

ஒரு படத்தில் நடிக்கும்போது எக்கச் சக்க கிலோ எடை கூடி, அடுத்த படம் செய்யும்போது அத்தனை கிலோ எடையையும் சடாரென்றுக் குறைத்து, பழையபடி ஆகி விடுகிறார் கமல்.

இப்படி இஷ்டத்துக்கு எடையைக் கூட்டவும் குறைக்கவும் செய்தால் உடம்புக்கு என்ன ஆகும்?

அப்போலோ மருத்துவமனையைச் சேர்ந்த டாக்டர் சந்திரசேகர் சாண்டில்யாவை, அவரது தனி க்ளினிக்கில் சந்தித்துக் கேட்டோம் :

"இது ஒரு விசித்திரமான கேள்வி. எப்படி உடம்பின் எடையைக் கூட்டுகிறோம் என்பதை முதலில் பார்க்க வேண்டும். கூடுதலான உணவு வகைகளைக் கொண்டா? அல்லது உடற்பயிற்சியாலா?

"உணவு வகை என்றால் முட்டையும் சேர்த்துத்தான். முட்டையின் வெள்ளைக் கரு முழுக்க முழுக்கப் புரதச் சத்து. மஞ்சள் கருவோ முழுதும் கொழுப்புச் சத்து. இவை எல்லாமே மஸில்ஸுக்கு - அதாவது தசைக்குப் போய்ச் சேருவதில்லை. இரத்தக் குழாய்களுக்கும், லிவருக்கும் (ஈரலுக்கும்) போகிறது. அதிகமான புரதச் சத்து பிறகு சிறுநீரகம் வழியாக வெளியேறி விடுகிறது.

"இதுவே உடற்பயிற்சி மூலமாக உடலை வலுப்படுத்தும்போது, இயற்கையாகவும், ஏற்கக்கூடியதாகவும் இருக்கும். அதிலும்கூட, அதிகப்படியாக இருப்பது நல்லதல்ல.

"அதேபோல, உடல் எடையைக் குறைப்பதிலும் வாக்கிங், இருபது நிமிட ட்ரெட்மில் பயிற்சி, குறைந்த பட்ச உடற்பயிற்சி என்று இருந்தால் எந்த பாதிப்பும் இருக்காது. ஆனால் உடல் எடையை ஒரேயடியாகக் கூட்டுவதும் நாலைந்து மாதங்களுக்குப் பிறகு மறுபடி குறைப்பதும் நல்லதல்ல.

"மனத்தளவில், இதுபோன்ற உடல் எடை அதிகரிப்பும் குறைப்பும் எந்தவித பாதிப்பையும் ஏற்படுத்தாது. ஏனென்றால் எந்தக் கொழுப்புச் சத்தும் மூளைக்குச் செல்லுவதில்லை.

— சித்தார்த்



# நடக்கும் பார் நடக்கும்!

**மேஷம்** : அறிவாற்றல் பளிச்சிடும் வாரம்னு சொன்னாலே, ஆற்றல், நம்பிக்கை, துணிச்சல்னு பல விஷயங்களும் உங்களுக்குத் தானா வந்து சேரும்னுதானே அர்த்தம்? நண்பர்கள், உறவினர்கள் உதவ முன் வருவாங்க. அலுவலகத்தில் ஆரோக்கியமான சூழ்நிலை உருவாகும். சிலர் புதிய முயற்சிகளில் வெற்றி பெறுவார்கள். பணம் கொடுக்கல் வாங்கலில் அனுகூலமான போக்கு ஏற்படும். மாணவர்கள் திறமை பளிச்சிடும். கணவன் - மனைவி ஒற்றுமை சிறப்பாக இருக்கும்.

**ரிஷபம்** : சிக்கலான காரியங்களைக்கூட சாமர்த்தியமாகவும் திறமையுடனும் செயல்பட வைத்து, வெற்றி காண்பீர்கள். சுயதொழில் செய்பவர்களுக்கு லாபம் அதிகரிக்கும். இதுவரை 'இப்பவோ அப்பவோ' என்று இழுத்தடித்துக் கொண்டிருந்த விஷயங்களும், 'இப்பவே, இப்போதே' என்று இனிமையாக முடியும். 7 1/2 சனியில் இரண்டாவது சுற்று என்றாலும், அதிகமாய்ப்படுத்தாது. சிறு சிறு பிரச்னைகள் ஏற்பட்டாலும், குரு பலத்தால் சமாளித்துவிடுவீர்கள்.

**மிதுனம்** : ராசியில், செவ்வாய், குரு என்பதால் தனலாபம், மதிப்பு, அந்தஸ்து ஆகியவற்றைக் கொடுப்பார். தெய்வ பலம் அதிகரிக்கும். உத்தியோகஸ்தர்கள் முன்னணிக்கு உயருவார்கள். பெயர், புகழ் கூடி வரும். பயணங்களினால் அனுகூலம் ஏற்படும். மருத்துவம், ரசாயனம், அழகு சாதனம், அலங்கார வகைப் பொருட்கள் நல்ல ஆதாயம் கொண்டு வரும். புதிய முயற்சிகளில் ஈடுபாடு உண்டாகும். சுப காரியங்கள், திருமணம் போன்ற முயற்சிகள் வெற்றி தரும். கலைத் துறையினர் ஏற்றம் பெறுவார்கள். ரேஸ், லாட்டரி, ஸ்பெகுலேஷன் விஷயங்களில் அவசரமே கூடாது.

**கடகம்** : 'நல்லதா பிசினெஸ் தொடங்கணும். நேரந்தான் அமைய மாட்டேங்குது' என்று முனகிக் கொண்டிருந்த கடக ராசிக்காரர்களுக்கு அதுக்கான நேரம் வந்தாச்சு. தவிடு தொட்டாலும், பவுனாகும். சரளமான பண வசதி, தெளிவான மனநிலை இரண்டுமே இருக்கும் போது, முன்னேற்றம் முன்னாடி வந்து நிற்காதா என்ன? விவசாயிகள் மேன்மை அடைவார்கள். விற்பனையாளர்கள், தரகர்கள் நலம் பெறுவார்கள். புத்தகம், பதிப்பகம், பத்திரிகை, அச்சகம் போன்றவை அனுகூலம் தரும்.

**சிம்மம்** : எதிர்பாராத தனலாபம் வந்தால், மனசுக்கு எவ்வளவு உற்சாகமாக இருக்கும்? கூடவே எதிரிகள் ஓடி ஒளிதல், குடும்ப மகிழ்ச்சி, தெய்வ பிரார்த்தனை என நல்ல விஷயங்களாகவே நிகழக் கூடிய வகையில் கிரக சஞ்சாரம் அமைந்துள்ளது. மிகவும் சிக்கலான கடினமான காரியங்களால் சமயோசித புத்தியைப் பயன்படுத்தி, பாராட்டுப் பெறுவீர்கள். தங்கம், வெள்ளி, நவரத்தினம், ஆடை, ஆபரணம் ஆகியவை ஆதாயம் கொண்டு வரும். உற்சாகம், கேளிக்கை, விருந்து, உபசாரம் போன்ற சந்தோஷமான நிகழ்ச்சிகளில் பங்கு கொள்வீர்கள்.

**கன்னி** : 3ம் இடமான விக்ரஸ்தானத்தில் ஞான வைராக்கியக்காரன் கேது சஞ்சாரம் என்பதால் வீரம், தைரியம் நிறைந்த அணுகுமுறையும் விவேகமும் நிறைந்து சகல காரியங்களாலும் வெற்றியைத் தேடித் தரும். வியாபாரிகள் வளர்ச்சி அடைவார்கள். கல்வி, படிப்பு, கலை, சம்பந்தமுள்ள தொழில் ஆதாயம் கொண்டு வரும். உள்நாட்டு, வெளிநாட்டு வியாபாரம் எதிர்பாராத வெற்றி தரும். திருமண முயற்சிகள் கூடி வரும். பெண்களுக்கு உற்சாகமான நிலை அமையும். மாணவர்கள் வெற்றி நடைபோடுவார்கள். சுக்கிரன் 11ல் என்பதால் நல்ல தகவல் வந்து சேரும். சட்டம், காவல், இராணுவம் போன்ற துறைக்காரர்கள் முன்னணிக்கு உயருவார்கள். சாதுக்கள், மகான்கள் தரிசனம் மன அமைதி தரும்.

**துலாம்** : 8ம் இடத்தில் சனி, ராகு சஞ்சாரம் என்றாலும் 9ம் இடத்தில் உலவும் கிரகங்கள் காரணமாக, 8ம் இடத்துச் சனி பற்றி கவலைப்பட்டு, கலங்க வேண்டாம். தொழில் புரிபவர்கள் இது நாள் வரை அனுபவித்து

வந்த சிக்கல்கள் நீங்கி நன்மை அடைவார்கள். தெய்வீக ஸ்தல யாத்திரை அமையும். அதனால் மனத் தெளிவு, அமைதி உண்டாகும். வியாபாரத்தில் பொருளாதாரம் அதிகரிக்கும். பண நடமாட்டம் தாராளமாக இருக்கும். மருந்து, ரெடிமேட் ஆடைகள், ரசாயனம், பொன், வெள்ளி, நவரத்தினம், உலோகங்கள் ஆதாயம் கொண்டு வரும். புதியவர்களிடம் பழகும் போது எச்சரிக்கை அவசியம்.

**விருச்சிகம் :** சுப காரியங்கள் நடக்கப் போகுதுன்னாலே மகிழ்ச்சி, சுபச் செலவுகள், குடும்ப ஒற்றுமைனு பல விஷயங்களுக்கான சந்தர்ப்பம் கூடிவரும். சிலர் புதிய வாகன யோகம் பெறுவார்கள். உடன் பிறந்தவர்கள் அனுகூலமாக இருப்பார்கள். மக்கள் நலம் சீராக இருந்து வரும். எடுத்த காரியங்களில் சிக்கல் நிறைந்து இருந்தாலும், திறமையுடன் சமாளிக்கும் அனுபவம் கிடைக்கும். தொழிலில் நல்ல முன்னேற்றமும், வளமான சூழ்நிலையும் அமையும். கமிஷன், ஏஜென்ஸி, இயந்திரம், வாகனம், மனை, ரியல் எஸ்டேட் இனங்களில் அபாரமான வளர்ச்சி காணலாம்.

**தனுசு :** பூர்வீக சொத்துக்கள் விஷயத்தில் இதுவரை இருந்து வந்த பிரச்னைகள், இடையூறுகள் நீங்கி சமாதானம் ஏற்படும். ஒரு சிலருக்குப் புதிய வீடு கட்டும் யோகம் அமையும். ரேஸ், லாட்டரி துறையைக் காட்டிலும், பங்கு மார்க்கெட்டில் பணம் பார்க்கலாம். உத்தியோகத்தில் மேன்மை உண்டாகும். கடன் சுமை குறையும். வர வேண்டிய பணம், வசூலாக வேண்டிய பொருள் எல்லாமே வந்து சேரும். எதிர்ப்புகள் மறையும். தனியார் நிறுவன உத்தியோகஸ்தர்கள் புத்திசாலித்தனத்தால் பாராட்டுப் பெறுவார்கள்.

**மகரம் :** சனி, ராசிநாதன் பூர்வ புண்ணியஸ்தானத்தில் ராகு, புதன் - சூரியனுடன் என்பதால், இதுவரை இருந்து வந்த தடைகள் இடையூறுகள் நீங்கி, எதிர்ப்புகள் மறையும். குடும்ப வாழ்க்கையிலும், தொழில் முறையிலும் இருந்து வந்த சிக்கல்கள் நீங்கி, தெளிவான முடிவுகள் எடுப்பீர்கள். மேலதிகாரிகளின் பாராட்டும், சக ஊழியர்களின் ஒத்துழைப்பும் கிடைக்கும். சுக்ரன் கடகத்தில் என்பதால் வியாபாரம் மேன்மையடையும். வார கடைசியில் சூரியன் 6ல் சஞ்சாரம் என்பதால் அரசு விவகாரங்கள் நன்மை தரும். பொருளாதாரம் அபிவிருத்தி அடையும்.

**கும்பம் :** இந்த வாரம் கும்ப ராசிக்காரர்கள் தேனீ போல சுறுசுறுப்பாக உழைக்க வேண்டியிருக்கும். தெய்வ பலம் மிகுந்து காணப்படுவதால், முயற்சிக்கேற்ற லாபம் உண்டாகும். கேதுவின் சஞ்சாரம், 10ல் இருப்பதால், இயந்திரம், இன்டஸ்ட்ரீஸ், வண்டி, வாகனம், ரியல் எஸ்டேட் ஆகிய இனங்களில் அனுகூலம் உண்டாகும். குடும்பத்தில் ஒற்றுமை, மகிழ்ச்சி நிலைக்கும். பெண்களுக்கு உற்சாகமான நிலைமை உருவாகும். விருந்து, உபசாரம், உல்லாசம் போன்ற வகையில் பாக்யம் ஏற்படும். விரோத குணமுள்ளவர்களுக்கு மனம் மாறி, அன்பு பாராட்டும் நிலைமை உண்டாகும்.

**மீனம் :** கிரக சஞ்சாரம் ராசியாதிபதி, குரு 4ல் செவ்வாயுடன் மற்றும் 3ல் சனி, ராகு, புதன், சூரியன் சஞ்சாரம் என்பதால், குடும்பத்தில் சகஜமான, சந்தோஷமான சூழ்நிலை நிலவும். உடல் ஆரோக்கியம் பலப்படும். வியாபாரிகள், தொழிலதிபர்கள் முன்னேற்றம் அடைவார்கள். சுயமாகவோ, கூட்டாகவோ வியாபாரம் செய்பவர்கள் மிகுந்த பலன் அடைவார்கள். மாணவர்களுக்குப் படிப்பில் ஆர்வம் அதிகரிக்கும். கொடுக்கல் - வாங்கல் இனம் நல்ல லாபம் கொண்டு வரும். உணவு, கம்ப்யூட்டர், எலக்ட்ரானிக்ஸ், உலோகம், எஃகு, இரும்பு சம்பந்தப்பட்ட தொழில்கள் மேன்மை பெறச் செய்யும். ஆன்மீகவாதிகள் வரவேற்பும் பாராட்டும் பெறுவார்கள். மக்கள் நலம் சீராக இருக்கும். உடன் பிறந்தவர்களில் அளவான நன்மைகள் கிட்டும்.



ரிஷப ராசிக்காரரான நடிகர் சார்லிக்கு இழுத்தடித்துக் கொண்டிருந்த பிரச்னைகள் இப்போது முடியுமாம்.

## அக்னி சர்மா பக்கம்

## ஜூன் 12 முதல் 18 வரை

# "பயமெல்லாம் போச்சு!"

## - போல்டு பாட்டிகள்!

அன்புள்ள ஆசிரியர் அவர்களுக்கு...

சென்னை நங்கநல்லூரில் பிராமண முதியவர்களுக் கென்றே 'ஸ்ரீ அகோபிலம் முதியோர் இல்லம்' என்ற பெயரில் பிரத்தியேகமாய்ச் செயல்படுவதாக, பத்திரிகை விளம்பரம் மூலம் அறிந்தேன். தற்போது நான் தங்கியிருக்கும் இல்லத்தில் லாபநோக்கமே பிரதானம். இதனால் இங்கே யிருந்த பலரும் வேறு இல்லங் களுக்குப் போய்விட்டார்கள். நானும் இங்கிருந்து வேறு பரிவும், பராமரிப்பும் நிறைந்த இல்லமொன்றுக்குச் செல்ல விரும்புகிறேன். எனவே மேற்கண்ட முதியோர் இல்லம் குறித்து விசாரணை செய்து, எனக்கு எழுதுவீர்களா?

இப்படிக்கு
உங்கள் முதிய வாசகி.

இப்படி வந்தக் கடிதத்தை அலட்சியப்படுத்த மன மில்லை.

எங்கும் எதிலும் வணிக நோக்கம் என்றாகிவிட்ட நிலையில், நமது வாசகி குறிப்பிட்ட முதியோர் இல்லம் குறித்த நிஜமான தகவல்களை எப்படித் திரட்டுவது? குழம்பிக் கொண்டிருந்தபோது நம் நினைவில் வந்து மோதியவர் - சாவித்ரி வைத்தி!

மன்டேசாரிடி ஊளப் ஆதரவோடு சென்னை யில் முதன்முதலாக விஷ்ராந்தி முதியோர் இல்லத் தைத் தொடங்கியவர். முதியோர் பாதுகாப்பு குறித்து கடந்த பதினைந்து ஆண்டுகளாக விழிப்புணர்வு ஏற்படுத்தி வரும் விஷ்ராந்தி இல்லத்தின் தலைவி. இவரையே அழைத்துக் கொண்டு புறப் பட்டோம்.

பழவந்தாங்கல் ரயில் நிலை யத்திலிருந்து, பாதாள சாக் கடைக்காக பெயர்த்துப் போய் விட்ட சின்ன சின்னத் தெருக்கள் வழியே ஒரு பர்லாங் தூரம். நடந்தால் தில்லை கங்கா நகர். அங்கே ராஜராஜேஸ் வரி கோயிலை ஒட் டிய, இருபத்து ஐந் தாவது தெரு





• சாவித்ரி வைத்தி

தொலைவில் ஸ்ரீ அகோபிலம் முதி யோர் இல்லம்! இரண்டு தளங் களைக் கொண்ட ஒரு சிறு அடுக்குமாடி குடியிருப்பு, முதி யோர் இல்லமாக மாறியிருந்தது. முன்னறிவிப்பு எதுவுமின்றி நாம் போய் நின்றதும் "வாங்க! யாரைப் பார்க்கணும்" என்று வரவேற்றார் இல்லத்தை நடத்திவரும் சந்திரா அரங்கநாதன்.

"உங்கள் இல்லத்தைப் பார்த்துப் போகலாமென்று, பத்திரிகை யிலிருந்து வருகிறோம்" என்றதும், அவரிடம் பதற்றம் எதுவுமில்லை. அறைக்கு இருவர் வீதம் இரு தம்பதிகள் உட்பட, மொத்தம் இருபது தாத்தாக்கள், பாட்டிகள் தங்கியிருக்கும் இந்த இல்லத்தின் முதல் தளத்திலிருந்த ஹாலில் ஒரு தொலைக்காட்சிப் பெட்டி. பைபர் நாற்காலிகளில் அறை வட்டமாய் அமர்ந்து 'அகல் விளக்குகள்' தொடரை சன் டி.வி.யில் ரசித்துக் கொண்டிருக் கிறார்கள் சில மாமிகள்.

எங்கும், எதிலும் தூய்மையாக பளிச்சென்று இருக்கிறது இல்லம். புதிய முகங்களாய் நாம் ஹாலுக் குள் நுழைந்ததும் கொஞ்சம்


• ஸ்ரீனிவாசன்


• சந்திரா அரங்கநாதன்



இறுக்கமாய்ப் பார்க்கிறார்கள். "எப்படி இருக்கீங்க?" என்று பேச்சுக் கொடுக்கிறார் சாவித்ரி வைத்தி. "ஓ. ரொம்ப நன்னா இருக் கோம்" என்று பேச ஆரம்பிக் கிறார் பிரகதாம்பாள். திருநெல் வேலியிலிருந்து இங்கே வந்தவர் என்பதால் இவரை எல்லோரும் 'திருநெல்வேலி பாட்டி' என்றே கூப்பிடுகிறார்கள். தவிர எல்லோரி டமும் சகஜமாகப் பேசுவது, இச் சனுக்குக் காய்கறி நறுக்கித் தரு வது என்று தன்னைச் சந்தோ ஷமாக வைத்துக் கொள்பவர் என்கிறார் நிர்வாகி சந்திரா.

"எனக்குக் குழந்தைகள் கிடை யாது. திருநெல்வேலியிலே பெரிய வீடு. தனி மரமா ஆனப்புறம் வெடுக்கு வெடுக்குன்னு அத்தனைப் பெரிய வீட்டிலே இருக்க பயமா இருந்தது. இங்கே இருந்த சொந்தக் காரங்க உதவியோட நானே தேடிப்பிடிச்சு இங்கே வந்துட் டேன்... நல்லா கவனிச்சுக்கறாங்க" என்கிறார்.

**தா**ளாத முதுமை, வெளிநாடு அல்லது வெளி மாநிலங்களுக்கு



"பாட்டுக் கத்துக்கப் போனியே, ஏன் திரும்பி வந்துட்டே..."

"பாட்டு வாத்தியார் நல்லா சாதகம் பண்ணணும்னு சொன்னதும், 'சாதகம், சோஸியம்... இதிலெல்லாம் எனக்கு நம்பிக்கை இல்லே சார்'னு சொன்னேன்; உனக்குப் பாட்டு வராதுன்னு சொல்லி திருப்பி அனுப்பிட்டார்!"

- சீர்காழி வி. ரேவதி

●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●

வேலை நிமித்தம் பிள்ளைகள் குடி பெயர்ந்து விடுவதால் தனித்துவிடப்படுதல், மகனிடமோ, மகளிடமோ இருக்கக்கூடாது என்று பிடிவாதமாக இருத்தல், இன்னும் விடுமுறையில் வெளியூர் செல்லும்போது, பாதுகாப்புக்காகப் பெற்றோர்களை விட்டு செல்பவர்கள் என்று இங்கே ஒவ்வொருவருக்கும் ஒரு காரணம்.

ரயில்வேயிலிருந்து ஓய்வுபெற்ற சீனிவாசனுக்கு மயிலையில் மகன் இருந்தாலும், தாம் தனித்து வாழ்வதையே விரும்பி, ஓய்வூதியப் பணத்தில் இங்கே வசிக்கிறேன் என்கிறார். பெரும்பாலானவர்கள் "மன அமைதிக்காகவே வந்தோம், வேறு எதற்காகவும் இல்லை" என்கிறார்கள்.

"பிராமண முதியவர்களுக்காகத் தனியே இல்லம் தொடங்க வேண்டும் என்று ஏன் நினைத்தீர்கள்?" என்ற சாவித்ரி வைத்தியின் கேள்விக்கு நிர்வாகி சந்திராவின் பதில் யதார்த்தமாக இருந்தது.

"தொடக்கத்தில் குழந்தைகள் காப்பகம் தொடங்க திட்டமிட்டிருந்தேன். எனது அப்பாவும், அம்மாவும் தனியாக இருக்கிறார்கள். என்னோடு வசிக்க அழைத்தும் அவர்கள் வரவில்லை. அது உறுத்திக் கொண்டேயிருக்க, முதிய குழந்தைகளுக்காக ஏன் இல்லம் தொடங்கக் கூடாது? என்று தோன்றவே, அனுபவமோ, பயிற்சியோ இல்லாமல் துணிச்சலாக இறங்கிவிட்டேன். இரண்டாண்டுகள் ஓடியேவிட்டன. இப்போது வளசரவாக்கத்திலும் ஸ்ரீதேசிகன் முதியோர் இல்லம் தொடங்கியிருக்கிறேன்."

இதுபோன்ற இல்லம் நடத்த முறையாகப் பதிவுபெற வேண்டும் என்பது கூடத் தெரியாமல் தொடங்கி நடத்தி வருகிறார் இவர்.

"பிராமண முதியவர்களுக்கென்று தனியே முதியோர் இல்லம் தொடங்கியதில் எந்தத் தவறும் இல்லை. காரணம் முதியோர் பிடிவாதம் மிக்கவர்கள். குடுமி வைத்துக் கொள்ளவும், மடி கட்டிக் கொள்ளவும் நினைப்பவர்களை, நீ அப்படிச் செய்யாதே. இப்படிச் செய்யாதே என்று கட்டாயப்படுத்துவது தவறு. அந்த வகையில் இப்படியொரு பிரத்தியேக இல்லம் தொடங்கியதை வரவேற்கிறேன்" என்ற சாவித்ரி வைத்தி, முதியோர் இல்லம் நடத்தும் ஒருவர், பின்பற்ற வேண்டிய சட்ட விதிமுறைகள்பற்றி இல்ல நிர்வாகிக்கு எடுத்துச் சொன்னார்.

"குறிப்பாக தனியே வரும் முதியவர்கள் நகைகள் அணிந்திருப்பார்கள். அவர்களைப் பார்க்க வரும் உறவினர்களிடம் நமக்குத் தெரியாமலேயே கழற்றிக் கொடுத்திருப்பார்கள். அவர்கள் திடீரென இறந்துவிட்டால் இதற்கெல்லாம் பதில் சொல்ல வேண்டும்... எனவே, விதிமுறைகளைப் பின்பற்றினால் பிரச்னையே இல்லை."

எதிர்காலத்தில் எல்லா வழிமுறைகளையும் பின்பற்றுவதாக உறுதி அளித்தார் சந்திரா.

"போட்டி மனப்பான்மையோடு இந்த இல்லத்தை இவர் தொடங்கவில்லை என்று தெரிகிறது. அப்படிச் செய்யும் பட்சத்தில் சேவை மனப்பான்மை என்பது அடிபட்டுப் போய்விடும். முதியோர் இல்லம் தொடங்க நினைப்பவர்கள் இதைத் தொழில் என்று கருதி ஈடுபடக்கூடாது" என்கிறார் விஷ்ராந்தியின் தலைவி சாவித்ரி வைத்தி.

"இப்போது உணவு, உறைவிடம், மருத்துவ சிகிச்சை உட்பட மாதத்திற்கு இரண்டாயிரத்து ஐந்நூறு ரூபாயை ஒருவருக்குக் கட்டணமாக வசூலிக்கிறோம். இல்லம் விரிவடையும்போது இந்தக் கட்டணத்தைக் கணிசமாகக் குறைக்க வேண்டும் என்பது தான் திட்டம்" என்ற சந்திராவிடமும், அங்கிருந்த முதியோர்களிடமும் விடை பெற்றோம். புறப்படும்முன் திருநெல்வேலிப்பாட்டி ஒன்று சொன்னார். "ஓல்டு ஏஜ் ஹோம் என்றால் ரொம்ப பயம் இருந்தது. இங்கே வந்ததும் அந்தப் பயத்திற்கு அவசியமில்லாமல் போய்விட்டது."

— ஜெயந்த்

படங்கள் : ராஜன்

# சாட்சி சொன்ன கூட்டம்!

சமானிப்புத் திலகங்களாக மாறி காவல் துறையினரும் தனியார் செக்யூரிட்டி ஆட்களும் பரபரக்கின்றனர். டிசம்பர் சங்கீத சீசன் கூட இல்லையே. மியூசிக் அகடமியில் ஏதேனும் சினிமா நிகழ்ச்சி நடக்கிறதோ...? அல்லது அரசியல் அக் கப்போர் சமாசாரம்..?

இதெல்லாம் எதுவும் இல்லை. தொழில் துறை சாதனைக்கு விஸ்வேஸ்வரய்யா விருது வழங்கும் விழா அனைத்திந்திய உற்பத்தியாளர் அமைப்பின் தமிழக பிரிவு ஆண்டு தோறும் அளிக்கும் விருது.

விருதைப் பெறுவது மைசூர்பா புகழ் ஸ்ரீ கிருஷ்ணா ஸ்வீட்ஸ் நிறுவனம்! கூட்டத்துக்கான காரணமும் புரிந்து போகிறது. இதுநாள் வரை டி.வி.எஸ், கெம்ப்லாஸ்ட், அசோக் லேலண்ட், சுந்தரம் ஃபாஸனர்ஸ், எம்.ஆர்.எஃப், போன்ற தனியார் கனரக தொழில் நிறுவனங்களும் பி.எச்.இ.எல், நெய்வேலி லிக்னைட் கார்பரேஷன் போன்ற அரசுத் துறை தொழில் நிறுவனங்களும் வாங்கிய விருது--

இந்தப் பெருமை மிகு விருதை இவ்வாண்டு திடீரென்று உணவுப் பொருள் தயாரிக்கும் நிறுவனத்துக்கு தருவானேன்...?

'அவர்களையும் தொழில் துறையினராக அங்கீகரிக்கும் முகமாகத்தான்' என்று விழா அமைப்பாளர்கள் சுருக்கமாக விளக்க, தலைமை தாங்கிய தமிழக ஆளுனரின் உரை விரிவுபடுத்தியது:

"மிக அதிக அளவில் விவசாய விளை பொருட்களையும் பழங்களையும் உற்பத்தி செய்யும் நாடு இந்தியாதான். பால், காய்கறிகள் உற்பத்தியிலோ நமக்கு உலகிலேயே இரண்டாவது இடம். ஆனால் நாம், உற்பத்தி செய்யும் உணவுப் பொருட்களில் நாற்பது சதவிகிதம் வீணாகிறது. இதற்குக் காரணம், விளைபொருட்களை நீண்ட நாட்கள் நீடிக்கவல்ல உணவுப் பண்டங்களாக மாற்ற நமக்குத் தெரியவில்லை; அதற்கான வசதியும் செய்யப்படவில்லை.

"ஸ்ரீ கிருஷ்ணா ஸ்வீட்ஸ"க்கு விஸ்வேஸ்வரய்யா விருது அளித்ததன் மூலம் உணவுப் பொருள் உற்பத்தித் துறையின்பால் அரசின் கவனத்தையும் தொழில்துறை சிந்தனையாளர்களின் கவனத்தையும் ஈர்த்துள்ளனர் அமைப்பாளர்கள். கிராமம் சார்ந்த, விவசாயம் சார்ந்த தொழில்களின் பெருக்கமே நமது நாட்டின் வறுமைக்கும் வேலை வாய்ப்பின்மைக்கும் நல்ல தீர்வு...'' என்றார் ஆளுனர் ராம் மோகன்ராவ்.

விஸ்வேஸ்வரய்யா தொழில்துறை வல்லுனர் நூதனமாய்ச் சிந்தித்தவர். விசாகபட்டணம் துறைமுகத்தின் முகதுவாரத்தில் மணல் தட்டி மேடிட்டுக் கொள்ளும் பிரச்னை அடிக்கடி எழுந்தது. பழைய, உபயோகமற்ற கப்பல் ஒன்றை முகதுவாரத்தில் அமிழ்த்தி வைத்து, மணல் துறைமுகத்தின் உள்ளே வந்து மேடிடுவதைத் தடுக்கலாம் என்று யோசனை தந்தவர்.




ஸ்ரீ கிருஷ்ணா நிறுவனத்தை வாழ்த்த வந்த வாணவராயர், இந்தத் தகவலைச் சொன்ன தோடல்லாமல் அந்நிறுவன ஸ்தாபகர் 1948ல் கையெழுத்திட்ட ஒப்பந்தம் பற்றி கூறினார்:

மகாதேவய்யர் ஒப்பந்தம் செய்துகொண்டது வங்கியுடனோ முதலீட்டாளருடனோ அல்ல.. சாக்ஷாத் குருவாயூரப்பனுடன் மானசிக ஒப்பந்தம் போட்டுக் கொண்டார்.

தரத்துக்கு எப்போதும் முதலிடம் தர வேண்டும்; வாடிக்கையாளரின் தேவை, திருப்தியை மதிக்க வேண்டும்; சம்பாதிக்கிற பணத்தில் சமுதாயத்துக்கு உபயோகமாக ஏதேனும் செய்ய வேண்டும்.

அப்பா போட்ட ஒப்பந்தத்தை இன்று மகன்கள் கிருஷ்ணாவும் முரளியும் இம்மி பிசகாமல் கடைபிடித்து வருகின்றனர் என்பதற்கு வந்திருந்த கூட்டமும் அதன் மகிழ்ச்சியும் சாட்சி!

- எஸ். சந்திரமௌலி

படம்: யோகா

# வேண்டியதெல்லாம் காதுதான்!

"என்ன மாதிரி ஒரு துரதிர்ஷ்டக் கட்டையை எந்த விறகு டிப்போவில் தேடினாலும் கிடைக்காது. என்னைப் பத்திக் கொஞ்சம் எழுது" என்று போன வாரமே மனு கொடுத்துவிட்ட பூக்காரி லட்சுமிதான் ஏவான்களின் இந்த வாரப் பிரதிநிதி.

துரும்பைத் தூணாக்கி, தூணைத் துப்பாக்கியாக்கி, அதை பின்லேடனிடமே டபுள் ரேட்டுக்கு விற்றுவிடும் கெட்டிக்கார எச்சுமிக்கு, (லட்சுமிதான்.. செல்லமாக எச்!) சோதாப்பயல் கன்னியப்பன் புருஷனாக வந்து வாய்த்ததில்தான் வாழ்க்கையின் சுவாரஸ்யமே! கன்னியப்பனுக்கு நிரந்தரமான வேலை எதுவும் கிடையாது. பெயின்டர், லோடர்னு எப்பவாவது நாலு காசு சம்பாதிப்பான். மற்றப்படி கட்சி ஆபீஸே கதி!

மத்தியான சாப்பாட்டுக்கு, வீட்டுக்கு வந்திருக்கும் கன்னியப்பனுடன் நாமும் நுழைந்தால் ஏதாவது மேட்டர் தேறுமே.



தலையில் கட்டியிருந்த துண்டை உதறி, முகத்தைத் துடைத்துக்கொண்டு சாப்பிட உட்கார்ந்தான் கன்னியப்பன்.

சுடச்சுட சோறு போட்டு, சிவப்பாக மசாலாவில் மிதந்த கத்திரிக்காய் மொச்சைக் கொட்டை காரக் குழம்பை தட்டில் ஊற்றி நீட்டினாள் எச்சுமி.

உருட்டி, புரட்டி இரண்டு கவளம் உள்ளே போயிருக்கும்.

"சீமை ஓடு லோடு வந்துடுச்சாமா; கேட்டியா?" என்று ஆரம்பித்தாள்.

**அனுராதா சேகர்**

வாயில் அடைத்துக்கொண்ட சோறுடன் 'இல்லை' என தலையாட்டினான் கன்னியப்பன்.

"தெனைக்கும் சொல்றேன். மழைக் காலம் ஆரம்பிக்கிறதுக்குள்ள, ஓடு போட்டுடணும்னு. இரண்டு தூறல் தூறினா, வூடே நாஸ்தியாப்

பூடுது."

அடுத்த கவளங்கள் உள்ளே போயின.

"ராகா அப்பார்ட்மென்ட்டு வாசல்லே குந்துனா ஒன் அவுருலே கூடையே காலியாப் பூடுது. அம்புட்டு ராசியான இடம். அந்த வாட்ச்மேன் சோமாரி. என்னை விரட்டிக் இனே கிறான். சரியான சாவுகிராக்கி." விரல் கோத்து நெறித்துச் சாபமிட்டாள்.

"சர்தான் வுடும்மே." என்ற ஒரே ஒரு முனகலோடு தன் கடமையை முடித்துக் கொண்டான் கன்னியப்பன்.

"இன்னிக்கு லாரிக்காரன் டிமிக்கிக் குடுத்துட்டான். மொத்த சனமும் போர் பம்புலே போயி அடிச்சிக்கினு வந்தாங்க. எனக்கு ரெண்டு நானா அடி. வவுத்துலே இன்னாவோ பிஸ்மடக்கு. சுருக்கருக்குனு நோவுது. வலியிலேயே போயி ஒரு கொடம் தூக்கியாந்தேன்" சொல்லிக்கொண்டே குடிக்க வாகாய், தண்ணீர் சொம்பை நகர்த்தி வைத்தாள்.

அவன் சாப்பிட்டு எழும்போது, "தா.. அடுத்த வாரம் என் தங்கச்சி மவ சடங்கு வருது. அரை சவரன்லே மோதிரம், பட்டுச் சீல, அஞ்சுத் தட்டு வரிசையாவது வைச்சாத்தான் கெவுரவம். இன்னா செய்யப் போறனோ." அலுத்துக்கொண்டாள்.

அவன் எதையுமே காதில் வாங்காமல், பீடியைப் பற்ற வைத்துக்கொண்டு, ஒரு இழு இழுக்கவே...

"இன்னா... நா கூப்பாடு போட்டு இனே கிரேன். நீ ஸ்டைலா பீடி வலிக்கிறியே!.."

"சும்மா கூவாதே மே! இப்போ இன்னா செய்யச் சொல்றே."

"ஆங்! சொல்றாங்க. சட்டியும் பானையும்."

புருஷங்காரன்கிட்ட இரண்டு வார்த்தை சகஜமாகப் பேச நினைக்கிறாள் எச்சுமி. ஆனால் அது எப்பவும் சண்டையிலேயே முடிவது ஏன்?

**க**ன்னியப்பனைப் பொறுத்த வரை, எச்சுமி சாதா லட்சுமி அல்ல. சாட்சாத் மகாலக்ஷ்மியேதான். ஓடாய் உழைத்து, சீட்டு நாட்டு போட்டு, ஆட்டைத் தூக்கி மாட்டுலே போட்டு, மாட்டைத் தூக்கி மச்சுலே போட்டு... இரண்டு மகள்களையும் கட்டிக் கொடுத்துவிட்டாள். கடைசி பையன் எட்டாவது படிக்கிறான். ரேஷன் கார்டில் 'குடும்பத் தலைவர் எம்.கன்னியப்பன்' என்றிருப்பதோடு அவனது வேலை ஓவர்.

ஆனால் கன்னியப்பன் தலை

**தி**ருமண வாழ்க்கை என்பது ஒரு பட்டாசுக் கடை. முதல் இரண்டு ஆண்டில் மனைவி பூமத்தாப்பாக இருக்கிறாள். கணவன் அதிர் வெடியாக இருக்கிறான். குழந்தைகள் என்ற சீனிச் சரத்தைக் கொளுத்தியதும் மனைவி அதிர்வேட்டாகிறாள். கணவன் புஸ்வாணம் ஆகி விடுகிறான்! உதவி: கே. சுதர்ஷனுக்கு

**கல்கி**
**VBC Jewellery**
**இணைந்து வழங்கும்**

## புன்னகைப் போட்டி - 15 முடிவு

**காலி கஜானாவிலிருந்து இழப்பீடு தருவது எப்படி? என்று யோசனை கேட்டிருந்தோம். வந்து குவிந்தவற்றில், தலா நான்கு கிராம் தங்கப் பரிசு பெறும் யோசனைகள்:**

**"வி.ஆர்.எஸ்.சில் செல்லும் அரசு ஊழியர்களுக்கு வழங்கப்படும் தொகையை இரண்டு தவணைகளில் அளிக்கலாம்.**

**முதல் கட்டத் தவணைத் தொகை 'வீரப்பன் பிடிபட்ட பிறகும்', இரண்டாம் கட்டத் தவணைத் தொகை 'காவிரி நதி நீர் பிரச்னை தீர்ந்த பிறகும்' வழங்கப்படும் என அறிவித்து விட வேண்டும்."**

**ஆர். ராஜலட்சுமி,**
**9. ராஜாநகர்,**
**கோலியனூர் போஸ்ட்,**
**விழுப்புரம் 605103**

**கோயில்களில் அன்னதானம் வழங்க, வசூல் செய்வதைப் போல், 'கஜானா தானம்' எனும் திட்டத்தை அமுல்படுத்தி வசூல் வேட்டை நடத்தலாம். கஜானாவும் நிறையும். - யாருடையது என்பது வேறு விஷயம்!**

**வி. சரளா,**
**2/1202, ராஜராஜேஸ்வரி நகர்**
**3ஆவது தெரு, மடிப்பாக்கம்,**
**சென்னை 600 091.**

கண்டால் எச்சுமி விடமாட்டாள். 'பொண்ணுக்கு ஆடி சீர் செய்யணும்', 'கோழி சீக்கா இருக்குது' என்று ஏதாவது புலம்ப ஆரம்பிப்பாள்.

'எச்சுமி, பொம்பளைக்குப் பொம்பளை. ஆம்பிளைக்கு ஆம்பளே! ஒண்டியா நின்னு தெரியமா சமாளிச்சுடுவாளே. அவள் வீட்டுக் கவலையை எல்லாம் தன்கிட்டே எதுக்காகச் சொல்றா... நம்மளாலே ஒத்த பைசா ஒதவ முடியாதே' என்று கன்னியப்பன் குழம்பி நிற்பான்.

ஆதாமுக்கும் ஏகப்பட்ட பிரச்னையிருக்கு. ஏவாளுக்கும் நிறைய பிரச்னையிருக்கு. ஆனால் ஆண்கள் பிரச்னைகளை மனசுக்குள்ளேயே போட்டு புதைத்துக்கொள்வார்கள். ஆனால் பெண்களோ அதை யாரிடமாவது கொட்டிவிடத் துடிப்பார்கள். தப்பித் தவறி எந்த ஆணாவது பிரச்னையை வெளியே சொன்னால், அவன் கைமாத்து போன்ற ஏதோ உதவி கேட்கிறான் என்று பொருள். ஆனால் பெண்கள் பிரச்னைகளைச் சொன்னால் அதற்கு எந்த உள் அர்த்தமும் இருக்காது. தன்னுடைய மனசுக்குள்ளே உறுத்திக் கொண்டிருக்கும் விஷயத்தை வெளியே சொல்வதால் அவர்களுக்கு மனரீதியாக ஆறுதல் கிடைக்கிறது. அம்புடுதேங்!.

எச்சுமி - கன்னியப்பன் விஷயத்திலும் பாருங்களேன். புருஷனிடம் எச்சுமி பேசப் பிரியப்படுகிறாள். ஆனால் அவருடைய லெவலுக்கு, அவளால் இப்படிப்பட்ட சங்கதிகளைத் தான் பேச முடியும் என்பதால், அது பிரச்னை லிஸ்டாகவே போய்விட்டது.

ஒரு வீட்டில் ஒரு பெண்ணுக்கு இரண்டு அண்ணன்கள். அந்தப் பெண் தன்னுடைய புகுந்த வீட்டுப் பிரச்னைகளை எல்லாம் அண்ணன்களிடம் சொல்லும் போது, மூத்த அண்ணன், "அப்படித்தான் இருக்கும். அட்ஜெஸ்ட் பண்ணிக்கிட்டுப் போ" என்று சொல்லிவிட்டு பாதியிலேயே எழுந்து போய்விடுவார். ஆனால் இரண்டாவது அண்ணாவோ தங்கச்சியின் பேச்சை முழுவதுமாக கேட்டுவிட்டு, "நீதாம்மா பொறுத்துப் போகணும்"னு சொல்வார். ஒரே அட்வைஸ்தான். ஆனால் முதலாமவர் பிரச்னை என்ன என்றுகூட தெரிந்து கொள்ளாமல் அட்வைஸ் செய்துவிட்டார். இரண்டாவது அண்ணனோ, அவளுடைய மனத்தாங்கலை முழுவதுமாகப் பகிர்ந்து கொண்ட பிறகு, ஆலோசனை சொன்னார்.

அந்தத் தங்கச்சிக்கு எந்த அண்ணன் பாசமலர் சிவாஜியாகத் தெரிந்திருப்பார்? இரண்டாமவர்தானே!

ஆகவே, ஆதாம்கள்... பிரச்னை சொல்லத் தொடங்குவது உங்கள் மனைவியாகவே இருக்கணும் என்பதல்ல. அம்மா, சகோதரி, ஆபிஸ் ஊழியை... இப்படி யாராவது பிரச்னைகள் பட்டியல் போட்டால், உங்களுடன் மனச்சுமையைப் பகிர்ந்து கொள்ள விரும்புகிறார்கள் எனப் புரிந்துகொண்டு, உடனே காதுகளை கூர் தீட்டி, அகர்கர் காதுகள் போல வெளியே நீட்டிக் கொள்ளுங்கள். உண்மையான மனசுடன் அவர்களுடைய பிரச்னையை உடனன்பாடு கேட்டுக் கொள்ளுங்கள். இதற்கு மேல் என்னத்தை எதிர்பார்த்துடப் போறாங்க...

அடுத்த வாரம்... சுற்றுலா பொருட்காட்சிக்குப் போகணும். தயாரா இருங்க. ○

# ஸ்டாலின் பதவி:

# பந்தை தள்ளி விட்ட கலைஞர்!





"ஸ்டாலின் எம்.எல்.ஏ. பதவியையும் ராஜினாமா செய்ய மாட்டார்; மேயர் பதவியையும் ராஜினாமா செய்ய மாட்டார். எதை வேண்டுமானாலும் அரசே பிடுங்கிக் கொள்ளட்டும்; எங்களுக்குச் சந்தோஷம்தான்'' என்று கருத்து தெரிவித்திருக்கிறார் கருணாநிதி.

''ஸ்டாலின் முடிவெடுக்க இன்னும் பதினைந்து நாட்கள் தான் இருக்கின்றன; பத்து நாட்கள்தான் இருக்கின்றன என்று கெடு வைத்துக் கொண்டிருந்த பத்திரிகைகளுக்கு இனி பிளாஸ்த்திரி போட்டாகி விட்டது. ஜெயலலிதா கையில் பந்தைப் போட்டு விட்டார் கலைஞர். பதவி பிடுங்கப்பட்டதிலிருந்து ஆறு மாதத்துக்குள் தேர்தல் நடத்த வேண்டும்.

''இந்தச் சட்டம் வெளிப்படுத்தும் கொள்கை, நல்ல வழிகாட்டுதலாக இருந்தாலும், ஒரு குறிப்பிட்ட நபரைப் பழிவாங்குவதற்காக, அதை முன் தேதியிட்டு அமுல்படுத்துவது என்பது ஜனநாயக விரோதம்'' என்பதை எல்லா கட்சிகளும் சொல்லி விட்டன.

''மாநில அரசுக்கு இதுபோன்ற சட்டம் போடுவதற்கு எந்த உரிமையும் கிடையாது'' என்று அரசியல் சட்ட வழக்கறிஞர்கள் எடுத்துக்காட்டிய பிறகும், சட்டத்தை எதிர்த்து நீதிமன்றத்துக்குப் போகாமல் அரசியல் ஆட்டம் ஆடத் துவங்கியிருக்கிறது தி.மு.க..

இந்தச் சட்டத்தின் அடிப்படையில் ஓர் உத்தரவைப் போட்டு ஒரு பதவியை (அது மேயராகத்தான் இருக்க முடியும்) பறித்துக் கொண்டால், அப்போது கிடைக்கும் அனுதாபம் மூலமாக வரும் அரசியல் ஆதாயத்தைக் கணக்குப் போட்டுப் பார்த்திருக்கிறது தி.மு.க. ''கொஞ்சமும் அதிகாரமில்லாத மேயர் பதவி எதற்கு?'' என்று அதை ராஜினாமா செய்யும் மனநிலையில்தான் ஸ்டாலின் இருந்தார் என்பதும் குறிப்பிடத்தக்கது.

இப்போது, மேயர் பொறுப்பை அரசு பறித்துக் கொண்ட பின் நீதிமன்ற கதவைத் தட்டலாம் என்று முடிவு செய்திருக்கிறது தி.மு.க. அதைக் காரணமாக வைத்தே தேர்தலை தள்ளிப் போடலாம் அரசு.

''இதுபோன்ற ஒரு சட்டத் திருத்தத்தைக் கொண்டு வர மாநில அரசுக்கு உரிமையில்லை என்று நன்கு தெரிந்த பிறகும் கவர்னர் எந்த ஆட்சேபணையும் தெரிவிக்காமல் கையெழுத்துப் போட்டுள்ளாரே?'' என்று வழக்கறிஞர் விஜயனிடம் கேட்டதற்கு, ''கவர்னர் ஒருமுறை அரசுக்கே சட்டத்தைத் திருப்பி அனுப்ப முடியும்; ஆனால் மீண்டும் அரசு அனுப்பினால் கையெழுத்துப் போட்டே தீர வேண்டும். கவர்னர் கையெழுத்துப் போட்டதை விமர்சிக்கத் தேவையில்லை; தீர்வு நீதிமன்றத்தின் கையில்தான் இருக்கிறது'' என்றார் அவர்.

இதற்கிடையில் மாநகராட்சியின் நிர்வாகம், நகரின் சாக்கடைகளை விட மோசமாகப் போய்க் கொண்டிருக்கிறது. ''நானே ராஜா; நானே அமைச்சர்'' என்று அதிகாரிகளும், ஆளும் கட்சி கவுன்சிலர்களும் அகப்பட்டதைச் சுருட்டிக் கொண்டிருக்கிறார்கள். மேயருக்கும் துணை மேயருக்கும் இடையில் அவதிப்பட வேண்டாம் என்று விடுப்பில் போன ஆணையாளர் இன்னமும் திரும்பவில்லை. கடுமையான நிதி நெருக்கடி மாநகராட்சியை ஆட்டிப்படைக்க, வரும் மாதங்களில் ஊழியர்களுக்குச் சம்பளம் கொடுக்கவே திணறும் நிலை வரும் என்கிறார்கள்.

— கௌசி

# ஆலய அதிகாரிகளாகப் பெண்கள்!

ஜெயலலிதா ஆட்சியில், ஆலய நிர்வாக அதிகாரிகளாகப் பெண்களை நியமித்திருப்பது ஆத்திகர்கள் மத்தியில் சூட்டைக் கிளப்பியுள்ளது.

சென்னையில் உள்ள கபாலீஸ்வரர் கோயில், கோவை மருதமலை, மதுரை கள்ளழகர் கோயில் ஆகியவற்றுக்கு நிர்வாக அதிகாரிகளாக துணைக் கமிஷனர் அந்தஸ்தில் பெண்கள் நியமிக்கப்பட்டிருக்கிறார்கள். சட்டப் படிப்பில் பட்டமும் மூன்று வருடம் வழக்கறிஞர் அனுபவமும் பெற்றிருக்கும் இவர்கள், தமிழக அரசின் சர்வீஸ் கமிஷன் குருப் ஒன் பரீட்சை எழுதி தேர்ச்சி பெற்றவர்கள். நேரிடையாக கமிஷனராகப் பணிக்கு வந்த இவர்கள், அலுவலகங்களில் பணி புரிந்து வந்தார்கள்.

"எங்களுக்கும் கோயில்களில் பணி புரிய வாய்ப்புக் கொடுங்கள்" என்று நெடுநாட்களாக இவர்கள் நடத்திய போராட்டம் இப்போது பலன் கொடுத்திருக்கிறது. இது சம்பந்தமாக நீதிமன்றத்தில் வழக்கும் தொடரப்பட்டு நடந்து வந்தது. ஆனால் தமிழக அரசு பெண்களின் கோரிக்கையில் உள்ள நியாயத்தைப் புரிந்து கொண்டு அவர்களுக்குப் பதவி உயர்வும் கொடுத்து, ஆலய நிர்வாக அதிகாரிகளாக நியமித்து விட்டது. இதில் ஆத்திகர்களுக்கு என்ன பிரச்னை?

"கோயில் நிர்வாக அதிகாரியாக வேலை பார்ப்பது என்பது ஏதோ அலுவலகத்துக்குப் போய்விட்டு வருவதைப் போன்றதோ அல்லது தொழிற்சாலையில் பணி புரிவதைப் போன்றதோ அல்ல! கோயில் என்பது மக்களின் நம்பிக்கைகளுக்குச் சாட்சியாக நிற்கும் வழிபாட்டுத்தலம். இங்கு பல நூற்றாண்டுகளாக, சில பழக்க வழக்கங்கள் கடைபிடிக்கப்பட்டு வருகின்றன. பெண்களின் உடலியல் அமைப்பு காரணமாக இயற்கையாகவே அவர்களுக்கு ஏற்படும் மாதாந்திர சுழற்சியின் போது தீட்டாக கருதப்பட்டு விலக்கி வைக்கப்படுகிறார்கள். இதுபோன்ற நிலையில் கோயில்களுக்குள் அவர்களுக்கு அனுமதி இல்லை. இப்படிச் சொல்வதைவிட பெண்களே அந்தக் கால கட்டத்தில் கோயிலுக்கு வரமாட்டார்கள் என்று சொல்வது தான் சரியாக இருக்கும். எனவே இப்படிப்பட்டச் சூழலில் கோயில் நிர்வாக அதிகாரிகளாகப் பணிபுரியும் பெண்களின் நிலையை எண்ணிப் பாருங்கள். அவர்களுக்கு வேலையே



கோயிலுக்குள்தான். ஸேவார்த்திகளுக்கு எந்தப் பிரச்னையும் இல்லாமல் பார்த்துக் கொள்வது, அன்றாடம் நகைகளைச் சரி பார்ப்பது, உண்டியல் வரும்படிகளை எண்ணுவது போன்ற கடமைகள் அவர்களுக்கு உண்டு. கோயில்களுக்கு வி.ஐ.பிக்கள் விஸிட் செய்யும்போது அவர்களுக்குச் சிறப்பான முறையில் தரிசனம் ஏற்பாடு செய்வதும் பணிகளில் ஒன்று. இவை தவிர கோயில்களின் நிலம், சொத்து ஆகியவற்றைப் பேணிக் காப்பது, அவற்றிலிருந்து வரும் வருவாயைத் தடங்கலின்றி பெறுவது, இது சம்பந்தமாக நீதி மன்றங்களில் உள்ள வழக்குகளில் ஆஜர் ஆவது என்று வெளிப் பணிகளும் ஏராளம். எனவே கோயிலில் பணிபுரியும் பெண்கள் மாதாந்திர சுழற்சியின் போது, இந்தச் சவால்களைக் குறிப்பாக, கோயிலுக்கு உள்ளே சென்று நிறைவேற்றும் சில கடமைகளை எப்படிச் சந்திப்பார்கள்? நகைகள் சரிபார்ப்பு, உண்டியல் வசூல் போன்ற கடமைகளை இன்னொருவரிடம் பொறுப்பாக ஒப்படைக்க முடியாது. உற்சவ காலங்களில், பெண்கள் மாதாந்திர 'சிக்கலில்' மாட்டிக் கொண்டு விட்டால் பொறுப்புகளை யார் கவனித்துக் கொள்வது? இப்படிப் பல சங்கடங்கள் இருக்கின்றன. எனவேதான் நமது முன்னோர்கள் கோயிலில் நிர்வாக அதிகாரிகளாகப் பெண்களை அனுமதிக்கவில்லை" என்கிறார் காஞ்சிபுரம் வரதராஜ பெருமாள் கோயில் டிரஸ்டியான சங்கர ராமன்.

1948ம் வருடம் போடப்பட்ட அரசு ஆணை 164ன்படி இந்து வழிபாட்டுத் தலங்களுக்குள் கீழ்க்கண்டவர்களுக்கு அனுமதி இல்லை.

– இந்து மதத்தைச் சேராதவர்கள்

– இந்து மதத்தைச் சார்ந்த பெண்கள், (நமது ஏற்றுக் கொண்ட பழக்க வழக்கங்கள்படி எந்த கால கட்டத்தில் அவர்களால் கோயிலுக்குள் நுழைய முடியாத நிலை ஏற்படுகிறதோ, அந்தச் சமயத்தில் மட்டும்.)



• ராணி கிருஷ்ணன்

"எனவே இப்படிப்பட்ட நிலையில் பெண்கள் நிர்வாக அதிகாரிகளாக நியமிப்பது எப்படிச் சரியாகும்? நான் பெண்கள் முன்னேற்றத்துக்கு எதிரானவன் அல்ல. ஆனால் நாம் அனுசரிக்கும் சனாதன தர்மங்களின் அடிப்படையில் இந்தப் பணியில் பெண்களை நியமிப்பது சரியல்ல என்பதே என் வாதம்" என்கிறார் சங்கர ராமன்.

"இந்த விவகாரத்தில் ஆதீனகர்த்தர்கள் அமைதி காப்பது ஏன்? இது மக்கள் நம்பிக்கை மற்றும் கோயில்களின் பவித்ரம் ஆகியவை தொடர்பான பிரச்னை அல்லவா?" என்று கேட்கும் சங்கரராமன், "இது சம்பந்தமாக நீதி



– கிளம்புகிறது சர்ச்சை!

### மகாவீரர்

துறவு பூண முடிவு எடுத்த மகாவீரர், தமது செல்வங்களை எல்லாம் ஏழை எளிய மக்களுக்கு வாரி வழங்கினார். பின்னர் தவம் செய்ய காடு நோக்கி நடந்தார். கடைசியாக ஓடி வந்தான் ஒருவன். "ஐயா எனக்கு எதுவும் இல்லையா?" என்றான் கெஞ்சும் குரலில். வெறும் கையுடன் நின்றிருந்த மகாவீரர் இடுப்பில் இருந்த எட்டு முழ வேஷ்டியில் நாலு முழத்தைக் கிழித்துக் கொடுத்தார்.



அதைப் பெற்றுக் கொண்டு நடந்தான் வந்தவன்.

அதை ஓரிடத்தில் விற்கப் போனான். "என்னப்பா அரை வேஷ்டியைக் கொண்டு வந்துள்ளாயே, மீதி வேஷ்டியும் கொண்டு வந்தால்தான் விலை தர முடியும்" என்றான்.

மீண்டும் அந்த நபர் மகாவீரரைத் தேடி ஓடினான். ஒரு மரத்தின் கீழ் அவர் இருப்பதைப் பார்த்து விட்டான்.

ஓடோடி வந்தான். மீதி வேஷ்டியை அவர் தருவாரோ என்னவோ என்ற சந்தேகம் எழுந்தது. ஆயினும் அவர் அருகில் போனான். மகாவீரர் கண்மூடி தியானத்தில் இருந்தார். அவரது வேஷ்டி நழுவி கீழே கிடந்தது.

அதை எடுத்துக் கொண்டு ஓடினான். அவசரத்தில் கீழே கிடந்த முள் புதரில் காலை வைத்துவிட, 'அம்மா' என்று அலறினான்.

மகாவீரர் தவம் கலைந்து விழித்தார். அவனைக் கண்டதும் ஓடிப் போய், முட்களை எடுத்து விட்டு "அட... அரை வேஷ்டியைத் துறக்க மனமில்லாமல் வந்ததன் விளைவு ஒரு திருடனை உருவாக்கும்படி ஆகி விட்டதே" என்று வருந்தினார்.

துறப்பதை முழுதாகத் துறந்து விடு. கொடுப்பதை முழுதாகக் கொடுத்துவிடு.

தொகுப்பு: சுந்தரா

மன்றத்துக்குச் செல்லவும் தயங்க மாட்டேன்" என்கிறார்.

கபாலீஸ்வரர் கோயிலில் புதிதாகப் பொறுப்பேற்றுக் கொண்டிருக்கும் டெபுடி கமிஷனர் திருமகளைச் சந்தித்து பெஸ்ட் ஆப் லக் சொல்லி "இப்படியெல்லாம் சொல்கிறார்களே?" என்ற போது ஒரு சிரிப்பை மட்டும் பதிலாகத் தந்தார் அவர். "அரசு விதிகளின்படி நான் பேட்டி கொடுக்கக் கூடாது" என்றார் அவர். புதிய தலைமையின் கீழ் பணியாற்றக் காத்திருக்கும் கோயில் ஊழியர்களிடம் தூண்டில் போட்டோம். "இது ஒன்றும் சமாளிக்க முடியாத பெரிய பிரச்னையல்ல. தினசரி கோயிலுக்குள் செல்ல வேண்டிய அவசியம் அதிகாரிக்குக் கிடையாது. அவருக்குக் கீழே பணி புரியும் நம்பிக்கையான கண்காணிப்பாளர்களைக் கொண்டு சில பணிகளை நிறைவேற்றலாம். ஒரு புதிய முயற்சி செய்திருக்கிறார் முதல்வர். கொஞ்சம் பொறுத்துத் தான் பார்ப்போம்" என்கிறார்கள் அவர்கள்.

பல கோயில்களின் அலுவலகங்கள் கோயிலுக்கு வெளியிலும், தெருவிலிருந்து செல்வது போலவும் அமைக்கப்பட்டிருப்பதால் அதிகாரிகளால் கோயிலுக்குத் தீட்டு ஏற்பட வாய்ப்பு இல்லை என்கிறார்கள் ஊழியர்கள்.

1959ம் ஆண்டு, பெண்களும் ஆலய நிர்வாக அதிகாரிகளாக நியமனம் பெற சட்டத்தில் வழிவகை செய்யப்பட்டது. ஆனால் வழக்குப் போடப்பட்டதன் காரணமாக 1970ம் ஆண்டு அந்த வாய்ப்பு பறிக்கப்பட்டது. இப்போது மீண்டும் சட்டம் திருத்தப்பட்டு, பெண்களுக்கு எல்லா துறைகளிலும் கொடுக்கப்பட்டிருப்பது போல உரிய இடம் கொடுக்கப்பட்டதாகச் சொல்கிறார்கள் அறநிலையத் துறை அதிகாரிகள். யாரும் இது பற்றி வெளிப்படையாகப் பேசத் தயங்குகிறார்கள்.

"இதுவரை முஸ்லிம் வக்ப் போர்டு தலைவராகப் பெண்கள் நியமிக்கப்படவில்லை. ஆனால் முதல்வர் ஒரு பெண்மணியை நியமித்திருக்கிறார். முஸ்லிம் பழக்க வழக்கப்படி மசூதிக்குள் பெண்களுக்கு அனுமதி கிடையாது. எனவே வக்ப் போர்டு நியமனத்துக்கு எதிர்ப்பு இருந்தது. இப்போது நிலை மாறி வருகிறது. அது போலவே கோயில் நிர்வாக அதிகாரிகளாகப் பெண்களை நியமிப்பதற்கு இருக்கும் எதிர்ப்பும் காலப்போக்கில் கரைந்து விடும்" என்கிறார்கள் அதிகாரிகள்.

**தலம்தோறும் தமிழ்க் கடவுள்**
**அடுத்த வாரம்**

"ஆணென்ன, பெண்ணென்ன, கோயிலில் பணிபுரியும் அதிகாரிகள் ஆத்திகர்களாக இருக்க வேண்டும் என்பதுதான் முதல் தகுதி. அதற்கு எந்த பாதிப்பும் இல்லாமல் இருந்தால் சரி. கோயிலுக்குள் நுழைவதில் உள்ள பழக்க வழக்கங்களை அவரவர் மனசாட்சிப்படி கடைபிடிக்க வேண்டும். ஆலய பெண் அதிகாரிகளும் மனச்சாட்சியுடன் செயல்பட்டு, கோயில்களில் பவித்திரத்தைப் பாதுகாப்பார்கள் என்று நம்புவோம். பொதுவாகவே கோயில்களில் வருடத்துக்கொருமுறை "பவித்ரோத்சவம்" என்ற அனுஷ்டானத்தை நடத்தி, கோயிலைப் புனிதப்படுத்துவதுண்டு. எனவே முதல்வரின் துணிச்சலைப் பாராட்டி, இப்போதே லென்ஸ் போட்டுப் பார்க்காமல் பொறுத்திருந்து பார்ப்போம்" என்கிறார் மதுராந்தகம் ஏரிகாத்த ராமன் கோயில் முதல் தீர்த்தக்காரரான ராகவசிம்ஹன்.

"பெண்கள் நிர்வாக அதிகாரிகளாக வந்து விட்டால் தங்களால் கொள்ளையடிக்க முடியாதே" என்று சங்கடப்படும் சில ஆணாதிக்க சக்திகளால் கிளப்பிவிடப்படும் பிரச்னை இது" என்கிறார் சமூக சேவகர் ராணி கிருஷ்ணன். மயிலாப்பூர் பகுதி கவுன்சிலராக இருந்தபோது கபாலீஸ்வரர் கோயிலில் நடைபெற்ற சில ஊழல்களை எதிர்த்துப் போராடியவர் இவர். "பெண்கள் மனச்சாட்சியுடன் செயல்படுவார்கள். கோயிலுக்கு வருபவர்கள் பெரும்பாலும் பெண்களே. அவர்களது தேவைகளைக் கவனிக்க பெண் அதிகாரிகளை நியமிப்பது தான் சரி. இயற்கையாக அவர்களுக்கு ஏற்படும் பிரச்னையைப் பணி புரிவதில் உள்ள தடையாகச் சுட்டிக் காண்பிப்பது கடைந்தெடுத்த பிற்போக்குத்தனம்" என்கிறார் அவர்.

இறுதியாக அறநிலையத்துறை அமைச்சர் பி.சி. ராமசாமியைச் சந்தித்தோம். முதல்வர் அனுமதியின்றி இந்த விவகாரத்தில் தாம் எதுவும் பேச முடியாதென்று ஒதுங்கிக் கொண்டார் அமைச்சர். இப்படிப்பட்ட சர்ச்சைகளுக்கிடையில் மேலும் மூன்று கோயில்களுக்குப் பெண்களை நிர்வாக அதிகாரிகளாகப் போட ஆணை பிறப்பிக்கப்பட்டிருப்பதாக அறநிலையத்துறை வட்டாரம் சொல்கிறது.

— ஸ்ரீநிவாசன்

படங்கள் : ராஜன்

# கல்கி




**VBC Jewellery**

*House of Vummidi*

• 78, G.N.Chetty Road, **Vani Mahal Circle**, (Opp. Hotel Residency), T.Nagar, Chennai - 600 017. ✆ : 8229556, 8229560

• 11-B, Nageswara Rao Road, **Panagal Park**, T.Nagar, Chennai - 600 017. ✆ : 4342407, 4346297

இணைந்து வழங்கும்

## புன்னகைப் போட்டி; பொன்நகைப் பரிசு!

### பல்லவி எழுதுங்க!

கங்கை நதி, வைகைநதி... பெண்தானம்மா!

— இந்த வாரம் போட்டி என்னான்னு புரிஞ்சிருக்குமே!

ஆமாம்! டீ.வி.சீரியல் டைட்டில் ஸாங் பல்லவி எழுதணும் நீங்க.

ஹீரோயினைப் பத்தி எட்டுக் கட்டை சுருதியில் பெண் குரல் பாடக்கூடிய பல்லவியா இருக்கணும். சும்மா இரண்டு வரி போதும். ஆனா ஒரே ஒரு கண்டிஷன்... மெகா சீரியல் 'மூடு'ல அழ வைக்காம அழுமூஞ்சி ஹீரோயின்களைப் பார்த்து சிரிக்க வைக்கணும் உங்க பல்லவி! என்ன, ரெடியா? பேனாவில் நையாண்டி பிரான்ட் இங்க் அல்லது ரீஃபில் போட்டுக் கிட்டுப் பேப்பரை எடுங்க பார்க்கலாம்.

தலைசிறந்த இரண்டு பல்லவிகளுக்குத் தலா நாலு கிராம் தங்கம். ஆசிரியர் தீர்ப்பே இறுதி.

புன்னகைப் போட்டி - 18

என்று குறிப்பிட்டு உங்கள் தமாஷ் பல்லவியை எழுதி, முகவரியைக் குறிப்பிடுங்கள். தபால் உறை அல்லது தபால் கார்டில், கீழே உள்ள கூப்பனை வெட்டி ஒட்டி அனுப்புங்கள்.

கடைசி தேதி : **24.6.2002**



ஆசிரியர், கல்கி,
47, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல்,
சென்னை - 600 097.

# ஆட்கொண்ட சாத்தான்!



விமான விபத்தில் இறந்து போனவர் குரோனியே. இந்த விபத்து போலவேதான் அமைந்துவிட்டது அவரது வாழ்க்கையும்.

ஒன்றா இரண்டா, ஏகப்பட்டப் பெருமைகள கொண்டவர் இந்தத் தென் ஆப்பிரிக்கக் கிரிக்கெட் வீரர். இப்போது வாழும் வேறெந்த கேப்டனையும்விட ஒரு நாள் கிரிக்கெட் பந்தயங்களில் இவர் அதிக சாதனை படைத்தவர். சொல்லப் போனால் 1991 ஏப்ரல் மாதத்தில் இவர் சர்வதேசப் போட்டிகளில் முதன்முறையாகக் கலந்து கொண்டபோதே விரைவில் அணித் தலைவராவார் என்று ஆருடம் கூறினார்கள் பல விளையாட்டு விமர்சகர்கள்.

ஆனால் குரோனியேவை உலகம் நினைவில் கொள்ளப் போவது இந்தச் சிறப்புகளுக்காக அல்ல. அவரது வாழ்வின் இறுதிக் கட்டத்தில் அவர்மீது பதிந்த ஆழமான கரும்புள்ளிதான் அவரது அடையாளக்குறி!

அந்தக் கரும்புள்ளியை உலகறியச் செய்தது இந்தியாதான். பெட்டிங் ஊழலில் குரோனியே சிக்கிக் கொண்டதற்கான ஆதாரம் தங்களிடம் இருப்பதாக இந்திய அதிகாரிகள் கூறியபோது அதை அடியோடு மறுத்தார் குரோனியே.

ஆனால் தப்ப முடியாத வளையத்துக்குள் தாம் சிக்கிக் கொண்டிருக்கிறோம் என்பதை உணர்ந்த பிறகு தமது குற்றங்களில் சிலவற்றை வெளிப்படையாக ஒத்துக் கொண்டார் குரோனியே. முதலில் தென்னாப்பிரிக்க கிரிக்கெட் வாரியமும் பிறகு சர்வதேச கிரிக்கெட் கூட்டமைப்பும் ஆயுள் முழுதும் அவர் கிரிக்கெட் ஆடுவதற்குத் தடை விதித்தன. (ஒரு பிரபல கிரிக்கெட் நடுவர் 'ஆயுட்காலத் தடை என்பது மிக அதிகம். பத்து வருடமாக அதைக் குறைத்துக் கொள்ளலாம்' என்றார். அவருக்கு அப்போது தெரிந்திருக்காது பத்து வருடங்களைவிட அவரது ஆயுள் குறைவானதென்று).

மதத்தில் தீவிர நம்பிக்கை கொண்டவர் குரோனியே. அவருக்கு நெருக்கமான பாதிரியார் ஒருவர் குரோனியேவின் மென்மையான மறுபக்கத்தைச் சமீபத்தில் உலகறியச் செய்திருக்கிறார். கூப்பிட்டபோதெல்லாம் அனாதை இல்லங்களுக்கும் பள்ளிக் கூடங்களுக்கும் கூடவே வந்து அங்குள்ள சிறுவர்களைப் பல விதங்களில் உற்சாகப்படுத்தியிருக்கிறாராம் குரோனியே.

குரோனியேவே, "ஒரு தூய கிறித்துவனாகத்தான் வாழ முயற்சித்தேன். ஆனால் சாத்தான் என்னை ஆட்கொள்வதற்கு ஏனோ இசைந்து கொடுத்தேன். அதன் பலனை அனுபவிக்கிறேன்" என்ற பிறகு, நாமென்ன சொல்ல?

— ஜி.எஸ்.எஸ்.

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telepnones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 330/-; Overseas : Rs. 2000/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 165/-; Overseas : Rs. 1000/- (Air Mail)

செல்வி க.இரா. **சீதாலக்ஷ்மி**, சென்னை, அண்ணா நகர் கலா சாகராவில் பரத நாட்டியம் பயிலும் மாணவி. அவர் கடந்த மே மாதம் 18ம் தேதி பாண்டிச்சேரி, கம்பன் கலை அரங்கத்தில் புதுவை கலைமாமணி திருமதி ஜெயஸ்ரீ நாராயணன் அவர்கள் தலைமையில் பரத நாட்டிய நிகழ்ச்சி வழங்கினாள்.

கலாசாகராவின் இயக்குநரும் சீதாலக்ஷ்மி யின் குருவுமான **திருமதி மாலதி தோத்தாத்ரி** அவர்களின் நட்டுவாங்கமும் **செல்வி சுதர்சனா தோத்தாத்ரி** அவர்களின் பாடலும் சீதாலக்ஷ்மி யின் தேர்ந்த நாட்டியத்திற்கு மெருகு ஊட்டியது.

'சீதாலக்ஷ்மியின் உயிரோட்டமான பாவ மும், அடவுகளும், தீர்மானங்களும் ஒரு 14 வயது சிறுமியைப் போல இல்லாமல் ஒரு தேர்ந்த கலைஞரின் முதிர்ச்சியையும், தன்னம் பிக்கையையும் காட்டுகின்றது' என்று தலைமை உரையில் **திருமதி ஜெயஸ்ரீ நாராயணன்** அவர்கள் பாராட்டுரை வழங் கினார்.



இத்தனை பெரு மையும், முழுமையான நுணுக்கமான கவனத் துடன் பயிற்சி அளித்த அவளது குருவுக்கே உரித்ததாகும்.

நீ இந்த மாயம் வர் ணத்திலும், சரவண பவ பதத்திலும் கண் களும் முகமும் கவிதை பாடின என் றால் அது மிகை யாகாது. **செல்வி சுதர்சனாவின்** பாவத் தோடு கூடிய ரம்ய மான பாட்டை அனை வரும் ஒரு மனதாக பாராட்டினர்.

அடுத்து மே 25ம் தேதி கல்கத்தாவில் புகழ்வாய்ந்த ரசிக ரஞ்சனி சபாவில் அவளது நடன நிகழ்ச்சி நடந்தது. 'ஜெய ஜானகி ரமணா' என்று முதல் பாட்டிலேயே தியாகராஜா ஹால் களை கட்டியது.

தொடர்ந்து வந்த ''மோகமான என் மீதில்'' என்ற வர்ணத்தில் குருவின் கவனிப்பும் சீதாலக்ஷ்மியின் ஆர்வமும் பயிற்சியும் சேர்ந்து மிகவும் கலபமாக நடனமாடுவது போன்ற தேர்ச்சியை காட்டியது.

'முரளிதரா' என்ற பதத்தில் கண்ணனின் குறும்பு கண்களில் கொப்பளித்தது. 'அதுவும் சொல்வாள்' என்ற பதத்தில் செல்லமான கோபம் வெளிப்பட்டது.

நிகழ்ச்சியை நிறைவு செய்ய வந்த மீரா பஜனில் **திருமதி சரயூசீனிவாசன்** அவர் களின் பாடலும் பாவம் நிறைந்த ஆடலும் சேர்ந்து காண வந்தவர்களின் கண்களையும் நெஞ்சையும் பக்தியில் நிறைத்தது.

26ம் தேதி குருவாயூரப்பன் கோவில் கல்கத்தாவில் நடைபெற்ற நடன நிகழ்ச்சி 'கஜானனம்' என்ற விநாயகர் துதியில் கம்பீர மாக துவங்கி தேவியின் துணையை கூட்டிக் கொண்டு 'பாவயாமி ரகுராமம்' என்ற பாடலில் ராமனையும், சீதையையும், அநுமனையும் கண் முன்னே அழைத்து வந்தாள்.

அடுத்து அவள் மனமுருகி அழைத்தது கந்தனை. பின்னர் வந்த குருவாயூரப்பன் தாலாட்டு கோவிலில் இருந்த அனைவரது ஏகோபித்த பாராட்டுதலைப் பெற்றது.

குருவின் ஆசியுடனும் கடவுளின் திரு வருளாலும் செல்வி சீதாலக்ஷ்மி இன்னமும் பல அவை நிறைந்த நிகழ்ச்சிகளையும் கண்டோர் கண்ணும் மனமும் உருகும்படி தர எல்லாம் வல்ல இறைவன் அருள்வானாக.

எல்லா நிகழ்ச்சிகளுக்கும் முத்தாய்ப்பாக மிருதங்கம் வாசித்த **திரு.பத்மநாபன்**, வீணை வாசித்த **திருமதி** ராதா வெங்கடேஸ்வரன், புல்லாங்குழல் வாசித்த **திருமதி பாக்யலக்ஷ்மி** அவர்களும் இந்த நடன நிகழ்ச்சிகளுக்கு பக்க பலமாக இருந்து நாட்டியத்திற்கு மெருகு ஏற்றினார்கள்.

அவைக்கு பின்னால் இருந்து செல்வி சீதாலக்ஷ்மியின் அழகுக்கு அழகூட்டிய **திரு. ஆர்.கே.மணி** அவர்களது கைவண்ணம் என்றும் நினைவு கூறத்தக்கது.



எத்தனை பொடி வந்தாலும் சாம்பாரோ, ரசமோ, அம்மில வச்சி அரைச்சி விட்டாத்தான் நன்னா இருக்கும். இங்க அரைக்கறது இல்ல.. இடிக்கிறது இல்ல.. எதுக்கெடுத்தாலும் மசால் பொடிங்கறா.

என்ன இது நல்ல வாசனை வருது!



இது மாமிஸ் சாம்பார் பொடில பண்ணின சாம்பார்.
இது மாமிஸ் ரசப் பொடில பண்ணின ரசம்.



உம்... உண்மைய ஒத்துக்கணும் மாமிஸ் மசாலா மணமும் ருசியும் என் கைப் பக்குவத்தைவிட நன்னாவே இருக்கு.







மாமிஸ் சாம்பார் ரசப் பொடி

பாட்டியின் பாரம்பர்யம் இப்ப பாக்கெட்டில்,
மாமிஸ் மசாலா.....

## மாமி புட்ஸ் (பி) லிட்.,

H.O : (New No)164, புல்லலக்கோட்டை ரோடு,
விருதுநகர் 626 001.
Ph. : (04562) 367838, 343601 Fax: 344168
B.O : 2/1 சக்கரபாணி தெரு, மேற்கு மாம்பலம்,
ரயில்வே லைன் அருகில், சென்னை 33.
Ph. : (044) 4724500, E-mail:mail@maamis.com.
Visit : www.maamis.com

# மாமிஸ் மசாலா

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN/Chief PMG-141/2002